# மதுரகவி

# மன்றாடு கவிதைகள்



# மதுரகவி
# முன்னூறு கவிதைகள்

பதிப்பாசிரியர்
இரா. கோவிந்தராஜன்

வேதா பப்ளிகேஷன்ஸ்
8, நரசிம்மபுரம், மயிலாப்பூர்,
சென்னை-600 004.

ம.மு-1 விலை ரூ. 40-00.

Title : MADURAKAVI
MUNNORU KAVITHAIGAL

Author : Madurakavi Srinivasa Iyengar

Language : Tamil

Edition : Ist Edition 1995-1996.

Editor : Sri R. Govindarajan

Commentator : Sri Kamban



Size : Demi Size

Pages : 184, 16 = 200 Pages or 12½ Forms

Blocks used : Double Colour blocks used
Both Back & Front
With Laminated Wrapper

Printer : Rajiv Fine Art Printers,
6, Gangadeeswarar Koil Street,
Purasaiwakkam, Madras-84.

Copies can be had :

M/s. VETHA PUBLICATIONS
8, Narasimhapuram
Mylapore
Madras-600 004

Price : Rs. 40-00 Postage Extra

# பதிப்புரை

வெருவும் ஆலமும் பிறையும்வெம் விடையவர்க்கு ஈந்து
தருவும் வேருள தகைமையும் சதமகற்கு அருளி
மருவும் பல்பெரு வளங்களும் வேறுற வழங்கி
தருவும் ஆரமும் அணிந்தனன் சீதரமூர்த்தி, —கம்பர்

மதுரகவி ஸ்ரீநிவாச அய்யங்கார் சுவாமிகள் இலட்சத்திற்கும் அதிகமான கவிதைகளை யாத்துக் கொட்டி உள்ளார். அன்பர்கள் கேட்ட வண்ணம் கவிதைகளை யாத்துத் தனக்கெனப் பிரதிகள் வைத்துக் கொள்ளாமல் கேட்டவர்களிடமே விட்டுச் செல்லும் மரபை இவர் கைக்கொண்டு இருந்தார். இதனால் இவர் இயற்றிய கவிதைகள் பலவற்றிற்கும் பிரதிகள் இவரிடம் இல்லாமல் போனது. இவருடைய கவிதைகள் பெரும்பாலும் இன்று வரை கிடைக்கவில்லை. நரகவி பாடிடாமல் நாராயணன் புகழையே பாடி வந்தவர் இவர்.

நரகவி பாடிடாத இந்த வரகவியின் நூல்கள் 1. நரசிங்க பெருமாள் அந்தாதி, 2. திருமாலிருஞ்சோலை யமக அந்தாதி 3. திரிகூடல் திரிபு அந்தாதி ஆகிய மூன்று நூல்களும் ''மதுர கவி முந்நூறு கவிதைகள்'' என்ற தலைப்பில் வேதா பப்ளிகேஷன்ஸ் மூலம் இன்று வெளிவருகின்றன. நரசிங்கப்பெருமாள் அந்தாதி, ஏழுநாழிகையில் பாடியதாக அறிகின்றோம்; திரு. எம் கே. இராமன் என்ற கம்பன் இந்த நூலுக்கு இனிய, எளிய, அரிய உரையை அளித்துப் பெருமை செய்கின்றார்.

இந்த நூலுக்கு விரங்களும், குறிப்புக்களும் தந்து உதவிய, திருமதி ஜி. வேதவல்லி, திருமதி கே. லதா, திருவாளர்கள் கி இராஜகோபால் நாயுடு, ராஜு, சேது ஆகியவர்களுக்கும் நன்றி பல. மதுரகவியின் கவிதைகளுக்கு விளக்கமாக விளங்கிய கி. இராஜகோபால் நாயுடு சென்ற 20-8-95 தேவாரத்தில் மறைந்த செய்தி கேட்டு மிக்க வருந்தினோம். இந்த வள்ளலைப் பற்றி திருமதி வேதவல்லி எழுதிய கட்டுரை தனியாக இங்கு வருகின்றது,

இந்த நூலை அரிய முறையில் அச்சிட்டு வழங்கிய ராஜீவ்

பைன் ஆர்ட் பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு. ரங்கநாதன் அவர்களுக்கும், சிறந்தமுறையில் அச்சிட்டு வெளிக்கொணர்ந்த இராஜதுரை அவர்களுக்கும், ஏற்றம் மிகுந்த உதவிகள் பல புரிந்த ஏ, என். பாலகிருஷ்ணன் அவர்களுக்கும் நன்றி பல

மெய்ப்புத் தாள்களைத் திருத்தி அரிய ஆலோசனைகள் வழங்கிய திரு. ஆ. தசரதன் அவர்களுக்கும், முகப்புப் படம் வரைந்துதவிய சித்ரலேகாவிற்நம் நன்றி பல.

அருளாசி வழங்கிய சக்கரவர்த்திப் பெருமானுக்கும், ஆஞ்ச நேய பகவானுக்கும் ஆயிரமாயிரம் அஞ்சலிகள்.

இந்த நூலை அச்சிட்டு வெளிக்கொணர பொருளுதவி செய்த திருமலை - திருப்பதி தேவஸ்தானத்திற்கும், குறிப்பாக அதன் ஆசிரியர் குழுவிற்கும், குழு உறுப்பினர்களுக்கும், சிறப்பாக ஆணையாளர் அவர்களுக்கும், ஏனையோருக்கும் நன்றி பல.

வேதா பப்ளிகேஷன்ஸ் மூலம் இந்த நூலை வெளியிடுவதில் மிக்க பெருமை அடைகின்றோம்.

சென்னை.

இரா. கோவிந்தராஜன்

This book is published with the financial assistanca of Tirumala Tirupathi Devasthanam, Tirupathi A.P. under their scheme to aid in publishing religious books.

# தேவாரத்து வள்ளல்

## ஜி. வேதவல்லி

*தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்*
*தோன்றலிற் தோன்றாமை நன்று.*

தேவாரம் கி. இராஜகோபால்நாயுடு அவர்கள் ஒருபெரும் தேசபக்தர், கவிஞர், வள்ளல், பரோபகாரி. இவர் சென்ற 20-8-95 அன்று தேவாரத்தில் காலமான செய்தி கேட்டு மிக்க அதிர்ச்சி அடைந்தேன். தேவாரம் தந்த செல்வர்களில் இவர் தலைசிறந்தவர். பக்திக்கும், பைந்தமிழுக்கும் இந்தக் குடும்பத்தினர் ஒரு அணிகலமாக விளங்கினர். இவரது அண்ணன் கி. ரங்கசாமி நாயுடு ஒரு பரம வைதிகர். எப்போதும் நெற்றியில் பழுக்கத் தீட்டிய நாமத்துடன் துலங்குவார். அன்றாடம் துவைத்து அரளிப் பூவைப் போன்ற நிறத்துடன் கூடிய தூய கதராடையை எப்போதும் அணிந்திருப்பார். எப்பொழுதும் அரங்கா! அரங்கா! என்று கூறிக் கொண்டே இருப்பார். இவரது இளவல்தான் திரு. கி. ராஜகோபால் நாயுடு.

இந்த இருவரும் மதுரகவியின் கவிதைகளில் உள்ளத்தைப் பறிகொடுத்தவர்கள். எப்பொழுதும் மதுரகவியின் கவிதைகளைப் பற்றிப் பேசிக் கொண்டே இருப்பார்கள். மதுரகவியின் காலத்திலேயே அவர் இயற்றிய, கச்சிப் பதிகம், திருவரங்கப் பதிகம், இராமாயண விருத்தம், ஸ்ரீனிவாசன் துதி போன்றவற்றை (1924ம் ஆண்டு) கி. ரங்கசாமி நாயுடு வெளியிட்டுப் பெருமை சேய்தார். அடுத்த ஆண்டே மதுரகவி இயற்றிய ''திருமலைச் சிந்து'' என்ற ஒரு அரிய நூலையும் (1925ம் ஆண்டு) வெளியிட்டார். மதுரகவிக்கும் இந்தக் குடும்பத்தினருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. மதுரையில் ஒரு அச்சகம் வைத்து மதுரகவி நூல்களை அச்சிட வேண்டும் என்று கி. ராஜகோபால் நாயுடு அவர்கள் கூறிக்கொண்டே இருப்பார். நானும் என் கணவரும் அண்மைக் காலத்தில் மதுரகவி இயற்றிய பல்வேறு நூல்களைத் தேடிப் பிடித்து வெளியிடுவதைக் கண்டு மிகவும் பெருமை கொண்டார். எங்களுக்கு

உற்சாகமும் ஊக்கமும் தந்தார். அடிக்கடி சென்னைக்கு வந்து என் வீட்டில் தங்கி இரவு முழுவதும் (தூங்காமல்) மதுரகவியின் பெருமைகளையும் அவர் இயற்றிய கவிதைகளின் அருமைகளையும் பேசிக் கொண்டே இருப்பார். தேவாரத்து அரங்கன் மீது மதுரகவி இயற்றிய 50 பாடல்களை தமது இரும்புப் பெட்டியில் 60 ஆண்டுக் காலம் பூட்டி வைத்திருந்தார். சென்ற ஆண்டு அந்தக் கவிதைகளை எங்கள் மீது பரிபூரண நம்பிக்கை வைத்து வெளியிடத் தந்தார். அவை 'தேவாரப் பிரபந்தங்கள்' என்ற பெயரில் வெளிவந்து, அரங்கநாதர் ஆலயத்தில் அரங்கேறியது.

அரங்கனிடம் அளவிலாப் பக்திகொண்ட இராஜ கோபால நாயுடு மதுரையில் ரெங்க விலாஸ் என்ற பெயரில் பழக் கடை நடத்தினார்; ரெங்க விலாஸ் என்ற பெயரில் ஒரு லாரியும் ஓடியது. தேவாரத்தில் ரெங்க விலாஸ் என்ற பெயரில் ஒரு அரிசி மில்லையும் பல காலம் ஓட்டினார். இவர் ஏலக்காய் விளையும் பல ஏக்கர் நிலப் பரப்பிற்குச் சொந்தக்காரர். தேவார மலையில் இருந்த இந்த எஸ்டேட்டுக்கும் ரெங்க விலாஸ் என்ற பெயரையும் சூட்டினார். இவை தவிர பல சொத்துக்களும் இவரிடம் இருந்தன. இத்தனை செல்வங்களையும் சீரையும் செல்வாக்கையும் சிறப்பையும் பெற்ற இவர், வந்தவர்களுக்கு வாரி வழங்கும் வள்ளலாக இருந்தார். மகாத்மா காந்தியின் வழியைப் பின்பற்றித் தூய கதராடை அணிந்து இறுதி வரை ஒரு தூய தேசியவாதியாகத் துலங்கினார்.

தேசபக்தர்களுக்கும் குறிப்பாக பாரதி நாராயணசுவாமி செட்டியாருக்குப் பல வழிகளிலும் உதவி செய்து. அவரது சுதந்திரப் போராட்டத்திற்கு உறுதுணையாக நின்றார், காந்தியடிகளைத் தேவாரத்திற்கு அழைத்து வந்ததில் இவருக்கும் பெரும் பங்குண்டு. ஏழை எளிய மாணவர்களுக்குப் படிப்பதற்கும் தக்க பண உதவியும் செய்து வந்தார்.

கம்பம் பள்ளத்தாக்கில் ஒவ்வொரு ஊரிலும் ஒரு சிவன் கோவிலும், ஒரு பெருமாள் கோவிலும் உண்டு. வைணவ ஆலயங்களில் வழிபாடு செய்ய இந்தப் பகுதி மக்கள் பல பட்டமார்களை ஸ்ரீவில்லிபுத்தூர் பக்கத்தில் இருந்து அழைத்து வந்து குடியேறச் செய்தனர். பல நூறு ஆண்டுகளுக்கு முன் குடியேறிய குடும்பங்களில் அனும்ந்தன்பட்டியும், தேவாரமும் முன் நின்றன. இந்த இரண்டு ஊர்களிலும்

**விளக்கம்**

சந்நியாசியென்றால் அக்னி ஹோத்திரத்தை விட்டவனும், காஷாயம் அணிந்தவனும் மட்டுமேயென்று சிலர் எண்ணுவர். இன்னும் சிலர் யோகியென்றால் கர்மாக்களை அனைத்தையும் விடுத்துத் தனிமையில் மலைக்குகை ஏதேனுமொன்றில் இருப்பவன் என்றும் எண்ணுவர். ஆயின் இவையனைத்தும் வெளிச் சின்னங்களே. இவை மட்டுமே இருந்துவிட்டால், சந்நியாசியோ, யோகியோ ஆகார். உள்ளே வாசனைகள் நசித்துப் போதல் வேண்டும். பற்று (Attachment) நீங்குதல் வேண்டும். பலனைக் கருதுதல் கூடாது. வெளியில் மட்டுமின்றி மாற்றம் உட்புறத்தும் நிகழவேண்டும். அப்போதே அவர்கள் சந்நியாசியென்றோ, யோகி என்றோ சொல்லத்தகுந்தவர் ஆவார் என்று பகவான் இங்கு நன்கு உபதேசிக்கிறார்.

செய்யத் தகுந்த கர்மாக்களையே செய்தல், அவற்றையும் பலனைக் கருதாது செய்தல், சந்நியாசி, யோகி இவர்களின் இலட்சணம் என்கிறார். எனவே கர்மாக்களை முழுமையாகச் செய்யாமல் சோம்பி, தவத்தில் ஈடுபட்டு தனிமையில் வீணாகக் காலம் கடத்துவதோ, அல்லது காஷாயத்தை மட்டும் அணிந்து, அக்னி ஹோத்திரத்தை நிறுத்திவிட்டு, தேசமெங்கும் திரிவதோ செய்பவர் ஒருகாலும் சந்நியாசியோ, யோகியோ ஆகார் என்று இச்சுலோகம் மிகத் தெளிவாகக் கூறுகின்றது. சந்நியாசத்திற்கு சின்னம் கர்ம பலனைத் தியாகம் செய்வதேயாகும். பற்றற்ற தன்மையே யோகிக்கான அடையாளம். எனவே ஒருவன் உண்மையில் சந்நியாசியா அல்லவா என்று தெரிவதற்கு அவர்களது நடைமுறையைக் கண்டால் போதும். இங்கு இரண்டு விஷயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

*செய்யத் தகுந்த காரியங்களையே ('கார்யம் கர்ம') செய்தல்*

*அதனையும் பலனைக் கருதாது செய்தல்*

அதர்மக் காரியங்களை, சாஸ்திரங்களுக்கு எதிரான காரியங்களை, பாவகாரியங்களை எக்காலத்தும் செய்தல் தகாது. தர்மகாரியங்களையே, சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டவைகளையே, புண்ய காரியங்களையே செய்தல் வேண்டும். இதுவே மிக உன்னதமான நடைமுறை. அவ்வாறு நடந்து கொள்பவனே உண்மையான சந்நியாசி. அங்ஙனம் நடப்போன் கிருகஹஸ்தன் ஆயினும் சந்நியாசியேயாவான். சந்நியாசிகள் அடையும் நற்பலன்களை அவனும் அடைவான். சந்நியாசியாவதற்கு ஏதோவொரு குறிப்பிட்ட வர்க்கமோ,

இந்தப் பதினொரு பேரும் தேவாரத்தில் கோயில் கொண்டுள்ள அரங்கநாதருக்கு ஆராதனம் செய்தவர்கள். அனைவரும் அரிய பல கவிதை நூல்களை இயற்றியவர்கள், மதுர கவி வீரராகவ அய்யங்கார், திருவேங்கட தலபுராணம், காஞ்சி வரதராஜன் காதல் போன்ற நூல்களை இயற்றியவர். இந்தக் குடும்பத்தில் மதுரகவி ஸ்ரீநிவாச அய்யங்கார் பெண் எடுத்துப் பெண் கொடுத்தவர். ஸ்ரீநிவாசன் என்ற விலக்ஷணானந்த சுவாமிகள் தேவாரத்தில் தோன்றித் துறவு மார்க்கம் பூண்டவர். ஆயிரக்கணக்கான நூல்களை எழுதியவர். விடுதலை இயக்கத்திலும் பெரும் பங்கு கொண்டவர். இவர் வட ஆற்காடு மாவட்டத்தில் வேலூருக்கு அருகில் உள்ள 'மேல்மாயில் என்ற தலத்தில், கற்பக விநாயகர் ஆலயத்தில் சமாதி யோகம் கொண்டுள்ளார். இவர் எனது தாய்வழிப் பாட்டனார் ஆவார்.

இந்தப் பெருமைகளை எல்லாம் நானும் இராஜகோபால் நாயுடுவும் (சென்னைக்கு அவர் வரும்போது) பேசிக் கொண்டே இருப்போம். விலக்ஷணானந்த சுவாமிகளைத் "தேவாரத்தின் செல்வம்" என்று இவர் அழைப்பார். துறவு மார்க்கத்தில் விலக்ஷணானந்த சுவாமிகள் இருப்பதைப் பெருமையாகக் கருதுவார். விலக்ஷணானந்த சுவாமிகளை அன்புடன், 'அண்ணா' என்று அழைப்பார். விலக்ஷணானந்த சுவாமிகள் ஊர் ஊராகப் பயணம் செய்து ஆன்மீகத்தைப் பரப்பி வந்த ஒரு பரம யோகி. அங்கெல்லாம் சென்று அவருடைய புகழை அறிந்து இருக்கின்றார். அங்கு நடந்த அற்புதங்களையும், பெருமைகளையும் என்னிடம் பெருமையாக எடுத்துச் சொல்லுவார்.

"என்னுடைய அண்ணா, உண்மையிலேயே ஒரு அவதார புருஷர். வேதாந்தக் கருத்துக்களை மேடையில் எடுத்துச் சொல்ல இவரைத் தவிர வேறு யாருமில்லை. எத்தகைய கூட்டத்தையும் தன்னுடைய பேச்சுத் திறத்தினாலும், பாட்டுத் திறத்தினாலும் கவர்ந்துவிடும் ஆற்றலைப் பெற்றவர்" என்று கூறுவார். 'யோக வாசிஷ்டப் பாடம் இவரிடம் கேட்க வேண்டும்', என்று கூறுவார்.

விலக்ஷணானந்த சுவாமிகளின் விருந்தோம்பும் தன்மையை மிகவும் விளக்கமாக எடுத்துக் கூறுவார். ஒரு முறை சிதம்பரத்திற்கு ராஜகோபால்நாயுடு சென்று அங்கு அவருக்கு

நடந்த விருந்தோம்பலையும், இவர் மேல் அவர் காட்டிய அக்கரையையும், அன்பையும் எடுத்துச் சொன்னார். "எத்தனையோ துறவிகளைப் பார்த்திருக்கிறேன். எவரும் இத்தனை அக்கரை எடுத்து அன்பர்களுக்கு உதவியதில்லை" என்று கண்ணில் நீர் மல்கக் கூறுவார். சிதம்பரத்திற்குச் சென்று இருந்தபோது, சுவாமிகளைப் பார்க்க இவரை முதலில் அனுமதிக்கவில்லை, வெகுநேரம் காத்திருந்து, "புறப்படலாம்" என்று இவர் எண்ணிய சமயம், சுவாமிகளே வெளியே வந்து "இராஜகோபாலா! வா! வா!" என்று கூறி இரு கரம் நீட்டி அழைத்துச் சென்றார். உள்ளே அனுமதி தர மறுத்த அன்பரிடம் "இவர் யாரெனத் தெரியுமா? தேவாரத்துச் செம்மல்! என்னுயிர்த் தம்பி! எனது ஜென்ம பூமியில் இருந்து வந்திருக்கும் இவனை உள்ளே வர அனுமதிக்காதது மாபெரும் தவறு" என்றார்.

"நான் காத்திருந்தது வீண் போகவில்லை. அவருடைய அன்பையும் பாசத்தையும் நேசத்தையும் கண்டபோது, என்னை நானே சமாதானம் செய்து கொண்டேன். எனக்கு உணவளித்துத் தூங்குவதற்கு வேண்டிய சகல ஏற்பாடுகளையும் முன்னின்று கவனித்தார், அது மட்டுமல்ல, காலையில், இராஜகோபாலா! என்னைப் பார்த்துவிட்டு வெளியே செல்," என்று உத்தரவிட்டார்.

மறுநாள் காலை அவரிடம் செல்லலாம் என்று நான் எழுந்தபோது, "சுவாமிகள் கூப்பிடுகிறார்" என்று ஒரு ஆள் என்னையே தேடி வந்துவிட்டார். அவசர அவசரமாகப் பல் துலக்கி, காலைக் கடன்களை முடித்துவிட்டுச் சுவாமிகளின் முன் வணங்கி நின்றேன். என்னைப் பார்த்தவுடன், "பல் துலக்கினாயா! குளித்தாயா? பச்சைத் தண்ணீரில் குளித்தாயா? வெந்நீரில் குளித்தாயா?" என்று ஓர் அன்புத் தந்தையைப் போலக் கேட்டார். ஒரு முழு ரூபாயை என் முன் எடுத்து நீட்டி, "இதை எடுத்துக் கொண்டு வடக்கு ரத வீதியின் வடகோடிக்குச் செல். அங்கே பலகை மாட்டாத ஒரு சிற்றுண்டிச்சாலை இருக்கும். அங்கே இட்டிலி, மல்லிகைப் பூப்போல இருக்கும். கொத்சு கேட்டு வாங்கிச் சாப்பிடு. காப்பியும் கிடைக்கும்," என்று கூறி என்னை அனுப்பினார்.

மூன்று நாளில் திரும்ப இருந்த என்னைப் பத்து நாட்கள் தங்க வைத்து விட்டார், மதியம், இரவு உணவு தன்னுடன்

சாப்பிட வைத்து விட்டார். பல்வேறு விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே இருப்போம். எல்லோரிடமும் "என் தம்பி தேவாரத்தில் இருந்து என்னைப் பார்க்க வந்துள்ளான்," என்று அறிமுகம் செய்து வைத்தார். பத்து நாட்களும் பறந்து விட்டன. அனுதினமும் தில்லை நடராஜரையும் கோவிந்தராஜனையும் தரிசனம் செய்ய ஏற்பாடு செய்தார்.

நான் ஊருக்குப் புறப்படும் முன் கண்கலங்கி நின்றேன். "ஏன் கலங்கி நிற்கிறாய்? எப்பொழுது வேண்டுமானாலும் நீ வரலாம், போகலாம். சங்கோஜப்படாதே," என்று கூறி, நான் மதுரை செல்வதற்கு ரயில் டிக்கெட். ஒரு கவரில் பத்து ரூபாய் பணம், மற்றொரு கவரில் வேஷ்டி, துண்டு, பழங் களுடன் கொடுத்து அனுப்பினார். இந்தச் சிதம்பரச் சந் திப்பிற்குப் பிறகு, அண்ணாவை அடிக்கடி சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. இதற்குப் பிறகு இரண்டு முறை மதுரை வந்தார், அப்போது ஒரு நிமிட ரயிலடிச் சந்திப்பு தான். ஏன் வரவில்லை என்று கடிந்து கொள்வார். தித்திக் கும் சிதம்பரச் சந்திப்பு என் மனத்தின் முன்னால் நிற்கும்," என்று இந்தக் கதைகளைக் கூறிக் கொண்டே இருப்பார்.

சென்ற ஆண்டு நாராயணசாமி செட்டியார் நூற்றாண்டு விழாவைச் சிறப்பாக நடத்த வேண்டுமெனக் கேட்டுக் கொண்டு அடிக்கடி எங்களை வந்து சந்தித்தார். இந்த ஆண்டு ஜனவரி இறுதியில் நடத்த என் கணவர் விரும்ப வில்லை. ஆனால் இவரோ ஜனவரி இறுதியில் பிடிவாதமாக நடத்தினார். இதற்குக் காரணம் அப்போது புரியவில்லை. இப்பொழுதுதான் நன்கு தெரிகின்றது. தனது முடிவைக் கணக் கிட்டு வைத்திருந்தார் போலும்! எல்லோரும் வியக்கும் வண் ணம் நூற்றாண்டு விழா நடந்தது. 175 பிளாக்குகள் இந்த மலரை அழகு செய்கின்றன. இத்தகைய மலர் இது வரை வந்ததே இல்லை என்று கூறலாம். விழாவில் எனது கணவர் ராஜகோபால் நாயுடுவிற்குப் பொன்னாடைபோர்த்திப் பதக் கமும் வழங்கினார். இது போலவே பதக்கங்களும், பொன் னாடைகளும், ஜமீன்தார் கே. எஸ். தங்கபாண்டியன், விழாத் தலைவர் சக்திவடிவேல் கவுண்டர், செயலாளர் இராமதாஸ், வி. தில்லைநாயகம். டாக்டர் ஆ. தசரதன் போன்றவர்களுக் கும் வழங்கினார். ஆயிரத்திற்கும் அதிகமான தியாகிகளுக்குப் பொன்னாடையும் அரிய உணவும் வழங்கப்பட்டன.

தேவாரப் பிரபந்தத்தில் விலக்ஷணானந்த சுவாமிகள்

இயற்றிய இராமாயணமும் மற்ற செய்திகளும் இவர் விரும்பிய வண்ணம் இடம் பெற்றன. எங்கள் வீட்டில் நடந்த அத்தனை திருமணங்களுச்கும் ராஜகோபால்நாயுடு வரத் தவறியதில்லை. எனக்கு 1947ம் ஆண்டு மதுரையில் உள்ள பெருமாள் கோயிலில உள்ள ஆண்டாள் சந்நிதியில் திருமணம் நடந்தது. இந்தத் திருமணத்திற்கு இவர் தனது குடும்பத்துடன் வந்திருந்தார். கூட்டம் எதிர்பார்த்ததை விட அதிகமாக இருந்தது. எப்படி இத்தனை பேருக்கும் சாப்பாடு போடுவது என்று மடைப்பள்ளியில் உள்ளவர்கள் திகைத்து நின்றனர். மதுரை அத்தான் கே. ஸ்ரீனிவாஸன் இந்த விவரத்தை ராஜகோபால் நாயுடுவிடம் எடுத்துச் சொன்னார். இதைக் கேட்ட ராஜகோபால் நாயுடு கோவில் மணியத்தைக் கூப்பிட்டு ஏதோ செய்தி சொன்னார் ஒரு மணி நேரத்திற்குள் மடைப்பள்ளிக்கு அத்தனை பண்டங்களும் வந்து சேர்ந்தன. திருமணத்திற்கு வந்திருந்த அனைவரும் பெருமாள் பிரசாதமாக அறுசுவை உணவு உண்டு மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

இது போலவே எனது அண்ணா பெண் அலமேலுவிற்கு அனுமந்தன்பட்டியில் திருமணம் நடந்தது. பாரதி நாராயணசாமி செட்டியார் எம்.பி.யுடன் திருமணத்திற்கு வந்து சிறப்புக்களைச் செய்தார்.

என்னுடைய மாமா விஜயராகவ அய்யங்கார் அவர்கள் தேவாரத்திலுள்ள தனது வீட்டை விற்றுப் பணத்தைக் கையில் வைத்துக் கொண்டு இருந்தார். அவருடைய மில்லில் இவர் வேலை பார்த்து வந்தார். ராஜகோபால் நாயுடு இவருக்கு முழுச் சுதந்திரம் கொடுத்திருந்தார். ராஜகோபால நாயுடுவிற்குத் திடீரெனப் பணமுடை ஏற்பட்டது தனது பெண்ணின் கல்யாணத்திற்கு வைத்திருந்த பணத்தை முன் பின் யோசிக்காமல், ராஜகோபால் நாயுடுவிடம் அவர் தந்து விட்டார். ''பெண்ணின் கல்யாணம் எப்படி நடக்கும்'' என்று எல்லோரும் கவலைப்பட்டார்கள். பணத்தைக் கொடுக்கும்படி எல்லோரும் இவரிடம் சொன்னார்கள். ''ஆண்டாள் கல்யாணத்தை அரங்கன் பார்த்துக் கொள்வான்'' என்று கூறிவிட்டு வழக்கமான புன்னகையோடு இருந்தார். எதிர் பாராத விதமாக திடீரென ஆண்டாள் திருமணம் நிச்சயம் செய்யப்பட்டது. பணத்தைக் கேட்டுப் பலமுறை இவரிடம் ஆளை அனுப்பியும் பணம் வரவில்லை. கல்யாணத்திற்கு ஒரு

வாரம் முன்னால் ஒரு ஆள் மூலம் ஒரு கவர் விஜயராகவ அய்யங்காருக்கு வந்தது. அதைப் பிரித்துப் பார்த்தால் 2000 ரூபாய் கூடவே இருந்தது. ''ஆண்டாள் கல்யாணத்தை அமோகமாக அரங்கன் நடத்துவான்'' என்ற ஒரு சீட்டும் இருந்தது. கல்யாண நெருக்கடி இருந்த காரணத்தினால் அதிகப் பணத்தை விஜயராகவன் ஆள் மூலம் தேவாரத்திற்கு அனுப்பி வைத்தார். ''ஆண்டாள் கல்யாணத்திற்கு அரங்கன் அனுப்பிய பணத்தை, நான் எப்படி 'வாங்குவேன்,'' என்று வாங்க மறுத்துத் திருப்பி அனுப்பி விட்டார். திருமணத்திற்கு வந்து எல்லோரையும் போல ஆசி வழங்கிச் சென்றார். தான் அதிகம் தந்த பணத்தைப் பற்றி ஒரு வார்த்தை இது வரை இவர் யாரிடமும் சொல்லியதில்லை.

மதுரையில் எனது மகன் வெங்கட்ராமனுக்கும், சித்ரா விற்கும் 26-11-93ல் திருமணம் நடந்தது. இத்திருமண விழா விலும் கலந்து கொண்டு எங்களுக்கெல்லாம் பெரும் மகிழ்ச்சி யைத் தந்தார். அப்பொழுது நாங்கள் மதுரகவி இயற்றிய நூல்கள் வெளியிடுவது பற்றிப் பெருமையாகப் பேசினார். இதன் பிறகு அனுமந்தன்பட்டியிலும், தேவாரத்திலும் சந் தித்தேன். அப்போது தேவாரப் பிரபந்தங்கள் அடங்கிய கையேட்டை வழங்கினார். ''இது பொக்கிஷம்! பொக்கிஷம்! பத்திரம்'' என்றார்.

பாரதி நாராயணசாமி செட்டியாரின் நூற்றாண்டு விழா 28-1-95ல் தேவாரத்தில் மிகவும் சிறப்பாக நடந்தது. அரங்க நாதன் ஆலயத்தில் 27-1-95 அன்று மதுரகவி தேவாரப் பிரபந்தங்கள் அரங்கேறியது.

இவ்வாறு எங்கள் குடும்பத்தோடு பாசத்தோடும், நேசத் தோடும் ஒன்றிப் பழகிய ஒரு உத்தமர் 20-8-95 மறைந்தது எங்களுக்கு மட்டுமல்ல, ஆன்மீகத்திற்கும், தேசீயத்திற்கும், தமிழுக்கும், கவிதைக்கும், இலக்கியத்திற்கும் பெரும் இழப் பாகும். அன்னாரின் புகழ் அனவரதமும் நிலைத்து நிற்க அவர் ஆடி, பாடி, போற்றி, வாழ்த்தி, வணங்கி வந்த தேவா ரத்து அரங்கநாதர் பாத கமலங்களை வணங்கி, தேவாரத்து வள்ளலுக்கு அஞ்சலி செலுத்துவோமாக! தேவாரம் எனது தாய்வழி ஊராகும். சிறு வயதிலே அந்த ஊரிலே பல காலம் தங்கி இருந்தேன். விலக்ஷணானந்தர் எனது தாயின் தந்தை யாவார். ராஜகோபால நாயுடுவின் குடும்பத்துடன் நன்கு

பழகியிருக்கின்றேன். இவரது மறைவு ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை,

வெறுமை உறாத அன்புஎனும்நல்
 விலைதந்து அமுதப் பொருள்மேவி
சிறுமை உறாத இன்பநலம்
 சேர்தற்கு எளிதாய் இருத்தலினால்
மறுமை நெறிதேர்ந் தவரடையும்
 மணியாற் சிறந்த நினைநோக்கில்
நறுமை தருப்பா துகைஅரங்கர்
 நல்லா வணம்போல் இருந்தனையால். —மதுரகவி

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

தேவாரம் வாழ்க !

ராஜகேபோல் நாயுடு புகழ் ஓங்குக !

அவர் வளர்த்த தமிழ் வாழ்க !



# The Cottager and his Wife

BHARATHI

'The Cottager and His Wife' is a short piece rich in the alliterative effects of a Tamil ballad. The story goes, it was suggested to the poet on a stormy night when he remembered an old house at Puducheri (Pondicl erry) in which he had lived for a time.

Wife :

The storm whirls,
The sea swirls,
Waken, my dear, waken !
Through window and door,
On our bed on the floor,
The lashing rain is shaken.

Cottager :

The sky leaps angry red.
Earth quivers in dread,
Unto the Mother we pray,
May her grace,
Save us apace,
From rhe tearing elements' play.

Wife :

But yesterday,
In yonder hut we lay,
Had we stayed there tonight,
What had been our fate ?
Death came, a storm of hate,
It was held by divine might.

Prof. A. S. RAGHAVAN
Kind Courtesy

# For These I Pray

BHARATHI

Speak, Mother!
Who will make a vina only to smother
Its tunefulness in the dust ?
Speak, Mother! Having made me first,
With mind effulgent,
Wilt Thou deny me strength to live for the great
world's betterment ?
Or am I sent,
Merely as a weary burden to the earth to be bent ?
For a body that leaps to obey the touch of the mind,
For a mind free of desires blind,
For a life that into the ever-new for ever burns,
And a heart that yearns
To sing Your praise e'en if fire the body maim,
And a will unshaken, wedded to its aim,
For these I pray.
Speak, Mother, grant them, what stands in the way ?

Prof. A. SRINIVASARAGAVAN
Kind Courtesy.



## புயற்காற்று

மனைவி : காற்றடிக்குது; கடல் குமுறுது
கண்ணை விழிப்பாய் நாயகனே !
தூற்றல் கதவு சாளர மெல்லாம்
தொளைத் தடிக்குது பள்ளியிலே.

கணவன் : வானம் சினந்தது வையம் நடுங்குது
வாழி பராசக்தி காத்திடவே !
தீனக் குழந்தைகள் துன்பப் படாதிங்கு
தேவி, அருள்செய்ய வேண்டு கின்றோம்.

மனைவி : நேற்றிருந்தோம் அந்த வீட்டினிலே, இந்த
நேரமிருந்தால் என்படுவோம் ?
காற்றென வந்தது கூற்றமிங்கே. நம்மைக்
காத்தது தெய்வ வலிமை யன்றோ !

—பாரதியார்

—○—

## நல்லதோர் வீணை செய்து !

நல்லதோர் வீணை செய்தே—அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ ?
சொல்லடி, சிவசக்தி—எனைச்
சுடர்மிகும் அறிவுடன் படைத்துவிட்டாய்.
வல்லமை தாராயோ—இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே !
சொல்லடி. சிவசக்தி !—நிலச்
சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ ?

விசையுறு பந்தினைப்போல்—உள்ளம்
வேண்டிய படிசெலும் உடல்கேட்டேன்
நசையறு மனங்கேட்டேன்—நித்தம்
நவமெனச் சுடர்தரும் உயிர்கேட்டேன்
தசையினை தீசுடினும்—சிவ
சக்தியைப் பாடும்நல் அகங்கேட்டேன்
அசைவறு மதிகேட்டேன்; இவை
அருள்வதில் உனக்கெதுந் தடையுளதோ ?

—பாரதியார்

# மதுரகவி
# நரசிங்கப்பெருமாள் அந்தாதி

காப்பு

**வாழி கருணைநெடு மாருதிதன் தண்ணருளால்**
**ஊழிக் குறைமுடிப்பான் ஓரேழு — நாழிக்குள்**
**கூறும்நர கோளரிதன் கோகனகத் தாட்டுதியை**
**தேறுநலம் ஊறஅருள் செய்.**

*வாழி - சிரஞ்ஜீவியாக வாழும்; கருணை நெடு - நீண்ட கிருபை உள்ள; மாருதி - ஆஞ்சநேயர்: தன் தண்ணருளால் - அவருடைய குளிர்ந்த அருளால்: ஊழிக் குறை முடிப்பான் - விதியால் நேர்ந்துள்ள குறைகளை நீக்கும் பொருட்டு; ஓர் ஏழு நாழிக்குள் - ஏழு நாழிகை என்ற நேரத்தினுள் (ஒரு நாழிகை 24 நிமிடம். எனவே ஏழு நாழிகை 168 நிமிடம். அதாவது 2 மணி 48 நிமிடம்); கூறும் - உலகினர் புகழ்ந்து சொல்லும்; நர கோளரி தன் - நரசிம்மமூர்த்தியின்; கோகனகத் தாள் துதியை - தாமரைத் திருவடிகளைப் பாடும் இத் தோத்திர நூலை; தேறு நலம் ஊற - பரிசுத்தமான நன்மை ஊறிப் பெருக; அருள்செய் - அருள் புரிக; மாருதி - விளி. மாருதி அருள் செய் என முடிக்க.*

**நந்தா திலங்கும் நரசிம்மன் தாள்துதியை**
**அந்தாதி யாக அறையவே — முந்தாதி**
**ஆக்குமறை நாலும் அளித்தருளும் அம்புயத்தோன்**
**வாக்குறையும் வாணிஅருள் வாள்.** 2

*நந்தாது - குறைவு படாமல்; இலங்கும் - விளங்கும்; நர சிம்மன் - நரசிங்கப் பெருமாளின்; தாள் துதியை - திருவடித் துதி நூலை; அந்தாதியாக - ஒரு பாடலின் அந்தம் அடுத்த பாடலின் ஆதியாக அமையும்படி; அறையவே - கூறுதற்கு;*

முந்து - முன்பு; ஆதி ஆக்கும் - மூலப் பரமன் அருளிய; மறை நாலும் - நான்கு வேதங்களும்; அளித்து அருளும் - உலகுக்குத் தந்தருளிய; அம்புயத்தோன் - மலரவனாம் பிரம்ம தேவனின் (வேதங்களைத் தந்தமையால் பிரமனுக்கு 'வேதா' என்ற பெயர் உண்டு); வாக்குறையும் - நாவில் வசிக்கும்; வாணி - சரசுவதி தேவி (பிரமன் நாவில் உள்ளதால் சரசுவதி நாமகள், நாமடந்தை எனப் பெயர் பெறுவாள்); அருள்வாள் - அருள் புரிவாள்.

**வெருக்கடியும் அன்பர் விளங்கும் பொழில்சூழ்**
**திருக்கடிகை அந்தாதி செப்ப — அருட்குருகை**
**வாசத்(து) அணிவகுள மாலைதிகழ் தோள்மாறன்**
**தாசர்க்(கு) அடியன்என்பேன் தாழ்ந்து. 3**

வெருக்கடியும் - அச்சம் அகற்றிய; அன்பர் - பக்தர்கள், தாசர்கள்; விளங்கும் - பொலியும்; பொழில்சூழ் - சோலைகள் சூழ்ந்துள்ள; திருக்கடிகை - அழகிய கடிகாசலத்து (திருக்கடிகை, ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்த நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளில் ஒன்றாகும், தொண்டை நாட்டைச் சார்ந்தது. தற்போது சோளிங்கபுரம் என அழைக்கப் பெறுவது); அந்தாதி - அந்தாதி மாலை என்ற நூலை; செப்ப - யாத்து உரைக்க; அருள் குருகை-அருள் மலியும் திருக்குருகையில்; வாசத்து அணி வகுள மாலை - அழகிய மணமுள்ள மகிழம்பூ ஆரம்; திகழ் தோள் - பொலியும் புயங்களுடைய; மாறன் - நம்மாழ்வாரின் (வகுளமாலை அணிந்தமையால் நம்மாழ்வார் வகுளாபரணன் எனப் பெயர் பெறுவார்); தாசர்க்கு - அடியார்களுக்கு; அடியன் என்பேன் தாழ்ந்து - தாசன் என்று தாழ்ந்து பணிவேன்.

## நூல்

**பூமாதும் செம்மலர்ப் பூமாதும் அன்பு பொருந்திஉற**
**நாமாது வாழ்நற் கடிகையில் வாழும் நரசிம்மனை**
**காமா துரத்துடன் கல்லாமை நீங்கக் கருதிநிதம்**
**ஆமா துரத்துடன் போற்றிடு வோம்வினை அற்றிடவே. 4**

பூமாதும் - பூமி தேவியும்; செம்மலர்ப் பூமாதும் - செந்தாமரையில் விளங்கும் இலக்குமியும்; அன்பு பொருந்தி - அன்பு சேர்ந்து; உற - விளங்க; நாமாது - நாமகள் சரசுவதி; வாழ் - வசிக்கும் (நிலமும், ஐசுவரியமும், கல்வியும் கூடிய) கடிகையில் வாழும் - திருக்கடிகைப் பதியில் கோயில் கொண்டுள்ள; நரசிம்மனை - நரசிங்கப் பெருமாளை; காம ஆதுரத்துடன் - விருப்பமுள்ள ஆசையுடன்; கல்லாமை நீங்க - அஞ்ஞானம் அழிய; கருதி - எண்ணி; நிதம் - நாள்தோறும்; ஆம்- ஆய; மாதுரத்துடன் - மிக இனிமையுடன் (மாதுர்யம்-மாதுரமாயிற்று); வினை அற்றிடவே - பாவங்கள் இல்லாது ஒழிந்து போகவே; போற்றிடுவோம் - துதித்து வணங்குவோம்.

அற்றிடும் பாதகம் எல்லாம் அழியும் அரிய(து)எலாம்
உற்றிடும் நல்லறி(வு) எல்லாம் உதிக்கும் உயர்தரங்கக்
கொற்றவன் ஆளரி நாதன்மெய் ஆனந்தக் கூத்தன்அடி
கற்றிடும் நற்றவம் உள்ளார்க்கு நாளும் கரிசறவே. 5

உயர் தரங்கக் கொற்றவன் - ஓங்கிய அலைசேர் திருப்பாற் கடல் தலைவன்; ஆளரி நாதன் - நரசிங்கப் பெருமாள்; மெய் ஆனந்தக் கூத்தன் - இன்பநடம் புரிபவன்; அடி - திருப்பாதங்களின் (சிறப்பை); கற்றிடும் - ஓதி உணரும்; நற்றவம் உள்ளார்க்கு - நல்ல தவசீலர்களுக்கு; நாளும்-என்றும்; கரிசு - குற்றங்கள்; அறவே அற்றிடும் - முற்றும் அழியும்; பாதகம் - துரோகம்; எல்லாம் - அனைத்தும்; அழியும் - நீங்கும்; அரியது எலாம் - அருமையானவை யாவும்; உற்றிடும் - அடையும்; நல் அறிவு எல்லாம் - நல்ல உணர்வு ஞானம் முற்றும்; உதிக்கும் - தோன்றும்.

அறுகால் விளங்கு முடியான் அரன்அயன் ஆதியர்கள்
அறுகால் இலங்கிடும் ஆதனத் தோய்என அன்புடனே
அறுகாலம் தீவினை எப்போ(து)என்(று) ஏத்தும்
அருட்கண்ணனே
அறுகால் எதிர்ந்து அருள்ஆளரி யேஎன ஆற்றுமினே. 6

அறுகால் - அறுகம் புல்லினால்; விளங்கு - அலங்கரிக்கப் பெற்ற; முடியான் - சடைமுடியுடையவனாம்; அரன் - சிவ

பெருமான்; அயன் ஆதியர்கள் - பிரமன் முதலிய தேவர்கள்; அறுகால் இலங்கிடும் ஆதனத்தோய் என - சேடசயன என்று; அறுகால் - கால் அற்ற; (பாம்புக்குக் கால் இல்லை.) அன்புடனே - பக்தியுடன்; தீவினை - பாவங்கள்; அறுகாலம் - அற்றிடும் நேரம்; எப்போது என்று - எக்காலத்தில் என; ஏத்தும் - துதித்து வணங்கும்; அருட்கண்ணனே - அருள் நோக்கினனே; அறுகால் எதிர்ந்து - அருகில் முன்வந்து (அருகு, எதுகை நோக்கி அறுகு ஆயிற்று); அருள் - அருள் செய்க; ஆளரியே என - நரசிங்கப் பெருமாளே என்று; ஆற்றுமின் - வழிபடுங்கள்; ஏ - அசை. இப்பாடல் யமகம்.

ஆற்றுமுப் பேதங்கள் எல்லாம் அழியும் அமரர்கணம்
சாற்றும் இன்பந்தனை எல்லாம் தவிரும் தரணியிடைக்
கூற்றுவ னார்கொளும் போதுஎன்செய் வீர்நர கோளரியை
ஏற்றுமின் இன்பங்கள் எல்லாம் அடைய இருந்தவரே. 7

இன்பங்கள் எல்லாம் - உளத்தில் மகிழ்ச்சி யாவும்; அடைய - சேர; இருந்தவரே - தோன்றி உள்ளவர்களே; ஆற்றும் - புரியும்; முப்பேதங்கள் எல்லாம் - சுகத பேதம், சுஜாதி பேதம், விசாதி பேதம் என்ற மூன்று வகை வேறுபாடுகள் யாவும்; அழியும் - நிலையறும்; அமரர் கணம் - தேவர் கூட்டங்கள்; சாற்றும் - கூறும்: இன்பந்தனை எல்லாம் - அழியும் இன்பங்கள் அனைத்தையும்; தவிரும் - விலக்குங்கள்; தரணியிடை - பூமியில்; கூற்றுவனார் - யமதருமன்; கொளும் போது - கொண்டு போகையில்; என் செய்வீர் - என்ன செயல் புரிவீர்; நரகோளரியை - நரசிங்கப் பெருமாளை; ஏற்றுமின் - போற்றித் தொழுங்கள்.

தவமே சிறந்த(து) எனக்காட்டில் நின்று தரம்அறியீர்
அவமே புரிந்து கெடுவீர் கடிகையில் ஆளும்அருட்
சிவமேய நல்நர கோளரி யாம்திருமால் பணிவோர்
பவமே ஒழிக்கும் பணிவீர் உமக்(கு)ஒரு பற்(று)இல்லையே. 8

தவமே சிறந்தது என - புண்ணியத் தோற்றம் நான்கில் ஒன்றாகிய தவசு மேம்பட்டது என்று; காட்டில் நின்று - கானகத்தில் இருந்து; தரம் அறியீர் - பயம் அறியாதவர்

களே: அவமே புரிந்து - வீணான செயல் ஆற்றி; கெடுவீர் - அழிபவர்களே; கடிகையில் - திருக்கடிகாசலத்தில்; ஆளும் - ஆட்சி புரியும்; அருள் சிவம் மேய - கருணை புரியும் மாட்சி பொருந்திய; நல் - நன்மை புரி; நரகோளரியாம் திருமால் - நரசிங்க வடிவனாம் அரியை; புணிவோர் - தாழ்ந்து வணங்குப வர்களின்; பவமே ஒழிக்கும் - பிறப்பையே நீக்கும்; (அத னால்) பணிவீர் - வணங்குவீர்; உமக்கு - உங்களுக்கு; ஒரு பற் றில்லையே - வேறு ஒரு ஆதாரமும் இல்லையாம்.

பற்றிலை ஞானம் பழுத்திலை வேதன் பரவரிய
முற்றுறும் வேதம் முதல்இதி காச முறைமைஎலாம்
கற்றிடும் பேரின்பம் உற்றிடல் என்கடி காநகர்வாழ்
நற்றவம் ஓங்கும் நரவா ளரிதனை நண்ணிடுமே. 9

பற்றிலை - பொருந்தியிருக்கவில்லை; ஞானம் - அறிவு; பழுத்திலை - முதிர்ச்சி பெறவில்லை; (ஞானம் மத்திம தீப மாகக் கொண்டு, ஞானம் பற்றிலை, ஞானம் பழுத்திலை எனக் கொள்க) வேதன் - பிரமன்; பரவரிய - போற்றுவதற்கு அருமையான; முற்று உறும் - முழுமையான; வேதம் முதல் - நான்மறைகளாதியாம்; இதிகாச முறைமை எலாம் - இராமா யணம், பாரதம், பாகவதம் போன்ற வரலாறுகள் யாவும்: கற்றிடும் - ஓதிடும்; பேரின்பம் - பெருவாழ்வு; உற் றிடல் என் - அடைவதாற் பயன் என்ன; கடிகா நகர்வாழ் - திருக்கடிகைப் பதியிலே கோயில் கொண்டுள்ள; நல்தவம் ஓங் கும் - நல்ல தவம் உயர்ந்த; நர ஆளரிதனை - நரசிங்கப் பெரு மாளை; நண்ணிடும் - சென்று அடைவீர்; ஏ - அசை.

நண்ணரும் பாவங்கள் எல்லாம் புரிந்து நமனிடையே
எண்ணரும் காலம் இருந்(து)உழல் வீர்கதி ஏறுதற்கு
பண்உறும் வண்டு படிசோலை சூழும் பளகில்அருட்
கண்ணமர் வண்ணக் கடிகையிற் சென்று கருதிடுமே. 10

நண்ணரும் - அடைதற்கு அருமையான; பாவங்கள் எல் லாம் - அனைத்துத் தீவினைகளும்; புரிந்து - செய்து; நம னிடையே - யமதர்மனிடம் (நரகில்); எண்ணரும் - அள வற்ற; காலம் - நாட்கள்; இருந்து உழல்வீர் - சேர்ந்து அலை

பவர்களே; கதி ஏறுதற்கு - கடைத்தேற; பண் உறும் - இசை உற்ற; வண்டு - தும்பிகள்; படிசோலை சூழும் - படிந்திருக்கும் பூம்பொழில் சுற்றி இருக்கும்; பளகு இல் - குற்றமற்ற; அருட்கண் - அருள் விழியினன்; அமர் - வீற்றிருக்கும்; வண்ண - அழகிய; கடிகையிற் சென்று - திருக்கடிகாசலம் போய்; கருதிடும் - நினைவீர்; ஏ - அசை.

**கருதிடும் வஞ்ச வினையாற் கலங்கிக் கருத்(து)அழித்தே**
**எரு(து)என ஓடித் திரிவீர் பவத்தொழில் என்(று)அறுமோ**
**மருதிடை ஊர்ந்தவன் சங்(கு)அங்கைஏந்தி வளங்கொள்திருக்**
**கருணைமெய்ஞ் ஞான நரகோ ளரிதனைக் கற்றிடுமே. 11**

கருதிடும் - மதித்திடுகின்ற; வஞ்ச வினையால் - துரோகச் செயல்களால்; கலங்கி - உழன்று (குழம்பி); கருத்து அழிந்தே- சிந்தை அழிந்து; எருதுஎன - (செக்கில் பூட்டிய) காளைகள் போல்; ஓடித் திரிவீர் - சுற்றி அலைபவர்களே; பவத் தொழில் - மீட்டும் மீட்டும் உறும் பிறவியாம் செயல்; என்று அறுமோ - எப்போது முடிவுறுமோ; மருதிடை ஊர்ந்தவன் - (கிருஷ்ணாவதாரத்தில் தாய் யசோதை உரலிடைப் பிணைப்ப அவ்வுரலுடன்) மருத மரங்களிடைத் தவழ்ந்து சென்று மருத மரங்களை ஒசித்தவன்; சங்கு - பாஞ்சஜன்னியமாம் சங்கினை; அங்கை ஏந்தி - அழகிய கரத்தில் ஏந்தியவன்; வளங்கொள் - செழுமை கொள்ளும்; திருக்கருணை மெய்ஞ்ஞான - அழகிய கிருபையும் சத்திய அறிவும் கொண்ட; நரகோளரிதனை - நரசிங்கப் பெருமாளின் (புகழை); கற்றிடும் - ஓதி உணருங்கள்; ஏ - அசை.

**கற்றவர் கொண்டுமுன் முப்புரம் நீ(று)எழக் காய்ந்தவனும்**
**பொற்றசெம் போதிற் பொலிவோனும் ஏத்திப் புகழ்ந்திடவே**
**கொற்றம் பிறந்த கன்கனைப் போழ்ந்த குணக்கடலாம்**
**செற்றம்இல் நற்கடி கையான் அவன்எழிற் சீர்தருமே. 12**

கல்தவர் கொண்டு - மலையை வில்லாகக் கொண்டு; முன் - பண்டு; முப்புரம் - திரிபுரங்களை; நீறு எழ - சாம்பராக; காய்ந்தவனும் - அழித்த சிவனும்; பொற்ற - ஒளி திகழ்; செம்போதில் பொலிவோனும் - செந்தாமரையில்

விளங்கும் மலரவனாம் பிரமனும்; ஏத்தி - தொழுது துதித்து; புகழ்ந்திடவே - பாராட்ட; கொற்றம் - வெற்றி; பிறந்த - தோன்றிய; கனகனை - இரணியனை; போழ்ந்த - பிளந்த; குணக் கடலாம் - பண்புச் சமுத்திரமாம்; செற்றம் இல் - பகைவரில்லாத; நற்கடிகையான் - நல்ல திருக்கடிகை நர சிங்கப் பெருமான்; அவன் - அப்பெருமான்; எழில் - அழகிய; சீர் தரும் - சிறப்பினை அருளும்; ஏ-அசை.

சீர்தரும்ஞான வளந்தரும் இன்பம் சிறந்துதரும்
பேர்தரும் மோனப் பிறழ்ஒளி வீசும் பெருந்தகைசேர்
ஏர்தரும் வண்டு படிசோலை சூழ்எழில் எங்கும்உறும்
தார்தரும் நற்கடி கையான் அவன்திருத் தாளிணையே. 13

சீர்தரும் - சிறப்புக்கள் அருளும்; ஞான வளம் தரும்-அறி வின் செழுமை அளிக்கும்; இன்பம் சிறந்து தரும் - மகிழ்ச்சி மிக அருளும்; பேர் தரும் - நல்ல பெயரை அருளும்; மோனப் பிறழ் ஒளி வீசும் - மௌனம் பொருந்தப் பிரகாசம் பரவும்; பெருந்தகை சேர் - பெருந்தன்மை கூடிய; ஏர் தரும் - அழ கினை அருளும்; வண்டுபடி சோலைசூழ் எழில் - தும்பிகள் படியும் மலர்ப் பொழிலின் அழகு; எங்கும் உறும் - எவ்விடத் தும் உள்ள; தார் தரும் நல்கடிகையான் - மாலை சூடிய நல்ல திருக்கடிகாசலப் பெருமாள்; அவன் திருத் தாளிணையே - அவனுடைய அழகிய திருவடிகளே; திருத் தாளிணையே சீர் தரும்,........ஏர் தரும் என இயைக்க,

"தனந்தரும் கல்வி தரும்ஒரு நாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவுந் தரும்நெஞ்சில் வஞ்சம்இல்லா
இனந்தரும் நல்லன எல்லாம் தரும்அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாளபி ராமி கடைக்கண்களே"

என்ற அபிராமி அந்தாதிப் பாடல் ஒப்பு நோக்குக.

தாளிணை கொண்டு சக(டு) உதைத்தோன்மனம் சார்ந்திடும்நாள்
வேள்செயும் துன்பம் விலக்கிவிட் டேன்அவன் மேவிஎனை
ஆளுறும் நாளை அறியாத நாளில் அவம்அடைந்தேன்
வேள்புகழ் நற்கடி கையானைப் போற்றிடு மெல்இயலே. 14

தாள் இணை கொண்டு - திருவடிகளால்; சகடு' உதைத்தோன் - வண்டி வடிவில் வந்த சகடாசுரனை உதைத்து வதைத்தவன்பால்; மனம் சார்ந்திடும் நாள் - உள்ளம் பொருந்திடும் நாளில்; வேள் செயும் - மன்மதன் புரியும்; துன்பம் - இடர்களை; விலக்கி விட்டேன் - அகற்றி விட்டேன்; அவன் - அச்சகடுதைத்த பெருமான்; மேவி - வந்து; எனை ஆளுறும் நாளை - என்னை ஆட்கொள்ளும் தினத்தை; அறியாத நாளில் - உணராத தினத்தில்: அவம் அடைந்தேன் - வெறுமை கொண்டேன்; வேள் புகழ் - மண் (பூமி) சிறப்பிக்கும்; நற்கடிகையானை - நல்ல திருக்கடிகைப்பதி நரசிங்கப் பெருமாளை; போற்றிடு - துதி செய்; மெல்லியலே - மென்மையான இயல்பினளே. இஃது அகத்துறை; தலைவி தன் துயரைப் பாங்கிக்கு உரைத்தல்.

**மெல்இயல் ஆன குணம்கொண்டு நாளும் விழைவுகொண்டு**
**புல்இயல் ஆகிய மன்மதன் பூங்கணை போர்செயவே**
**நல்இயல் கெட்டனள் நாரி கண்டாய்நர கோளரியே**
**சொல்இயல் சேர்புகழ் உன்மாலை கண்டிடில்**
**சோர்(வு)அறுமே. 15**

மெல் இயல் ஆன - மென்மையான இயல்பமைந்த; குணம் கொண்டு - தன்மை கொண்டு; நாளும் - எப்போதும்; விழைவு கொண்டு - வேட்கை கொண்டு; புல் இயல் ஆகிய - அற்பக் குணம் கொண்ட; மன்மதன் - காமன்; பூங்கணை - புஷ்ப பாணங்கள் போர் செயவே - பொருதிட; நல் இயல் கெட்டனள் - நல்ல சுபாவம் அழிந்தனள்; நாரி கண்டாய் - தலைவி காண்க; நர கோளரியே - நரசிங்கப் பெருமாளே; சொல் இயல் சேர் - இயல்பான சொற்கள் கூடிய; புகழ் - சிறப்பமைந்த; உன்மாலை கண்டிடில் - உன் புயத்தணிந்த ஆரத்தைக் காணில்; சோர்வு அறுமே - (அவள்) தளர்ச்சி நீங்கும்.

இப்பாடலும் அகத்துறை; பாங்கி தலைவனிடம் தலைவி நிலை கூறி மாலை வேண்டல்.

**சோரும் மனமும் பொறியும் கலங்கிச் சுகம்அறவே**
**யாரும்இல் லாதவன் தார்அருள் வார்அருள் மாமுகிலே**

கார்உறும் வஞ்சக் கனகனை மாய்த்திடு கற்பகமே
ஏர்உறும் நற்கடி கையாய் எதிர்ந்(து)எனக்(கு)
இன்பருளே 16

சோரும் மனமும் - தளரும் உள்ளமும்; பொறியும் - ஐம் புலன்களும்; கலங்கி - சுழன்றுதிரிந்து; சுகம் அறவே - இன்பம் அற்றுப் போக; யாரும் இல்லாதவன் - வேறெவரும் இணை இல்லாதவன் தன்; தார் அருள்வார் - மாலை தருவார்; அருள் மாமுகிலே - திரண்ட, குளிர்ந்த, அழகிய மேகம் போன்ற வனே; கார் உறும் - கருமை (கொடுமை) கொண்ட; வஞ்ச - துரோகனாம்; கனகனை - இரணியனை; மாய்த்திடு - வதைத்திடும்; கற்பகமே - வேண்டுவோர் வேண் டியதை அளிக்கும் கற்பகத் தரு அனையாய்; ஏர்உறும்-எழில் கொண்ட; நற்கடிகையாய் - நல்ல திருக்கடிகைப் பதியாய்; எதிர்ந்து - முன்வந்து; எனக்கு - எளியனாம் எனக்கு; இன்பு அருளே - சுகம் தருக.

இப்பாடலும் அகத்துறை. தலைவி தலைவனை வேண்டுவது.

அருளான வாருதி மெய்காக்கும் ஆழி அடல்உறும்தன்
பொருள்ஆழம் கொண்ட புகழ்க்கவி வாரணம் பொருந்தரிய
தருவான வர்க்குத் தருவாம் கனகனைச் சாய்த்தவனாம்
மருவாரும் குல்லை அணிதோளன் ஆகும்என் மாயவனே. 17

அருளான வாருதி - கிருபைக் கடல்; மெய் காக்கும் ஆழி - சத்தியத்தைப் புரக்கும் சக்கரம்; அடல் உறும் தன் - வலிமை யுள்ள தன்னுடைய; பொருள் - அர்த்தத்தின்; ஆழம் கொண்ட - செறிவு உடைய; புகழ்க் கவி வாரணம் - சிறப்புள்ள (சீர்கொண்ட) கவிதையாம் வேழம்; பொருந்தரிய தரு - கிடைத்தற் கரியவற்றை அளிக்கும் கற்பக மரத்தை; வானவர்க்கு - அமரர்களுக்கு; தருவாம் - தரும் நரசிங்கனாம்; கனகனைச் சாய்த்தவனாம் - இரணி யனை வதைத்தவனாம்; மரு ஆரும் - மணம் பொருந்திய; குல்லை - துளசி மாலை; அணிதோளன் - புனைந்த புயத் தினன்; ஆகும் என் மாயவனே - என் கிருஷ்ணன் ஆவான்.

**மாயவன் வேதத்துக்(கு) எட்டாத சோதி மலரவற்கும்**
**வேயுயர் தோளி விடைமழு வாளன்மெய் விண்ணவர்க்கும்**
**ஆய்வரி தாம்புகழ் ஆள்அரி ஆகிய அப்பனையே**
**பாய்திரைப் பூவிற் பணிவீர் உமக்குப் பவம்இலையே, 18**

*மாயவன் - கரியோன்; வேதத்துக்கு எட்டாத - மறைகளால் உணர இயலாத; சோதி - ஒளியானவன்; மலரவற்கும் - பிரமனுக்கும்; வேயுயர் தோளி - மூங்கிலனைய மேன்மைத் தோளினாள் உமை; விடை - இடபம்; மழுவாளன் - மழுத் தரித்த சிவன்; மெய் - உண்மையான; விண்ணவர்க்கும் - தேவர்களுக்கும்; ஆய்வரிதாம் - தெளிதற்கு அரியதாகும்; புகழ் ஆளரி ஆகிய - சீர் மிக்க நரசிங்கம் ஆய; அப்பனையே - தலைவனையே; பாய்திரைப் பூவில் - அலைகடற் புவியில்; பணிவீர் - தாழ்ந்து வணங்குங்கள்; உமக்கு - உங்களுக்கு; பவம் இலையே - பிறப்பில்லையே.*

**இலைகாய் அருந்தி அடவிகள் தோறும் இனி(து)அலைந்து**
**மலைமீது வைகித் திரிவீர் உமது விதிவழக்கே**
**கலைமேவு திங்கள் கதிரோன்எனக் கனகா சுரனைக்**
**அலைசூழ் புவியிடை அட்டான் அவன்செயல் அற்புதமே. 19**

*இலைகாய் அருந்தி - தழைகளும் காய்களும் உண்டு; அடவிகள் தோறும் - காடுகள் எல்லாம்; இனிது அலைந்து - மகிழ்ந்து திரிந்து; மலைமீது - மலைகளின் உச்சியில்; வைகி - இருந்து; கலைமேவு - கிரணங்கள் பொருந்திய; திங்கள் - சந்திரன்; கதிரோன் என - சூரியன் போல்; திரிவீர் - அலைபவர்களே; (இது) உமது விதிவழக்கே - உங்கள் தலை எழுத்தின் இயல்பாகும்; கனகாசுரனை - இரணியனாம் அரக்கனை; அலைசூழ் புவிஇடை - கடல் சூழ்ந்த பாரினில்; அட்டான் - வதைத்தான்; அவன் செயல் - அவனுடைய செய்கை; அற்புதமே - அதிசயமாகும்,*

**அற்புதம் ஆன பொருள்ஆகி ஞானத்(து) அவிர்ஒளியாய்**
**சிற்பரம் ஆன செகம்ஆகி வேதச் செழும்பொருளாய்**
**கற்பக மான செயல்ஆகி அன்பர் கனிந்(து) இறைஞ்சும்**
**பொற்புகழ் சேரும் நரவா ளரிதனைப் போற்றிடுமே. 20**

அற்புதம் ஆன - அதிசயமான; பொருள் ஆகி - தலைமையாகி; ஞானத்து - அறிவின்; அவிர் ஒளியாய் - சுடரும் சோதியாய்; சிற்பரம் ஆன - பிரமம் ஆன; செகம் ஆகி - உலகம் ஆய்; வேதச் செழும் பொருளாய் - மறைகளின் சீரிய அர்த்தமாய்; கற்பகமான-வேண்டியதை அளிக்கும் கற்பகத் தருவின் செயல் ஆகி; அன்பர் - பக்தர்கள்; கனிந்து - கசிந்து; இறைஞ்சும் - வணங்குகின்ற; பொற்பு அகம் சேரும் - எழில் உளத்தில் மேவி இருக்கும்; நர ஆளரிதனை - நரசிங்கப் பெருமானை; போற்றிடுமே - வணங்கிப் புகழ்வீர்.

**போற்றுமின் பாதங்கள் நாள்தோறும் அன்பு பொருந்திடவே**
**சாற்றுமின் நற்பெயர் தான்தள ராது தறுகணன்ஆம்**
**கூற்றும்உட் கூசி வெருவியிட்(டு) ஓட குலவிநிதம்**
**ஏற்றுமின் முத்தியில் ஏய்ந்திட லாம்இயை யீறிலதே.** 21

போற்றுமின் பாதங்கள் நாள் தோறும் - திருவடிகளைத் தினந்தோறும் பணியுங்கள்; அன்பு பொருந்திடவே - பக்தி சேர்ந்திட; சாற்றுமின் நற்பெயர்தான் தளராது - அயர்வின்றி அவன் நல்ல நாமங்களைக் கூறுங்கள்; தறுகணனாம் கூற்றும் - குரூரனாம் யமனும்; உட்கூசி - மனம் கலங்கி; வெருவியிட்டோட - அச்சம் கொண்டு ஓட; குலவி நிதம் ஏற்றுமின் - சூழ்ந்து நாளும் தொழுவீர்; முத்தியில் - பரம பதத்தில்; எய்திடலாம் - விளங்கலாம்; இயை ஈறிலதே - முடிவற்றது சேரும்;

**தேவரும் காணற்(கு) அரியவன் வஞ்சத் திறன்உடையோர்**
**பாவகம் எண்ணும் படியே அளிக்கும் பலர்க்(கு) அரியான்**
**பூவிடை நாளும் மலர்கொண்டு போற்றிப் புகழ்ந்திடுவோன்**
**தூஅடி ஏத்தித் திரிவீர் பலநெறித் தோற்றத்தரே.** 22

பல நெறித் தோற்றத்தரே - பல மார்க்கங்களில் தோன்றுபவர்களே!; தேவரும் - வானோர்களும்; காணற்கு - பார்ப்பதற்கு; அரியவன் - அருமையானவன்; வஞ்சத் திறன் உடையோர் - துரோகச் செயலில் வலிமை கொண்டவர்கள்; பாவகம் - இயல்பை; எண்ணும்படியே - அவர்கள் நினைப்பின் படியே; அளிக்கும் - கொடுக்கும்; பலர்க்கு - பல பேர்களுக்

*கும்; அரியான் - அரிய இயலாதவன்; பூவிடை - பூமியில்; நாளும் (எப்போதும்); மலர்கொண்டு - புஷ்பங்கள் கொண்டு; போற்றி - அருச்சித்து; புகழ்ந்திடுவோன - சிறப்பாகக் கூறப் பெறுகின்றவன்; தூஅடி-தூய்மையான திருவடிகளை; ஏத்தித் திரிவீர் - பணிந்து வணங்குவீர்;*

**தோற்றமும் வாழ்வுமற்(று) எல்லா விதமும் தொடுகடல்சூழ்**
**ஏற்றம்செய் பூமியும் எல்லாம் அழியும் இகபரத்தில்**
**ஆற்றும் வினைஅன்றி வாராது காண்நர ஆளரியைப்**
**போற்றுமின் பத்திசெய் தேஅவன் தாளைப் புகழுமினே.** 23

*தோற்றமும் - எழில் வடிவும்; வாழ்வும் - ஜீவிதமும்; மற்று எல்லா விதமும் - பிற எல்லா வகையிலும்; தொடுகடல் சூழ் - (சகரர்களால்) தோண்டப்பெற்ற கடல் சூழ்ந்த; ஏற்றமசெய் பூமியும் - உயர்வுகொள் வையமும்; எல்லாம் அழியும் - அனைத்தும் மாய்ந்துவிடும்; இகபரத்தில் - இம்மை மறுமையில்; ஆற்றும் வினைஅன்றி - புரியும் பாவபுண்ணியங் களன்றிப் பிற; வாராது காண் - உடன் வருவதில்லை; நர ஆளரியை - நரசிம்மப் பெருமானை; பத்தி செய்தே - அன்பு புரிந்து; போற்றுமின் - புகழ்ந்து கூறுங்கள்;*

**புகழான வாழ்க்கையை மெய்என்று நம்பிப் புகன்றும்நிதம்**
**இகழான செய்கை யொடுதிரி வீர்இனி ஏழ்உலகும்**
**இகலான செய்கை நடத்தும் பிரான்விதி தேவரொடும்**
**தகவான வர்பணி ஆளரி தாள்அணி சாத்துமினே.** 24

*புகழான வாழ்க்கையை - சீர்மிக்க ஜீவிதத்தை; மெய் என்று - உண்மை என; நம்பி - விரும்பி; புகன்றும் - கூறியும்; நிதம் - நான்தோறும்; இகழான செய்கையொடு - தாழ் வான ஈனச் செயலுடன்; திரிவீர் - அலைபவர்களே; இனி - மேலும்; ஏழ்உலகும் - ஏழுதலங்களும்; இகலான - ஒப்பான; செய்கை நடத்தும் பிரான் - செயல்களை ஆற்றும் தலைவன்; விதி - பிரமன்; தேவரொடு - வானவர்களுடன்; தகவானவர்- தகுதி உள்ளவர்கள்; பணி - வணங்கும்; ஆளரிதாள் - நரசிங் கப் பெருமான் திருவடிகளில்; அணி சாத்துமினே-அணிகலன் களாக அலங்கரிப்பீர்;*

மின்னான வாழ்வை நிசம்என்று நம்பிஇம் மேதினியில்
பொன்ஆசை கொண்டு திரிவீர் கடிகையிற் போந்தவனை
என்னாளும் போற்றிப் பணிவீர்எனின் உமக்(கு) எப்பொழுதும்
மன்னாது கூற்றுவன் வாயில்கண்(டு) ஏங்கி வருந்துவதே. 25

*மின் ஆன - மின்னலைப் போல் நொடியில் தோன்றி அழியும்; வாழ்வை - ஜீவிதத்தை; நிசம் என்று நம்பி-உண்மை என விசுவாசம் கொண்டு; இம்மேதினியில் - இந்த உலகில்; பொன் ஆசை கொண்டு - தங்கத்தின் மீது (சம்பத்து) வேட்கையுற்று; திரிவீர் - அலைபவர்களே; கடிகையில் - திருக் கடிகாசலத்தில்; போந்தவனை - கோயில் கொண்ட நரசிங்கப் பெருமானை; எந்நாளும் - எப்போதும்; போற்றிப் பணிவீர் எனில் - துதித்து வணங்குவீர் ஆயின்; உமக்கு - உங்களுக்கு; எப்பொழுதும் - எக்காலத்தும்; கூற்றுவன் வாயில்கண்டு - யம தருமனின் வாசலைப் பார்த்து; ஏங்கி - இரங்கி; வருந்துவது - துக்கம் அடைவது; மன்னாது-பொருந்துவதில்லை; ஏ-அசை.*

வருந்துவ தாம்கரு மாய வலைதனில் மாழ்கிநிதம்
உருந்தி மனம்உலை யா(து)அளிப் பான்உயர் நற்கடிகை
பொருந்திய நல்நர கோளரி யேஅருட் பூங்கிரியே
மருந்துஉறழ் நல்மொழி மாமல ராள்திரு மார்பினனே. 26

*உயர் நற்கடிகை - மேன்மையான நல்ல திருக்கடிகாசலப் பதியில்; பொருந்திய - கோயில் கொண்டுள்ள; நல் நர கோளரி - நன்மை தரும் நரசிங்கன்; ஏ-அசை; அருள் பூங்கிரி- அருளும் மலரனைய மலையான்; மருந்துஉறழ் - அமுதம் ஒத்த; நல்மொழி - இனிய வாக்கினாள்; மாமலராள்-அழகிய செந்தாமரையில் விளங்குபவளாம்; திரு-இலக்குமி உறையும்; மார்பினன் - மார்பை உடையவன்; வருந்துவதாம் - துன்ப முடையதாம்; கருமாய வலைதனில் - பிறவியாம் மாய்கை யுடைய வலையில்; மாழ்கி நிதம் - நாளும் மயங்கி; உருந்தி - தொற்றி (உருத்து எதுகை நோக்கி உருந்தாயிற்று); மனம் - சிந்தை; உலையாது - கலங்காது; அளிப்பான் - காப்பாற்று வான்.*

இனன்ஆர் தருமணி மோலிகொண் டேஏழு வாரிதிசூழ்
இனனாகம் உற்ற புவிஏழ் புரந்துஇனி என்பயனோ

**வினனாக நற்புகழ் கொண்டிடு மா(று)எழில் நற்கடிகை**
**யினனாம் நரவர ஆளரி பாதம் இறைஞ்சுமினே. 27**

*இனன் ஆர்தரு மணி - ஒன்பது வகைகள் பொருந்திய இரத்தினங்கள் இழைத்த; மோலி கொண்டு - மகுடம் புனைந்து; ஏழு வாரிதி சூழ் - சப்த சாகரம் வளைந்த; இன நாகம் உற்ற - ஆதிசேடனுடைய முடியில் உள்ள; புவி ஏழ் புரந்து - சப்த லோகங்களையும் ஆண்டு; இனி என் பயனோ - இனிமேல் அடையும் பயன் யாதோ; இனன் ஆக நற்புகழ் கொண்டிடுமாறு - மன்னனாக நல்ல புகழ் பெறும் வழியில்; எழில் - அழகிய; நற்கடிகையினனாம் - நல்ல கடிகாசலப்பதியினனாம்; நர வர ஆளரிபாதம் - நரசிங்கமாக வரமருளும் பெருமான் திருவடிகளை; இறைஞ்சுமினே - போற்றிப் பணிவீர்.*

**இறைஞ்சுதற்(கு)ஏற்றவர் தேவர்என் றேதினம் எண்ணிஎண்ணி**
**அறஞ்சுடும் செய்கை அரக்கரைக் காய்ந்தவன் அன்புடனே**
**மறம்செய்கு வோர்தமை வாழ்நாளை நீக்கி வருத்திடுவோன்**
**புறம்திகழ் சோலைக் கடிகை நல்ஊரிடைப் புண்ணியனே. 28**

*இறைஞ்சுதற்கு - வழிபடுதலுக்கு; ஏற்றவர் - பொருத்தமானவர்கள்; தேவர் என்றே தினம் - வானோர்கள் எனவே நாளும்; எண்ணி எண்ணி - நினைந்து நினைந்து; அறம் சுடும் - தருமத்தைத் தீய்க்கும்; செய்கை - செயல்களும்; அரக்கரை - அசுரர்களை; காய்ந்தவன் - அழித்தவன்; அன்புடனே - விருப்பமுடன்; மறம் செய்குவோர்தமை - பாவம் புரிவோர் தங்களை; வாழ்நாளை நீக்கி - வாழும் நாட்களை அழித்து; வருத்திடுவோன் - துயரமடையச் செய்பவன்; புறம்திகழ் சோலை - பொழில்கள் வெளியே சூழ்ந்து விளங்கும்; கடிகை நல் ஊரிடை - திருக்கடிகை நற்பதியில் உள்ள; புண்ணியனே - அறமூர்த்தியாம் நரசிங்கப் பெருமானே.*

**புண்ணியம் செய்து புலன்ஐந்(து) அடக்கிப் பொறிவழியே**
**எண்ணிய எண்ணங்கள் செல்லாமற் காத்(து) அங்(கு) இருந்திடினும்**
**நண்ணரும் ஆளரி நாதனைப் போற்றி நவிலகில்லார்**
**கண்ணரும் தீய நர(கு)இடை ஆழ்ந்து கதறுவரே. 29**

புண்ணியம் செய்து - முற்பிறப்பில் அறங்கள் புரிந்து; புலன் ஐந்து அடக்கி - மெய், வாய், கண், நாசி, செவி என்ற பஞ்சேந்திரியங்களையும் அடிமைப்படுத்தி; பொறி வழியே - அவ்வியந்திரங்களின் நெறியில்; எண்ணிய எண்ணங்கள் - நினையும் நினைப்புக்கள்; செல்லாமல் - போகாமல்; காத்து- பாதுகாத்து; அங்கு - அங்கே (உலகில்); இருந்திடினும் - வாழ்ந்திருந்தாலும்; நண்ணரும் - கிடைத்தற்கு அரியதாம்; ஆளரிநாதனை - நரசிங்கப் பெருமானை; போற்றி - புகழ்ந்து; நவிலகில்லார் - துதி புகலாதவர்; கண்ணரும் தீய - மிக்க தீமைகளின் இருப்பிடமாகிய; நரகிடை ஆழ்ந்து-நரகில் மூழ்கி; கதறுவர் - புலம்புவார்கள்; ஏ - அசை.

**கதம்கொண்டு கூற்றுவன் வந்(து)அடைந் தால்இந்தக்**
**காசினிமேல்**

**இதம்கொண்டு போற்றும் அடியேற்(கு) எதிர்ந்(து)அருள்**
**செய்திடுவாய்**

**மதம்கொண்ட வேழம் அழைப்பமுன் ஓடி வரும்திருமால்**
**பதம்பெறு நல்துரு வற்(கு)அருள் ஆழி படைப்பவனே. 30**

மதம் கொண்ட வேழம் - மதம் உடைய யானையாம் கஜேந்திரன்; அழைப்ப - ஆதிமூலமே எனக் கூவி அழைப்ப; முன் - எதிரே; ஓடிவரும் திருமால் - விரைந்து அருள வரும் மாயோன்; நல்துருவற்கு - நல்ல துருவனுக்கு; பதம் பெறும் - துருவ பதத்தைப் பெறுமாறு; அருள் ஆழி படைப்பவனே - அருள் புரியும் சங்கால் (கன்னத்தைத் தழுவி) அளிப்பவன்; கதம் கொண்டு - சினம் கொண்டு; கூற்றுவன் வந்து அடைந்தால் - யமன் வந்து சேர்ந்தால்; இந்தக் காசினியில் - இம் மேதினியில்; இதம் கொண்டு போற்றும் - அன்பு கொண்டு துதிக்கும்; அடியேற்கு - தாசனுக்கு; எதிர்ந்து - முன்வந்து; அருள் செய்திடுவாய் - அருள் புரிக. இப்பாடல் கவி தன்னை உளப்படுத்திக் கூறியதாகும்.

**படைப்பர் அநேக விதங்களெ லாமது பாழ்த்திடவே**
**கிடைப்பதும் கேண்மையிற் கேவல ஞானம் கிடைப்பரிதே**
**உடைக்கலம் ஆம்எங்கள் ஆளரி நாதனை உற்(று)அடையார்**
**மடைக்கலம் ஒத்து வதிவார்கள் காண்இந்த வையகத்தே. 31**

படைப்பர் அநேக விதங்கள் எல்லாம் - பல வகையாகப் பொருளைச் செய்பவர்; அது பாழ்த்திடவே - அது வீணா கிடவே; கிடைப்ப - பெற; தம் கேண்மையில் - தங்கள் உற வில்; கேவல ஞானம்-அற்ப அறிவால்; கிடைப்பரிதே - பெறு தற்கு அரியதாகும்; உடைக்கலம் ஆம் எங்கள் - சகலமும் உரிய எமது பாத்திரமாம்; ஆளரிநாதனை - நரசிங்கப் பெரு மானை; உற்று அடையார் - சென்று சேராதவர்கள்; மடைக் கலம் ஒத்து - சமையற் பாத்திரங்கள் போல; வதிவார்கள் காண் - வாழ்பவர்கள் காண்க; இந்த வையகத்தே - இப் பூமியில்; ('சுட்ட சட்டி சட்டுவம் கறிச் சுவை உணருமோ' என்ற சித்தர் பாடல் ஒப்பு நோக்குக);

**வையாது புன்பிற தேவரை உள்ளத்தில் வாழ்த்தும்எனைப்**
**பொய்யாது காத்தருள் செய்திடு வாய்இந்தப் பூதலத்தே**
**செய்ஆர் பழனத் திருவளம் சேரும் செழுங்கடிகை**
**ஐயா கருணைக் கடலே அடியருக்கு ஆனந்தமே.** 32

புன்பிற தேவரை - அற்பமான பிற கடவுளரை; உள்ளத் தில் வையாது - மனதிற் கொள்ளாமல்; வாழ்த்தும் எனை - (உன்னைத்) துதிக்கும் எளியேனை; பொய்யாது - மெய்யாக; காத்தருள் செய்திடுவாய்-இரட்சித்தருள்க;இந்தப்பூதலத்தே- இந்தப் பூமியில்; செய்ஆர் பழன - வயல்கள் பொருந்திய மருத நிலத்து; திருவளம் சேரும் - செல்வச் செழிப்புக் கூடிய; செழுங்கடிகை - செழுமை சேர் கடிகாசலத்து; ஐயா - தலை வனே; கருணைக் கடலே - கிருபா சாகர; அடியருக்கு - தொண்டர்களுக்கு; ஆனந்தமே - பேரின்பமானவனே.

**ஆனந்தம் என்றும் அறி(வு)என்றும் சோதி அமலம்என்றும்**
**வான்அந்தம் என்றும் சொலுவார் உனைமற வாதிருப்பார்**
**ஞானம் சிறந்த நரஆ ளரிஎன நானிலத்தோர்**
**தானம் சிறந்த மதியோர் புகழும் தயாபரனே** 33

ஆனந்தம் என்றும் - இன்பம் எனவும்; அறிவு என்றும் - ஞானம் எனவும்; சோதி அமலம் என்றும் - குறறமில் பேர் ஒளி எனவும்; வான் அந்தம் என்றும் - எழில் மேகம் எனவும்;

*சொலுவார் - கூறுவார்கள்; உனை மறவாதிருப்பார் - உன்னை எப்போதும் நினைந்திருப்பவர்கள்; ஞானம் சிறந்த - போதம் மிகுந்த; நர ஆள் அரி என - நரசிங்கப்பெருமாள என; நானிலத்தோர் - புவியில் உள்ளவர்கள்; தானம் சிறந்த - பதம் மிக்க; மதியோர் - அறிஞர்கள்; புகழும் - போற்றும்; தயாபரனே - கிருபை உடையவனே;*

**தயாபரர் என்று பலதே வரைநிதம் தாழ்ந்(து) இணங்கி**
**வியாபரம் போல்இனிச் சென்(று)அலை வாரது வீண்பலமே**
**யயாதிதன் கோத்திரத்(து) உற்றோர்க்(கு) அருளும்**
**அருட்கண்ணனே**
**செயாவனம் உற்ற நரஆ ளரிஎனும் சேவகனே.** 34

*தயாபரர் என்று - கிருபை உடையவர்கள் என; பல தேவரை - பல வகைத் தெய்வங்களை; நிதம் - நாளும்; தாழ்ந்து-பணிந்து; இணங்கி - பொருந்தி; வியாபரம் போல் - பண்டமாற்றுத் தொழில் போல் (வியாபாரம் வியாபரம் என எதுகை நோக்கிக் குறுகியது) இனிச் செனறு - இனியும்போய்; அலைவார் - திரிவார்கள்! அது வீண்பலமே - அது பாழான பலனேயாகும்; யயாதி தன் கோத்திரத்து உற்றோர்க்கு - யயாதி தேவயானி மகனாம் யது வம்சத்தினருக்கு; அருளும் - தயை புரியும்; அருட்கண்ணனே - கருணை விழியினனே; செயாவனம் - பிறரால் அமைக்கப் பெறாது தானே தோன்றிய சோலையில் (கடிகையில்); உற்ற - பொருந்திய; நர ஆள் அரி எனும் - நரசிங்கப் பெருமாள் எனப் பெறும்; சேவகனே - வீரனே;*

**சேவகம் கொண்டு திரிவாரைத் தாக்கித் திசைமுழுதும்**
**பாவகம் எண்ணும் படியே அளிக்கும் பதகன்எனும்**
**மாவலி யானைப் பிளந்தே உலகத்து வாதைதவிர்**
**தூவலன் ஆளரி நாதனைப் போற்றுமின் துன்புஅறவே** 35

*சேவகம் கொண்டு திரிவாரை - வீரம் கொண்டு அலைபவர்களை; தாக்கி - அடித்து; திசை முழுதும் - எல்லாத் திக்குகளிலும்; பாவகம் - கொலையை; எண்ணும்படியே-நினைத்தபடி; அளிக்கும் - கொடுக்கும்; பதகன் - கீழ்மகன்; மாவலி*

யானை - மிக்க வலிமையுடைய இரணியனை; பிளந்தே - (உகிரால்) போழ்ந்தே; உலகத்து - உலக மக்களின்; வாதை தவிர் - துன்பங்களைப் போக்கும்; தூவலன் - பரிசுத்த வல்லமையாளன்; ஆள் அரி நாதனை - நரசிம்மப் பெருமாளை; போற்றுமின் துயர் அறவே - துன்பங்கள் நீங்கப் பணிந்து துதிப்பீர்;

**துன்(பு)அறும் வேதத் துணி(பு)உறும் ஞானச் சுகங்கள்உறும்**
**இன்(பு)உறும் ஏதம்எல் லாம்பறந்(து) ஓடும் இனியகுணம்**
**முன்(பு)உறும் ஆதி முதலான நல்ஒளி முத்திஉறும்**
**அன்(பு)உறும் ஆழி நரஆ ளரிதனை ஆய்பவர்க்கே 36**

துன்பு அறும் - இடர்கள் அற்றுப் போகும்; வேதத்துத் துணிபுஉறும்-மறைகளின்உறுதி வந்தடையும்; ஞானச்சுகங்கள் உறும்-அறிவானந்தங்கள் அடையும்; இன்பு உறும் - மகிழ்ச்சி சேரும்; ஏதம் எல்லாம் - துயரங்கள் யாவும்; பறந்து ஓடும் - விரைந்து பறந்தகலும்; இனிய குணம் - இனிமையான பண்பு; முன்பு உறும் - முன்வந்து அடையும்; ஆதி முதலான - எல்லாவற்றுக்கும் முன்பதான; நல்ஒளி - நற்சோதியான; முத்தி உறும் - பரமபதம் கிடைக்கும்; அன்புறும் - அன்பு கொண்ட; ஆழி - கடலான; நர ஆளரிதனை - நரசிங்கப் பெருமாளை; ஆய்பவர்க்கே - தேர்ந்துணர்பவர்களுக்கே;

**பவக்கே(டு) இலைஎன்று வேதங்கள் சொல்லும்இப் பாவகத்தை**
**அவக்கே(டு) இலாது தவம்செய்கு வீர்அகம் பற்றிநிதம்**
**தவக்கே(டு) இலாது கடிகையில் வாழும் தயாபரனாம்**
**உவர்கார்க் கடல்நிகர் வண்ணனன்என் றேத்துதிர் உத்தமமே 37**

பவக்கேடு இலை என்று - பிறவித் துயர் இல்லை என; வேதங்கள் சொல்லும் - மறைகள் கூறும்; இப்பாவகத்தை - இந்த இயல்பை; அவக் கேடிலாது - அபகடம் இன்றி; தவம் செய்குவீர் - தவசு புரிபவர்களே; அகம் பற்றி - உள்ளத்தில் இருத்தி; நிதம் - நாளும்; கடிகையில் வாழும் - கடிகாசலத்துக் கோயில் கொண்ட; தயாபரனாம்-கருணையாளனாம்; உவர்

*கார்க் கடல் நிகர் - உப்புள்ள கருங்கடலை ஒத்த; வண்ணன்- வடிவன்; என்று ஏத்துதிர்-எனத் தொழுவீர்கள்; உத்தமமே - அது சத்தியமாகும்;*

**உத்தமம் ஆன வினையாவும் நீக்கி உளம்வருந்திப்**
**பித்தர்என் றேபுவி பேசிடு மாறு பிதற்றிநிதம்**
**முத்தனை ஆளரி நாதனை மூர்த்தி முதற்பொருளை**
**சித்தம்கொண்(டு) ஏத்தித் திரிவீர்நற் சீர்கெடும்**
**தீங்கினரே** 38

*நற்சீர்கெடும் தீங்கினரே - நல்ல சிறப்புக்களை அழிக்கும் பாவிகளே; உத்தமம் ஆன - உண்மையான; வினை யாவும் - செயல் அனைத்தும்; நீக்கி - கைவிட்டு; உளம் வருந்தி - மனம் துன்புற்று; பித்தர் என்றே - பைத்தியம் எனவே; புவி பேசிடு மாறு - உலகினர் கூறும்படி; பிதற்றி - உளறி; நிதம் - நாளும்; முத்தனை - பரமபதத்தனை; ஆளரி நாதனை - நரசிங்கப் பெருமாளை; மூர்த்தி முதற் பொருளை - தேவனாம் பரம் பொருளை; சிந்தம் கொண்டு - உள்ளத்தில் ஏற்று; ஏத்தி - துதித்து; திரிவீர் - சென்றிடுவீர்;*

**தீங்கான பாவச் செயலால் வருந்தி திரிந்துநிதம்**
**ஓங்கார மான பொருள்எனும் ஆதி உருஅதனைப்**
**பாங்காக ஏத்திப் பரவகில் லீர்இனிப் பாவம்அறக்**
**கோங்(கு)ஆரும் சோலைக் கடிகையில் ஏகுமின்**
**குற்றமின்றே** 39

*தீங்கான - தீயவையான; பாவச் செயலால் - தீச்செயல் களால்; வருந்தி - துன்பம் அடைந்து; திரிந்து - அலைந்து; நிதம் - நாள் தோறும்; ஓங்காரமான பொருள் எனும் - பிரணவப் பொருள் என்னும்; ஆதி - முதன்மையான; உரு அதனை - வடிவத்தை; பாங்காக - முறையாக; ஏத்தி - துதித்து; பரவகில்லீர் - போற்றாதவர்களே; இனி - இனி மேலும்; பாவம் அற - தீவினை நீங்க; கோங்காரும் சோலை- மணம் கமழும் பூம்பொழில்களுடைய; கடிகையில் - திருக் கடிகை நகர்க்கண்; ஏகுமின் - செல்லுங்கள்; குற்றமின்றே - தவறு இல்லை;*

**இன்றே வருத்தும் எழில்மாரன் பூங்கணைக்(கு)**
**ஏந்திழையாள்**
**கன்றால் விளவின் கனிஉகுத் தேஇந்தக் காசினியில்**
**நன்(று)ஆயர் பாடி வளர்ஆ ளரிஎனும் நாதனையே**
**சென்(று)ஓதி மாலை கொடுவா எனக்குறை செப்புவளே 40**

*இன்றே - இப்பொழுதே; வருத்தும் - துன்புறுத்தும்; எழில் மாரன் - அழகிய மன்மதனின்; பூங்கணைக்கு - மலர் அம்புகளுக்கு; (மருந்தாக) கன்றால் விளவின் கனி உகுத்தே - கன்று வடிவில் வந்த அசுரனின் கால்களைப் பறித்து எறிந்து விளம் பழங்களை உதிர்த்து, 'கன்றால் விளவின் கனி உகுத்தும், கழையால் நிரையின் கணம் அழைத்தும், குன்றால் மழையின் குணம் தடுத்தும் குலவும் செல்வக்கோபாலா' என்ற வில்லிபுத்தூரார் பாரதப் பாடல் ஒப்புக் காண்க; இந்தக் காசினியில் - இவ்வுலகில்; நன்று - நலமுடன்; ஆயர்பாடி வளர் - கோகுலத்தில் வாழும்; ஆளரி எனும் - நரசிங்கம் எனப்பெறும்; நாதனையே சென்று - தலைவன்பாற் சென்று; ஓதி - தன் துயர் கூறி; மாலை கொடுவா - அவன் த்ரும் மலர் மாலையைக் கொண்டு வா; என - என்று; எனக் குறை செப்புவளே-என்று தனது மனக்குறை கூறுவாள். (இப்பாடல் அகத் துறை, பாங்கி கூற்று.)*

**செப்பரி தாய கொடுமனச் செய்கைத் திறல்உடைய**
**கற்பனை நேரும் கருத்துடை வஞ்சக் கனகனைமுன்**
**அப்பன கூர்நகம் கொண்(டு)இடந் தோன்நர ஆளரியை**
**எப்பக லும்பணிந்(து) ஏத்துவ னேபுவி எய்துவனே 41**

*புவி எய்துவனே - பூமியில் பிறந்த எளியேன்; செப்பரி தாய - கூறற்கரியதாய; கொடுமனச் செய்கைத்திறல் உடைய - கொடிய மனச் செயல்புரி வலிமை கொண்ட; கற்பனை நேரும்-புனைந்துரை ஒத்த; கருத்துடை-சிந்தனை கொண்ட; வஞ்சக் கனகனை - துரோகியான இரணியனை; அப்பு என - அம்பினை ஒத்த; கூர்நகம் கொண்டு - கூர்மையான நகத்தினால்; இடந்தோன் - பிளந்தவனாம்; நர ஆளரியை - நரசிம்மப் பெருமாளை; எப்பகலும் - எந்நாளும்; பணிந்து ஏத்துவனே - வணங்கித் துதிப்பேனே;*

எய்துற்ற காமப் பிணிபசி மூப்புஇவை எய்திஎல்லாப்
பைதுற்ற போதும்உட் பாசம் முற்றா(து)இந்தப் பாரின்இடை
நொய்(து)உற்ற போதைப் பலவாக எண்ணி நுவன்(று)
உளைவீர்
கைதுற்றும் வாவிக் கடிகைநல் ஊரனைக் காணுமினே 42

*எய்துற்ற - வந்தடைந்த; காமப் பிணி பசி மூப்பு இவை - வேட்கை, நோய், உணவு கொள்ள ஏற்படும் உணர்வு, முதுமை ஆகியவை; எய்தி - அடைந்து; எல்லா - அனைத்து; பைதுற்ற போதும் - துன்பம் அடைந்த காலையிலும்; உட் பாசம் - மன ஆசை; முற்றாது - முடிவுறாமல்; இந்தப் பாரின் இடை - இவ்வுலகத்தில்; நொய்து உற்ற - மெலிவடைந்த; போதை - காலத்தை; பலவாக எண்ணி - மிகுந்ததாக நினைந்து; நுவன்று - கூறி; உளைவீர் - மனம் வருந்துபவர் களே; கைதுற்றும் - பக்கலில் நிறைந்துள்ள; வாவி - நீர்த் தடம் (குளம்) உள்ள; கடிகைநல் ஊரனை - கடிகைத் திருப் பதியானை; காணுமின் - தரிசனம் செய்யுங்கள்;*

காணாத வஞ்சக் கடுவினை யால்இந்தக் காசினியிற்
பேணாத இன்பத்(து) உயிரை வருத்திப் பிணிபலவா
நாணாது நின்று தளராது வாழி நரசிம்மனைக்
கோணாது போற்றித் திகழ்வீர் குவலயக் குற்றவரே. 43

*காணாத - நோக்கப் பெறாத; வஞ்சக் கடுவினையால் - துரோகம் மிக்க கடுமையான செயலால்; இந்தக் காசினியில் - இப்பூவுலகில்; பேணாத - ஆசைப் படாத; இன்பத்து - சுகத் தில்; உயிரை வருத்தி - பிராணனைத் துன்பப்படுத்தி; பிணி பலவா - பலவான நோய்களுடன்; நாணாது நின்று - வெட்க மின்றி இருந்து; தளராது - அயர்வடையாமல்; வாழி - வாழ்க; நரசிம்மனை - நரசிங்கப் பெருமாளை; கோணாது - வாட்டமடையாமல்; போற்றி - துதித்து வணங்கி; திகழ்வீர் - விளங்குவீர்; குவலயக்குற்றவரே - பூமியிற் பிறந்தவர்களே;*

குற்றம் களைந்து மனமாயை வென்று குறைகடந்து
செற்றங்கள் நீக்கிப் பிறஆசை போக்கித் திடம்செழித்த
நற்றவர் போற்றும் நரஆ ளரிதனை நான்தொழுதேன்
அற்றன பாவங்கள் எல்லாம் அருக்கன்முன் அல்இயலே 44

குற்றம் களைந்து - பிழைகளை நீக்கி; மனமாயை வென்று - சிந்தையில் தோன்றும் சலனங்களை வெற்றி கொண்டு; குறை கடந்து - வெறுப்புகளைத் தாண்டி; செற்றங்கள் - விரோதங்கள்; நீக்கி - அகற்றி; பிற ஆசை போக்கி-வேறுள்ள விருப்புக்களை அழித்து; தினம் செழித்த - நாள் தோறும் வளப்பமுறும்: நற்றவர் போற்றும் - நல்ல தவசீலர் துதிக்கும்; நர ஆளரிதனை - நரசிங்கப் பெருமாளை; நான் தொழுதேன் - நான் வழிபட்டேன்; அருக்கன்முன் - சூரியன் எதிரே; அல்இயலே - இருளின் தன்மை போல; அற்றன பாவங்கள் எல்லாம் - (என்) தீவினை யாவும் அழிந்தன;

**அல்லியந் தாமரைப் பூம்போதில் மேவிய அங்கணையாள்**
**புல்லிய மாயன் பொலிஆழித் தேவன் புகழ்மலியும்**
**சொல்இயல் வேதச் சுருதியில் தோன்றும் சுயவடிவன்**
**நல்இயல் கொண்ட நரஆ ளரிதனை நண்ணுமினே.** 45

அல்லி அம்தாமரைப் பூம்போதில் மேவிய - அகவிதழாம் அழகிய தாமரை மலரில் விளங்கும்; அங்கணையாள் - திருமகள்; புல்லிய - தழுவிய; மாயன் - கரியோன் (திருமால்); பொலி ஆழித் தேவன் - ஒளிரும் திகிரி உடைய தெய்வம்; (பாற்கடலில் உள்ள கடவுள் எனவும் கொள்ளலாம்) (ஆழி-கடல்) புகழ் மலியும் - சிறப்பு மிக்க; சொல் இயல் வேதச் சுருதியில் தோன்றும் - வாக்கிய இயல்புள்ள மறை ஒலியில் உதிக்கும்; சுயவடிவன் - தான்தோன்றி உருவன்; நல் இயல் கொண்ட - பண்பமைந்த; நரஆளரிதனை - நரசிங்கப் பெருமாளை; நண்ணுமினே - சென்று அடைவிர்;

**நண்ணற்(கு) அரிய நமனால் நடுங்குவர் நானிலத்திற்**
**கண்ணற்(கு) அரிய கொடும்பா தகம்புரி காலர்கண்டீர்**
**எண்ணற்(கு) அரிய நரஆ ளரிதனை ஏத்தரிய**
**அண்ணற்(கு) அரிய அரிபோல் திரிந்திடும் அற்பர்களே** 46

நண்ணற்கு அரிய - அடைதற்கருமையான; நமனால் - இயமனால்; நடுங்குவர் - அச்சங்கொண்டு பதறுவர்; நானிலத்தில் - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று நான்கு வகை நிலங்கள் கொண்ட பூமியில்; கண்ணற்கு அரிய - குறிக்க

இயலாததாகிய; கொடும் பாதகம் புரி - கொடிய துரோகம் செய்யும்; காலர் கண்டிர் - எமன்கள் என நோக்குவாம்; எண்ணற்கு அரிய - நினைக்க அரிய; நரஆளரிதனை - நர சிம்மப் பெருமாளை; ஏத்த அரிய - தொழுதற்கு இயலாத; அரி போல் - குரங்கு போல்; திரிந்திடும் - அலையும்; அற்பர் களே - ஈனர்களாம்;

**அற்பமெய்ஞ் ஞானம் படைத்தே அலைந்திடும் ஆங்(கு)அவரை**
**அற்புத மாய்எண்ணி மெய்ந்நெறி தேறி அறி(வு)இழந்து**
**கற்ப(து)இ லாது கடிகையில் வாழும்நற் கண் ணனையே**
**சொற்பக ராது திரிவீர் பவச்செயல் தோன்றினரே** 47

பவச் செயல் - தீவினைகளில்; தோன்றினரே - உதித்த வர்களே; அற்ப மெய்ஞ்ஞானம் படைத்தே - மிகச் சிறிதளவு உண்மை அறிவு பெற்றே; அலைந்திடும் - திரியும்; ஆங்கு அவரை - அப்படிப்பட்டவர்களை; அற்புதமாய் எண்ணி - அதிசயமாக நினைந்து; மெய்ந்நெறி தேறி - சத்திய மார்க் கத்தை ஆராய்ந்து; அறிவு இழந்து - புத்தி கெட்டு; கற்பது இலாது - படிப்பதில்லாமல்; கடிகையில் வாழும் - திருக் கடிகைப் பதியில் கோயில் கொண்டுள்ள; நற்கண்ணனையே- நல்ல திருமாலை; சொற் பகராது - துதி உரை கூறாது; திரி வீர் - சென்றடைவீர்;

**தோன்றரு முக்குணத் தால்வரும் தாமதச் சூனியமாய்**
**ஊன்தரும் பேத விகாரமும் மாயை உருஅளிப்ப**
**ஏன்றதன் மேல்வரும் இச்சையை மாற்றி இடர்அழியார்**
**நான்துதி செய்நர ஆளரி தாள்இணை நண்ணிலரே** 48

தோன்ற அரும் - வெளிப்பட அரிதாகிய; முக்குணத் தால் - சத்துவ, ராசச, தாமசமாம் மூன்று குணங்களுள்; வரும் - அடையும்; தாமதச் சூனியமாய் - தாமதத்தின் வெறு மையாய்; ஊன் தரும் - சரீரம் அளிக்கும்; பேத விகாரமும் - முரண்பாட்டால் வரு காமமும்; மாயை உரு அளிப்ப - அழி யும் வடிவைத் தர; ஏன்று - ஏற்று; அதன்மேல் வரு - அப்பேத வடிவின் மேல் வரும்; இச்சையை - மோகத்தை; மாற்றி - நீக்கி; இடர் அழியார் - துன்பங்களைப் போக்கிடார்; நான்

துதிசெய் - அடியேன் வழிபடும்; நர ஆளரி - நரசிங்கப் பெருமாள்; தாள் இணை - திருவடிகளை; நண்ணிலரே - சென்று அடையாதவர்களே (இப்பாடலில் கவி தன்னை உளப் படுத்தி 'நான் துதி செய்யும் நர ஆளரி' என்கிறார்.)

**இலராரும் கண்டிடின் மெய்ஞ்ஞான வெள்ளம் இழிதரவே**
**பலமா முனிக்கணம் தாம்போற்றி ஏத்தும் படிஅடையார்**
**நலரார் மதிக்கும் கடிகையில் மேவும் நரஅரிதான்**
**வலமாக வாழும் எழில்மணி மாமணி வைகுந்தமே** 49

இலர் ஆரும் - எவரும்; கண்டிடின் - தரிசித்தால்; மெய்ஞ் ஞான வெள்ளம்- மெய்யறிவாம் பெருக்கு; இழிதரவே-அருவி போல் கீழே வர; பல - பல வகையான; மாமுனிக்கணம் - மகரிஷிகளின் கூட்டம்; தாம் போற்றி ஏத்தும்படி - தாங்கள் புகழ்ந்து துதிக்குமாறு; அடையார்-கூடுதலில்லார்; நலரார் - மேன்மையால்; மதிக்கும் - கருதும்; கடிகையில் மேவும் - கடிகாசலத்துள்ள; நர அரிதான் - நரசிம்மப் பெருமாள் தான்; வலமாக வாழும் - தன இருப்பிடமாக வசிக்கும்; எழில்மணி - மிக அழகிய; மாமணி - சிறந்த இரத்தினமாம்; வைகுந்தமே - பரமபதமே;

**வைகும்தம் உள்நெடு வாழ்வென நம்பிஇவ் வையகத்திற்**
**பொய்கொண்(டு) அலைந்து திரியாமல் நாளும் புகலுமினோ**
**மெய்கொண்ட வேள்விக் கடிகையில் ,வாழும்எம் மெய்யனையே**
**நைகைவிண்(டு) ஓட அருள்ஆ ளரிவர நம்பனையே** 50

வைகும் தம்முள் நெடுவாழ்வு என நம்பி - தம்பால் நீண்ட ஆயுள் இருக்கும் என்று விசுவாசம் கொண்டு; இவ்வையகத்தில் - இப்புவியில; பொய்கொண்டு - அசத்தியம் ஏற்று, அலைந்து திரியாமல் - துன்புற்று அலையாமல்; நாளும - எப்போதும; மெய்கொண்ட வேள்விக் கடிகையில் - உண்மையான யாகம் நிகழும் கடிகாசலத்தில்; வாழும் - கோயில் கொண்டுள்ள; எம் - எங்கள்; மெய்யனையே - சத்திய மூர்த்தி (நரசிம்மனை); நைகை - இடர்கள்; விண்டு ஓட - சின்னபின்னமாகி அகல; அருள் - கருணைபுரி; ஆள் அரி - நர சிங்கமாம்; வர நம்பனையே - மேலான தெய்வத்தையே;

**நம்பிக்கை தீர நினைவீர் இனிஒன்று நான்பகர்வேன்**
**தும்பிக்கை மாமுகன் செஞ்சுடர் வேலன்வெம் சூலத்தினான்**
**அம்பிக்கை நேர்ந்தவன் ஏத்தரும் நாதன் நரமடங்கல்**
**வெம்பிக்கை யானையை வென்றவன் தாளிணை மேவிடவே 51**

*நம்பிக்கை தீர - வாழ்க்கையில் விசுவாசம் முற்றும் விரிந்திட; நினைவீர் - சிந்தியுங்கள்; இனி ஒன்று நான் பகர்வேன் - நான் இனியும் ஒன்று கூறுவேன்; தும்பிக்கை மாமுகன் - வேழமுகத்து விநாயகன்; செஞ்சுடர் - செம்மை யான ஒளி வீசும்; வேலன் - சக்திதரன்; வெம் சூலத்தினான் - கொடிய சூல பாணியாகிய; அம்பிக்கை நேர்ந்தவன் - அழகுற பிச்சை ஏற்கும் சிவன்; ஏத்தரும் - துதித்தற்கு அரிய; நாதன் - தலைவன்; நரமடங்கல் - நரசிங்கம்; வெம்பி - சினந்து; கை யானையை - துதிக்கரம் கூடிய யானை குவலயா பீடத்தை; வென்றவன் - வெற்றி கொண்ட கண்ணனாம் திருமால்; தாளிணை - திருவடிகளை; மேவிடவே - அடையவே; (தாளிணை அடையவே நான் பகர்வேன்' எனக் கூட்டுக.)*

**மேவரும் கானகம் உற்றே பலபல வேள்விசெய்து**
**தாவரும் தானம் தவம்புரி வீர்இந்தத் தாரணியில்**
**மூவுல(கு) ஆளும் அசுரனைக் கொன்றிடும் மூர்த்தியனை**
**மாவலி சேரும் நரவா ளரிதனை வாழ்த்துமினே 52**

*மேவரும் - அடைதற்கு அரிய; கானகம் உற்றே - வனம் சென்று; பலபல - மிக; வேள்வி செய்து - யாகங்கள் புரிந்து; தாவரும் - குற்றமற்ற; தானம் - ஈகை; தவம் புரிவீர் - தபசு செய்பவர்களே; இந்தத் தரணியில் - இவ்வுலகில்; மூவுலகு ஆளும் - மூன்றுலகங்களையும் (வானாடு, மண்நாடு, பாதலம்) ஆட்சி செய்; அசுரனை - அரக்கனை (இராவணன் அல்லது இரணியன்) கொன்றிடும் - வதைத்திடும்; மூர்த்தியனை - எழில் வடிவனை; மாவலி சேரும் - மிக்க வலிமை கொண்ட - நர ஆளரிதனை - நரசிங்கப் பெருமாளை; வாழ்த்துமின் - போற்றிப் புகலுங்கள்; ஏ, அசை.*

**வாழ்த்துமி னால்எட்(டு) எழுத்தை தினம்தினம் மாமுடியைத்**
**தாழ்த்துமின் தாசர்கள் தங்கள் நற்பாதம் தகுதிஉறப்**
**போழ்த்துமின் தும்பவ வெம்காட்(டு) அகத்தைப் பொருவரிய**
**ஊழ்ப்பெரு நாதன் கடிகைநல் ஊர்இடை உற்ற அன்றே 53**

பொருவரிய - ஒப்பற்ற; ஊழ்ப்பெருநாதன் - விதிக்குப் பெருந்தலைவன்; கடிகை நல்ஊரிடை - திருக்கடிகைத் திருப் பதியில்; உற்ற அன்றே - அடைந்த அப்பொழுதே; ஆல் - அசை; எட்டெழுத்தை - ஓம் நமோ நாராயணாய என்ற அட்டக்கரத்தை; தினம் - நாளும்; வாழ்த்துமின் - போற்றிப் புகல்வீர்; தினம் - நாள்தோறும்; மாமுடியை - அழகிய சென் னியை; தாழ்த்துமின் - குனிந்து வணங்குவீர்; தாசர்கள் தங்கள் - அடியார்களின்; நற்பாதம் - நல்ல அடிகளில; தகுதி உற - தக்கவண்ணம்; போழ்த்துமின் - பிளந்து எறிவீர்; நும பவ வெம் காட்டு அகததை - உங்கள் பாவங்களாம கொடி கானகத்தை;

**உற்றன நற்றவம் எல்லாம் எனநினைத்(து) ஊங்குமனம்**
**பற்றியின் கூரப் பணிந்தே தினம்தினம் பத்தி உற்றேன்**
**கொற்றவ னான கனகனை மாய்த்(து)அருள் கோளரியே**
**நற்றவம் ஓங்க வருவான்என் ஆவி நலம்பெறவே** 54

உற்றன - அடைந்தன; நற்றவம் எல்லாம் என - நல்ல தபசுகள் யாவும் என்று; நினைத்து - எண்ணி; ஊங்கு மனம் பற்றி - மிகுதியாக உளத்தில் கொண்டு; இன்கூர - மகிழ்வு மிக; பணிந்தே - வணங்கி; தினம் தினம் - நாள்தோறும்: பத்தி உற்றேன் - அன்பு அடைந்தேன்; கொற்றவன் ஆன கனகனை - அரசனான இரணியனை; மாய்த்து - வதைத்து; அருள் கோளரியே - உலகுக்கு அருள் புரியும நரசிங்கப் பெருமாளே; நற்றவம் ஓங்க - நல்ல தவம் மேன்மையுற; வரு வான் - காட்சி தருவான்; என் ஆவி நலம் பெறவே - என உயிர் நன்மை பெறுவதற்காகவே; (இப்பாடல் அகத்துறை. தலைவி தனிமையில் இரங்கல்.)

**நலம்பெறு மாறுனைப் பாடிட வேஇந்த நானிலத்தில்**
**உலந்தரும் தோள்உயர் உத்தம னேவலி உற்றவரை**
**அலம்தர மாய்த்த நரஆ ளரிஎனும் அற்புதனே**
**வலம்தரு மாறு வருவாய் வரம்தர வண்மைகொண்டே** 55

இந்த நானிலத்தில் - இப்பூமியில்; உலம்தரு தோள்உயர் உத்தமனே - உலக்கையனைய வலிய ஓங்கிய புயங்கள்

கொண்ட மேன்மையானவனே: வலி உற்றவரை - வலிமை கொண்டவர்களை; அலம்தர மாய்த்த - அச்சம் கொள்ள வதைத்த; நர ஆளரி எனும் - நரசிம்மம் என்ற; அற்புதனே - திருமாலே; வண்மை கொண்டே - ஈகைக் குணமுடன்; நலம் பெறுமாறு-நன்மை அடையும் வண்ணம்; உனைப் பாடிடவே உன்னைக் கவிதையால் துதிக்க; வலம் தருமாறு - வல்லமை பெறுமாறு; வரம் தர வருவாய் - வரம் அளிக்க வருவாயாக;

**வண்மையும் ஞான மணமும் சிறந்த மதியின்இடைத்**
**தண்மையும் மானத் தவமும் தழைந்த தவஒழுக்கும்**
**உண்மையும் நாடில் உயர்கடி காநகர் உத்தமன்என்(று)**
**எண்மையின் ஓதித் திரிவார் முனிவர்கள் எங்கெங்குமே** 56

வண்மையும் - ஈகைக் குணமும்; ஞான மணமும் - அறிவு வாசனையும்; சிறந்த - மிக்குள்ள; மதியினிடை - புத்தியில்; தண்மையும் - ஈரமும்; மானத் தவமும் - ஒத்த தபசும்; தழைந்த - செழித்த; தவ ஒழுக்கும் - மிகுதியான நடத்தையும்; உண்மையும் - சத்தியமும்; நாடில் - விரும்பினால்; உயர் கடிகாநகர் - மேன்மையான திருக்கடிகாசலப் பதியில்; உத்தமன் என்று - திருமால் என; எண்மையின் - எளிதாக; ஓதி - கூறி; முனிவர்கள் - இருடிகள்; திரிவார் எங்கெங்குமே - எல்லா இடத்தும் சஞ்சாரம் செய்வார்கள்;

**எங்கெங்கும் ஆகிமுன் நின்றான் இவன்என எப்பொழுதும்**
**பங்குட னேதுதி பாலனுக்(கு) ஆய்ஒரு பால்எழுவில்**
**அங்(கு)அமைந் தேநர சிங்கமாய் வந்தருள் அற்புதனே**
**இங்(கு)எங்கும் உங்(கு)எங்கும் எங்(கு)எங்கும் ஆகி**
**இருப்பவனே** 57

இங்கு எங்கும் - இவ்விடத்தெல்லாப் பகுதிகளிலும்; உங்கெங்கும் - அவ்விடத்தனைத்து இடத்தும்; எங்கெங்கும் - கண்ணிற் புலப்படாத இடம் எங்கேயும்; ஆகி - விளங்கி; இருப்பவனே - உறையும் திருமாலே; எங்கெங்கும் ஆகி நின்றான் இவன் என - எல்லா இடத்தும் தானாகி இருப்பவன் இவன் என்று; எப்பொழுதும் - சதாசர்வ காலமும்; பங்குடனே துதி- பட்சமாக வணங்கும்; பாலனுக்காய் - சிறுவன் பிரகலாதனுக்

*காக; ஒரு எழுவில் - ஒரு தூணில்; அங்கமைந்தே - அங்கு விளங்கி; நரசிங்கமாய் - நரசிம்ம மூர்த்தியாக; வந்தருள் - தோன்றி அருள் செய்த; அற்புதனே - அதிசயமானவனே;*

*("சாணினும் உளன்ஓர் தன்மை அணுவினைச் சதகூறுஇட்ட கோணினும் உளன்மா மேருக் குன்றினும் உளன் இந்நின்ற தூணினும் உளன்நீ சொற்ற சொல்லினும் உளன்" என்ற கம்பராமாயணப் பாடல் ஒப்புக் காண்க)*

**இருப்பவன் அம்தரங் கத்தே எழில்தரும் இன்பவெள்ளிப்**
**பொருப்பவன் ஏத்தும் புராதனத் தேவன் புகழரிய**
**மருப்பங் கயத்தவற் பெற்றோன் கடிகை வளம்பதியான்**
**திருப்பதி சென்று பணிவீர் பவம்அற தேசத்தரே** 58

*அம்தரங்கத்தே இருப்பவன் - அழகிய அலைசேர் பாலாழியில் விளங்குபவன்; எழில் தரும் - அழகு உள்ள; இன்ப வெள்ளிப் பொருப்பவன் - இனிய கைலை மலையன் (சிவபிரான்); ஏத்தும் - துதிக்கும்; புராதனத் தேவன் - பழமையான தெய்வம்; புகழரிய - புகழ்ந்துரைக்க அரிதாய; மருப்பங்கயத்தவன் - மணம்சேர் தாமரை மலரில் உள்ள பிரமனை; பெற்றோன் - மகனாகப் பெற்றவன்; கடிகை வளம்பதியான் - கடிகாசல வள நகரானுடைய; திருப்பதி சென்று - திவ்ய தேசங்களுக்குப் போய்; தேசத்தரே - நாட்டினர்களே; பவம் - பிறவி; அற - நீங்க; பணிவீர் - வழிபாடு செய்யுங்கள்;*

**தேசத் தரணி புனைமுடி யாகச் சிறந்த(து)எனும்**
**வாசத் தரணி பதஅழ காக நெடுமதியம்**
**மூசத் தரணி திருநாபி யாக முறைவிளங்கும்**
**காசத் தரணிக் கனல்நேர் நரஅரிக் காட்சியதே** 59

*தேசத்தர் அணிபுனை முடியாக - நாட்டில் உள்ளோர் அணி எனப் பூணும் மகுடமாக; சிறந்தது எனும் - மேலானது என்கின்ற; வாசத்தரணி - மணம்சேர் கங்கை உடைய; பதம் அழகாக - எழில் திருவடி விளங்க; நெடுமதியம் - நீண்ட திங்கள்; மூசத் தரணி - மொய்க்கும் உலகம்; திருநாபியாக - அழகிய கொப்பூழ் என; முறை விளங்கும் - முறையாகப் பொலி*

*யும்; காசத் தரணி கனல்நேர் - ஒளிசேர் சூரிய வெம்மை ஒத்த; நரஅரி - நரசிம்மப் பெருமாள்; காட்சியதே - அற்புதத் தோற்றமே; இப்பாடல் திரிபு (2 தரணி - நீர்ப் பெருக்கு; 2 தரணி - உலகம்; 4 தரணி - சூரியன்);*

**காட்சிஉற் றாலும் கமலா சனத்தனும் கற்பகத்தின்**
**பூட்சிமை மேவிய புங்கவன் என்னப் புவிஇடையே**
**மாட்சிபெற் றாலும் கடிகையில் வாழ்தரும் மாயவனைத்**
**தாட்சியுண் டாகப் பணியா தவர்விதி தாம்தழலே** 60

*கமலாசத்தனும் - மலரவனாம் பிரமனின்; காட்சி உற்றாலும் - தரிசனம் பெற்றாலும்; கற்பகத்தின் பூட்சிமை மேவிய - கற்பகத் தருவின் உரிமை அடைந்த; புங்கவன் என்ன - தேவேந்திரன் ஒப்ப; புவிஇடையே - பூமியில்; மாட்சி பெற்றாலும் - பெருமை அடைந்தாலும்; கடிகையில் வாழ்தரும் - திருக்கடிகாசலத்தில் கோயில் கொண்டிருக்கும்; மாயவனை - திருமால் நரசிம்மன்பால்; தாட்சி உண்டாக - தாழ்வுண்டாக்கும்படி; பணியாதவர் - வணங்காதவர்; விதிதாம் - ஊழ்தானே; தழலே - தீயாகும்.*

**தழல்போல் எரித்த வனத்தே கடிகைஇத் தையல்நல்லாள்**
**உழலாமல் எவ்வா(று) அடைந்தன ளோஇனி ஊழ்முறையாற்**
**பழகாமல் வந்தவர்ப் பார்த்(து)உப சாரம் பணாதுநிற்ப**
**விழலாய வன்மனம் போலஅன் றோஅது மென்கொடியே** 61

*தழல்போல் எரித்த வனத்தே - தீப்போல் எரிக்கும் கானகத்தே; கடிகை - திருக்கடிகாசலத்து; இத்தையல் நல்லாள் - இந்தப் பாலப் பருவ நல்ல பெண் (தையல் - பாலை; புள்ளிருக்கு வேளூர் இறைவி தையல்நாயகி. இப்பெயர் சம்ஸ்கிருத மொழியில் பாலாம்பாள் என வழங்கப் பெறுகின்றது என்பது பெரும் பேராசிரியர் டாக்டர் ஐயரவர்கள் குறிப்பு. பெண்ணின் நல்லாள் என உமையை ஞானசம்பந்தர் குறிப்பிடுவர்) உழலாமல் - துன்பம் அடையாது; எவ்வாறு - எங்ஙனம்; அடைந்தனளோ - வந்து சேர்ந்தனளோ; இனி - இனிமேல்; ஊழ்முறையால் - விதி வழியே; பழகாமல் - இணங்காமல்; வந்து அவர்ப் பார்த்து - வந்து அவரை நோக்கி; உபசாரம்*

பணாது நிற்ப - வழிபாடு செய்யாதிருப்பது; விழலாய - வீணான; வன்மனம - கடின உளம்: போல அன்றோ - போன்றநல்லவா; அது - அவ்வாறிருப்பது; மென்கொடியே - மென்மையான கொடி போன்றவளே; (இப்பாடல் அகத்துறை· தலைவன்பால் வந்த தலைவி வாளா இருப்பப் பாங்கி கூறுவது).

**கொடிதான பாவக் கிளையால் உழன்று குவலயத்தில்**
**மிடியால் அலைந்து திரிவீர் கனகன் மிடல் அழித்த**
**அடல்ஆர் திறல்நர ஆளரி யாகிய அப்பனைஎம்**
**உடல்ஆவி என்றும் உனக்கேஎன் பார்அவர் உத்தமரே** 62

கொடிதான - கொடுமையான; பாவக் கிளையால் - தீவினை உறவால்; உழன்று - தவித்து; குவலயத்தில் - பூமியில்; மிடியால் அலைந்து - வறுமையால் சுழன்று; அலைவீர் - திரிபவர்களே; கனகன் - இரணியன்; மிடல் அழித்த - வலிமையை மாய்த்த; அடல்ஆர்திறல் - போரிடும் வலிமை உள்ள; நரஆளரியாகிய - நரசிங்கப் பெருமாளாய; அப்பனை - இறைவனை; எம் - எங்கள்; உடல் ஆவி என்றும் உனக்கே- சரீரமும் பிராணனும் உனக்கு உரியது; என்பார் அவர் - என அர்ப்பணம் செய்பவர்கள்; உத்தமர் - மேன்மையுற்றோர்; ஏ - அசை;

**உத்தமம் ஆன உயர்குலத் தேவந்(து) உதித்த(து)எலாம்**
**மெய்த்திறன் ஆக விரும்பவற் றோஇந்த மேதினியில்**
**சத்துவ மாந்தர் வளர்கடி காநகர்ச் சார்(பு)உடையான்**
**எத்தலத் தோரும் புகழ்ஆ ளரிஎனக்(கு) இன்புஉறுமே** 63

உத்தமம் ஆன - முதன்மையான; உயர்குலத்தே வந்து உதித்தது எலாம் - மேற்குலத்தில் வந்து தோன்றிய செயல் யாவும்; மெய்த்திறன் ஆம - உண்மை வலிமையாக; விரும்பவற்றோ - ஆசை கொள்வதன்றோ; இந்த மேதினியில் - இவ்வுலகில்; சத்துவ மாந்தர் வாழும் - முக்குணங்களில் முதற்குணமாகிய சத்துவகுண மக்கள் வசிக்கும்; கடிகாநகர் - திருக்கடிகைப் பதியில்; சார்பு உடையான்-கோயில் கொண்டவன்;

எத்தலத்தோரும் - எவ்வுலகத்தவரும்; புகழ் - சிறப்பிக்கும்; ஆளரி - நரசிம்மப் பெருமாள்; எனக்கு-எளியேனுக்கு; இன்பு உறுமே - மகிழ்வு அருளும்;

**இன்பத்தில் நாளும் இருந்தோம் இனிஉண்மை எய்திப்பின்னை**
**வன்பத்தை நீக்கி மனச்செயல் மாற்றி வடுத்தவிர்ந்து**
**முன்புஉற்ற மேலைக் கடிகா நகர்வளர் மூர்த்தியனை**
**அன்புற்ற வண்மை நரஆ ளரிதனை ஆய்ந்திடுமே** 64

இன்பத்தில் நாளும் - சுகத்தில் எப்போதும் இருந்தோம் - வாழ்ந்தோம்; இனி - மேலும்; உண்மை எய்தி- மெய்ம்மை உற்று; பின்னை-பிறகு; வன்பத்தை நீக்கி - பலாத்காரத்தை விட்டு; மனச் செயல் மாற்றி - உள்ளத்துச் செய்கையை மாறுபடுத்தி; வடுத்தவிர்ந்து - குற்றம் களைந்து; முன்பு உற்ற - பண்டு தோன்றிய (எதிரில் உள்ள எனவும் கொள்ளலாம்); மேலை - மேன்மையான; கடிகாநகர் வளர்- திருக்கடிகையில் கோயில் கொண்டுள்ள; மூர்த்தியனை - தலைவனை; அன்புற்ற - நேயம் உடைய; நர ஆளரிதனை - நரசிங்கப் பெருமாளை; ஆய்ந்திடுமே - தெளிந்து உணர்வீர்;

**ஆயும் தருமங்கள் எல்லாம் அளிக்கும் அறிவுஉதித்த**
**தாயும் பிறங்கிடும் தத்துவ ஞானம் தவம்கொடுக்குந்**
**மாயும் பிறவிச் சனனங்கள் தீர வரம்அருளும்**
**சேயவன் நற்கடி காநகர் வாழும்நற் சீதரனே** 65

ஆயும் - தேரும்; தருமங்கள் எல்லாம் - அறங்கள் அனைத்தும்; அளிக்கும் - தரும்; அறிவு உதித்ததாயும் - அறிவில் தோன்றியதாகவும்; பிறங்கிடும் - விளங்கும்; தத்துவ ஞானம் - மெய்யறிவு; தவம் - சத்துவ குணம்; கொடுக்கும் - அளிக்கும்; மாயும் - அழியும்; பிறவிச் சனனங்கள் தீர - பிறப்பாம் வழிகள் (வமிசம்) நீங்க; வரம் அருளும் - விருப்பம் தரும்; சேயவன் - செம்மையானவன்; நற்கடிகாநகர் - நல்ல திருக்கடிகைப் பதியில்; வாழும் - கோயில் கொண்டுள்ள நற்சீதரனே - திருமகளை மார்பில் தரித்துள்ள திருமாலே (இலக்குமி நரசிம்மனே);

**சீதர னேஅருட் சேவக னேஎனத் தேறிநிதம்**
**ஆதர வாய்இங்(கு) இருந்திடு வேனை அறிகிலிரோ**
**மாதவம் சேரும் கடிகா நகரருள் மாலை வந்தால்**
**ஏதுஉனக்(கு) ஏதுபலவாறு சொல்லிட ஏந்திழையே** 66

*சீதரனே - திருமார்பனே ; அருட்சேவகனே - அருள் புரியும் ஐயனே; என - என்று; தேறிநிதம் - துணிந்து நாளும்; ஆதரவாய் - அன்பாக; இங்கு இருந்திடுவேனை - இருக்கும எளியேனை; அறிகிலிரோ - தெரிந்து கொள்வீர் இல்லையா; மாதவம் சேரும - பெரும் தவசு கூடும; கடிகாநகர் - கடிகைப் பதியிலிருந்து; அருள் மாலை வந்தால் - கிருபை சேர் மாலை (ஆரம்) வரின்; ஏது உனக்கு ஏது பலவாறு சொல்லிட-என்ன உன்பால் காரணம் பலவகை கூறுவது; ஏந்திழையே-தலைவியே; (இப்பாடல் அகத்துறை. பாங்கி கூற்று)*

**ஏந்திழை யேஒரு மெய்க்கன(வு) உண்(டு)அங்(கு)**
**இசைத்திடுவேன்**
**போந்தனன் ஓர்எழிற் புண்ணியன் அன்னவன் பூம்பொழில்சூழ்**
**வாய்ந்தநற் பேர்க்கடி காநகர் வாழும் மணிவண்ணன் என்(று)**
**ஆய்ந்தனன் கண்டனை அன்றோ சுகமிவை ஆகுதற்கே** 67

*ஏந்திழையே-பலவகை அணிகள் தரித்த பெண்ணே; ஒரு-ஒப்பற்ற; மெய்க்கனவு உண்டு-உண்மையான சொப்பனம்உளது; அங்கு இசைத்திடுவேன் - அவ்விடம் கூறுவேன்; போந்தனன் ஓர் எழிற் புண்ணியன் - (கனவில்) ஒரு அழகிய அறமூர்த்தி வந்தனன்; அன்னவன் - அவன்; பூம்பொழில் சூழ் வாய்ந்த - பூஞ்சோலை சூழப்பெற்ற; கடிகாநகர் வாழும்-திருக்கடிகைப் பதியில் வசிக்கும்; மணிவண்ணன் என்று - கரிய மாணிக்க வடிவன் என; ஆய்ந்தனன் கண்டனை - தேர்ந்தேன் கண்டாயல்லவா; சுகம் இவை ஆகுதற்கே - இவை இன்பமே ஆவதற்காம்; (அகத்துறை. தலைவி பாங்கியிடம் தான் கண்ட கனவு நலம் உரைத்தது)*

**ஆகுற்ற தம்வினை கொண்(டு)அலை வார்இந்த ஆசைஎலாம்**
**போகுற்ற போது புலன்அறி யார்இந்தப் பூமிஇடை**

நாகுற்ற தண்பனை சூழ்கடி காநகர் நம்பனையே
வாகுற்ற மாமலர் கொண்(டு)ஏத் திடாது வருந்துவரே 68

*இந்தப் பூமி இடை-இவ்வுலகத்தில்; நாகுற்ற - எருமைகள் சேரும்; தண்பனை சூழ் - குளிர்ந்த பனைகள் சுற்றி உள்ள; கடிகாநகர் நம்பனையே - திருக்கடிகாசலப்பதித தலைவனையே; வாகுற்ற மாமலர் கொண்டு - அழகுள்ள ஒளிசெய் புஷ்பங்களினால்; ஏத்திடாது - வழிபாடு செய்யாமல்; ஆகுற்ற - ஆய ;தம் வினைகொண்டு - தம் செயல் கொண்டு; அலைவார் - திரிவார்கள்; இந்த ஆசை எலாம - இவ்விருப்பங்கள் யாவும்; போகுற்ற போது - அகன்று செல்கையில; புலன் அறியார்-அறிவு உணர்வற்றுப் போவார்களாகி; வருநதுவர்-துயர் அடைவார்கள்; ஏ - அசை,*

துவரான வாய்உடைச் சோதைமின் னாள்அருள் தோய்சுதனாம்
பவம்மாற அந்தணர் பாவங்கள் ஓடநற் பாண்டவர்தம்
தவம்மீற வந்தவன் தண்கடி காநகர்த் தம்பெருமான்
அவம்மாற வந்(து)அருள் அற்புத னேநலம் ஆற்றிடுமே 69

*துவர் ஆன - பவளம் போன்ற; வாய் உடை - வாயினைக் கொண்ட; சோதை மின்னாள் - யசோதையாம் மின்னல் அனையாளின்; அருள்தோய் - அன்பில் மூழ்கிய; சுதனாம் - மகனாம் கண்ணன்; பவம் மாற - பிறவி நீங்க; அந்தணர் - மகம்புரி மறையோர்களின்; பாவங்கள் ஓட - தீவினைகள் அகலவும்; நற்பாண்டவர்தம் - நல்லவர்களாம் பாண்டவர்களின்; தவம் மீற - முயற்சி அதிகரிக்க; வந்தவன் - சகாயனாகத் தோன்றியவன்; தண்கடிகாநகர்தம் - தண்மைசேர் கடிகைப் பதியின்; பெருமான் - பெருமானை; அவம் மாற-துயரம் நீங்க; வந்து அருள் - தோன்றி அருளும்; அற்புதனே - திருமாலே; நலம் ஆற்றிடும் - நன்மை புரியும்; (இப்பாடல் அகத்துறை; தலைவி தலைவன் நலம் பாராட்டுவது)*

**ஆற்றிடும் ஐம்புலன் கொண்(டு)அலைங் தேபுவி ஆனஎல்லாம்**
**தோற்றி அழிந்திடும் என்றே அறிவு துணிதல் இன்றி**
**மாற்றரும் பேத வகையால் மனம்தடு மாறிநின்று**
**கூற்றினுக்(கு) ஆவர் கடிகா நகர்ப்புகழ் கூறிலரே** 70

ஆற்றிடும் - செயல் புரியும்; ஐம்புலன் கொண்டு - பஞ்சேந்திரியங்களினால்; அலைந்தே - திரிந்தே; புவி ஆனஎலாம் - பூமியில் உள்ள அனைத்தும்; தோற்றி - தோன்றி; அழிந்திடும் என்றே - நீங்கும் எனவே; அறிவு துணிதல் இன்றி- அறிவால் உறுதி செய்தல் இல்லாமல்; மாற்றரும் - மாற்ற இயலாத; பேத வகையால் - வேறுபாடுகளின் வகைகளால்; மனம் - உள்ளம்; தடுமாறி நின்று - குழம்பி இருந்து; கடிகா நகர்ப் புகழ் - திருக்கடிகை நகரின் மேன்மை; கூறிலரே - செப்பாதவர்களே; கூற்றினுக்கு ஆவர் - யமனுக்கு உரியவராவார்கள்.

**கூறரு மேனியன் கோகனத் தோனிவர் கூறரிய**
**தேறரு மாமறைக்(கு) எட்டாத வன்செகம் ஏழுமுனம்**
**நீறுஉறு மாறுசெய்(து) உண்டோன் கடிகையில்**
**நேர்பவர்க்(கு)**
**ஆறுறும் அஞ்சுறும் வெம்பா தகங்களும் அஞ்சுறுமே** 71

கூறு அரு மேனியன் - ஒரு கூறு உமைக்களித்த மெய்யன் சிவன்; கோகனத்தோன் - மலரவன்; இவர் - இத்தெய்வங்கள்; கூறரிய - செப்புதற்கரிய; தேறரு - ஆய்தற்கு அருமையான; மாமறைக்கு - பெரிய வேதங்களுக்கு; எட்டாதவன் - அகப்படாதவன்; செகம் ஏழும் - ஏழு உலகங்களையும்; முனம் - பண்டு; நீறு உறுமாறு செய்து - சாம்பலாகுமாறு செய்து; உண்டோன் - அருந்தியவன்; கடிகையில் - திருக்கடிகைப் பதியில்; நேர்பவர்க்கு-வழிபடுபவர்களுக்கு; ஆறுறும்- வழி சேரும்; அஞ்சுறும் வெம்பாதகங்களும் - பஞ்சமா பாதகங்களும்; (கொலை, பொய், களவு, கள்ளுண்ணல், குருநிந்தை) களவு, பொய், காமம், கோபம், கொலை என்பர் சேக்கிழார்) அஞ்சுறும் - அச்சம் அடையும்;

**அஞ்சாம் வினைகொண்(டு) உழல்வார்க்கு நற்கதி**
**ஆய்ந்திடுங்கால்**
**வெஞ்சாப வீர விசையனுக் காகமுன் மேதினியில்**
**தஞ்(சு)ஆரும் கீதை உபதேசம் செய்(து)அருள் தற்பரனை**
**செஞ்சாற் கடிகையிற் போற்றிட லேயிது நிச்சயமே** 72

அஞ்சு ஆம் வினை கொண்டு - மெய், வாய், கண், செவி, நாசி என்ற பஞ்சேந்திரியங்களின் செயல்களால்; உழல் வார்க்கு - சுழல்பவர்களுக்கு; நற்கதி - நல்ல நிலைமை; ஆய்ந் திடுங்கால் - ஆராயின்; வெஞ்சாப வீர விசையனுககு ஆக - கொடுமையான வில்வீரன அருச்சுனனுக்காக; முன் - பண்டு (குருக்ஷேத்திரப் போர்க்களத்தில்); மேதினியில்-உலகில்; தஞ் சாரும் - பெருமை பொருந்திய; கீதை உபதேசம் செய்தருள்- பகவத் கீதையைப் போதனைசெய்து கருணை புரிந்த; தற்ப ரனை-திருமாலை; நெஞ்சால் - மனத்தால்; கடிகையில்- திருக்கடிகாசலத்தில்; போற்றிடிலே-வழிபடிலேயாம்;இது நிச் சயம் - இஃது உறுதி; நற்கதி ..தற்பரனை நெஞ்சாற் கடிகை யில் போற்றிடலே என்க;

**சயம்ஈ(து) எனநம்பி யோர்வழி யேமனம் சார்ந்திடவே**
**நயம்ஈ(து) எனஅறி யா(து)உழல் வீர்இந்த நானிலத்தில்**
**வயமூறும் வீர நரகோ ளரிஎன வாய்ந்தவன்சீர்**
**அயமூறும் நற்கடி காநகராளனை ஆயுமினே** 73

சயமாது என நம்பி - இதுவே வெற்றி என விசுவாசம் கொண்டு; ஓர் வழியே - ஒரே மார்க்கத்தில, மனட - சிந்தை; சார்ந்திடவே - பொருந்திட; நயம் ஈது என - இன்பம் இது என அறியாது; உழல்வீர் - குழம்புபவர்களே; இந்த நானிலத் தில் - இந்த உலகத்தில்; வயம் ஊறும் வீர - வெற்றி பெருகும் வீரமுள்ள; நரகோளரி என - நரசிங்கப் பெருமாள் எனன; வாய்ந்தவன் - பொருந்தியவன்; சீர் அயமூறும் - சிறப்பான திருவிழாப் பெருகும்; நற்கடிகாநகராளனை - நல்ல திருக் கடிகைப் பதியானை; ஆயுமினே - தேறுங்கள்.

**ஆய்ந்தவர்க்(கு) எட்டரும் ஆரணம் தேரும் அவரும்நயம்**
**சார்ந்தமெய் மோன ஒழுக்கமும் கொண்ட தவத்தவரும்**
**ஏய்ந்திடும் நற்சுகம் எய்திட லாம்நல் எழில்இசையே**
**வாய்ந்த கடிகை நகர்அரு ளாளனை மன்னுமினே** 74

ஆய்ந்தவர்க்கு - தேர்ந்தவர்களுக்கு; எட்டரும் - அடை தற்கு அரிய; ஆரணம் - வேதங்கள்; தேரும் அவரும் - ஆய்ப வர்களும்; நயம் சார்ந்த - நன்மை கூடிய; மெய் - உண்மை;

மோன ஒழுக்கமும் கொண்ட - சாத்வீக நடையும் சேர்ந்த; தவத்தவரும் - முனிவர்களும்; ஏய்ந்திடும் - பெற்றிடும்; நற் சுகம் - நல் இன்பம்; எய்திடலாம் - பெற்றிடலாம்; எழில் இசையே - சிறந்த புகழே; வாய்ந்த - அமைந்த; கடிகை நகர் - கடிகைப்பதி; அருளாளனை - அருளாட்சி புரிபவனை; மன்னுமின் - அடைவீர்; ஏ - அசை.

**மன்னிய மாயை மகன்ஆய் அருவாய் மகிதலத்தில்**
**பொன்இயல் சோதிப் பொலிவாகி நின்று பொலிவுறுமால்**
**மின்இயல் சோதி வடிவாகி என்றும்மெய் விண்நிகரும்**
**துன்னும் கடிகை நகரா ளரிபுகழ் சொல்பவனே** 75

மன்னிய - விளங்கிய; மாயை மகனாய் - மாயா தேவி (காளி) யின் புதல்வனாகி; அருவாய் - உருவமற்று; மகிதலத்தில் - பூமியில்; பொன் இயல் சோதிப் பொலிவாகி நின்று - அழகிய இயல்பான ஒளியின் மிகுதியாகி இருந்து; பொலிவுறும் - எழில் உறும்; ஆல் - அசை; மின் இயல் சோதி வடிவாகி - மின்னலைப் போல இயங்கும் பிரகாச உருவாகி; என்றும்-எப்போதும்; மெய் விண் நிகரும்-தேவலோகம் ஒக்குமாறு; துன்னும் - விளங்கும்; கடிகை நகர் - கடிகாசலத் திருப்பதி; ஆளரி புகழ் - நரசிங்கப் பெருமாள் சீர்த்தி; சொல்பவனே - கூறுபவனே;

**சொல்லற்(கு) அரிய தொகைகொண்டு நாளும் தொடர்ந்(து)உனையே**
**வெல்லற்(கு) அரிய வினைவீட்டு மாறிந்த மேதினியில்**
**மல்லுக்(கு) உரிய புயத்தாய் உனைஅன்றி மற்றவரைச்**
**சொல்லற்(கு) உரியர் எவர்கடி காசலத் தூயவனே** 76

சொல்லற்கு அரிய - கூறுதற்கு இயலாத; தொகை கொண்டு - காணிக்கைத் தொகுதியால்; தொடர்ந்து உனையே - பின் தொடர்ந்து நின்னையே; வெல்லற்கு அரிய - வெற்றி காண அரியதாம்; வினைவீட்டு மாறிந்த மேதினியில் - ஊழினை வீழ்த்தும்படி இவ்வுலகில்; மல்லுக்குரிய புயத்தாய் - வலிமைக்கேற்ற தோளினாய்; உனை அன்றி - உன்னையல்லாமல்; மற்றவரை - பிறரை; கடிகா

சலத் தூயவனே - கடிகை நகர் இறைவனே; சொல்லற்கு - கூறுதற்கு; உரியர் - உள்ளார்; எவர் - யாவர் உண்டு; இல்லை என்றபடி;

**தூய்தரு முத்தழல் ஓம்பி அவிகள் சொரிந்துநிதம்**
**ஆய்தரு மாமறை எல்லாம் அறிந்தும் அறிகிலராம்**
**வேய்தரும் பூம்பொழில் சூழ்கடி காநகர் மேவி அருள்**
**தாய்நிகர் ஆளரி நாதனை ஏத்தித் தணிந்திலரே** 77

தூய்தரு - பரிசுத்தம் அளிக்கும்; முத்தழல் - ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினீயம் என்ற மூன்று அக்கினிகளை; ஓம்பி - வளர்த்து; அவிகள் சொரிந்து - நெய் ஆகுதி சொரிந்து; நிதம்-நாளும்; ஆய்தரு மாமறை எல்லாம்- தேரும் வேதங்கள் அனைததுமே; அறிந்தும் - உணர்ந்தும்; அறிகிலராம் - உணராதவர்களாம: வேய்தரும் பூம்பொழில சூழ் - அழகு தரும் பூஞ்சோலை சூழும்; கடிகாநகர் மேவி- கடிகைப்பதி சென்று; தாய்நிகர் - அன்னை ஒத்த; ஆளரி நாதனை - நரசிங்கப் பெருமாளை; ஏத்தி - தொழுது; தணிந்திலர் - பணிந்திலர்; ஏ - அசை.

**தணியாத வெங்கதிர் வீசலின் வெண்கதிர் தான்எனவே**
**மணினாற நின்றவர் சொல்வ(து)என் னோமழை மாங்குயிலே**
**விணினார் புகழ்க்கடி காநகர் மேவிய வேதியன்பால்**
**கணியார் அரும்குல்லை மாலைகொண்(டு) ஆற்றுமின்**
**காதலித்தே** 78

தணியாத வெங்கதிர் வீசலின்-குறையாத வெம்மையான கிரணங்களை வீசுதலால்; வெண்கதிர்தான் எனவே - சூரியன் என; மணில் நாற நின்றவர் - பூமியில் பதனழிய இருந்தவர்கள்; சொல்வது என்னோ - கூறுவது யாதோ; மழை மாங்குயிலே - மாமரத்துள்ள முகிலனைய கோகிலமே; விணினார் - வானோர்கள்; புகழ் - சிறக்கத் துதிக்கும்; கடிகா நகர் மேவிய - கடிகைக் கோயிலில் இருக்கும்; கணிஆர் - கண்ணிகள் பொருந்திய; அரும் - அரிய; குல்லை மாலை கொண்டு - துளவத் தார் கொண்டு; ஆற்று

மின் காதலித்தே - அன்போடு வெம்மை தணிவிப்பீர்; (இப் பாடல் அகத்துறை. குயில்விடு தூது)

**காதலிக்(கு)ஆய்அன்(று) அணைகோலிச் சென்று கருங்கடலை**
**மாதலி தேர்விட ராவணன் மாள வடிசரத்தால்**
**நோதல்இல் லாமல் அருள்ஆ ளரிஎனும் நோன்மையன்தன்**
**ஏவலில் நின்று திரிவீர் நலத்திடை எய்துதற்கே** 79

காதலிக்காய் - மனைவி சீதா தேவிக்காக; அன்று - முன்பு; கருங்கடலை - கரிய சமுத்திரத்தை; அணைகோலிச் சென்று - சேது அணை கட்டிப் போய்; மாதலி தேர்விட - இந்திரன் அனுப்பிய தேரை அவன் சாரதி மாதலி செலுத்த; வடிசரத்தால் - நன்கு ஆக்கப் பெற்ற கணையால்; ராவணன் மாள - இலங்கேசுவரன் இராவணன் இறக்க; நோதல் இல் லாமல் அருள் - துயரமின்றி அருள் புரிந்த; நர ஆளரி எனும் - நரசிங்கம் என்னும்; நோன்மையன் தன் - பெருமை உடைய வனின்; ஏவலில் நின்று - பணிவிடை புரிந்து; நலத்திடை எய்து தற்கே - நன்மையில் சார; திரிவீர் - அலைவீர்கள்;

**கே(டு)ஆன வாழ்வை நிசம்என்று நம்பிக் கிளர்பவத்தால்**
**வீ(டு)ஏகு மாறு நெறிசேர் கிலாது விதிபிறழ்ந்து**
**மாடாய்த் திரிந்து கெடுவீர் நரசிம்ம மாதவனைப்**
**பீடுஆர் துளவத் திருமாலை வாழ்த்துமின் பேசுமினே** 80

கேடு ஆன - அழியுந் தன்மையதான; வாழ்வை - ஜீவிதத்தை; நிசம் என்று நம்பி - உண்மை என விசுவாசம் கொண்டு; கிளர்பவத்தால் - வளரும் பிறவியால்; வீடு ஏகு மாறு நெறி - முத்தியமையும் வழியை; சேர்கிலாது - சேரா மல்; விதி பிறழ்ந்து - உரிய நெறி மாறி; மாடாய்த் திரிந்து - (செக்கு) மாடாக அலைந்து; கெடுவீர் - அழிபவர்களே; நரசிம்ம மாதவனை - துவாதச நாமங்களுள் ஒன்றான மாத வன் என்ற பேருடைய நரசிம்ம மூர்த்தியை; பீடு ஆர் - பெருமை பொருந்திய; துளவ - துளசி மாலை அணியும்; திரு மாலை - மகாவிஷ்ணுவை; வாழ்த்துமின் - போற்றி செய் வீர்; பேசுமினே - அவன் புகழ் பேசுங்கள்;

**பேசுற்ற பூங்கிளிக்(கு) என்சொல்லு கேன்நயம் பேசிமறை**
**கூசுற்(று) உரைப்பதற்(கு) அரிவரி(து) ஆய குணம்கடந்த**
**தே(சு)உற்ற வண்மை நரவா ளரிஎனச் செப்புகின்ற**
**ஆ(சு)அற்ற சீர்த்திக் கடிகா சலன்பெயர் அன்றிமற்றே 81**

*பேசுற்ற பூங்கிளிக்கு - மலர் போல் மென்மையுள்ள கிளி மொழியாளுக்கு; நயம் பேசி - உபசாரமாகப் பேசி; என் சொல்லுகேன் - வேறு என்ன கூறுவேன்; மறை - வேதங்கள்; கூசுற்று-நாணமுற்று; உரைப்பதற்கு-கூறுதற்கு; அரிவரிதாய- மிக அரிதான; குணங்கடந்த - குணங்களுக்கு அப்பாற்பட்ட; தேசு உற்ற - சோதி உடைய; வண்மை - புகழ் மிக்க; நர ஆளரி என - நரசிம்மம் என்று; செப்புகின்ற - கூறுகின்ற; ஆசற்ற - குற்றமற்ற; சீர்த்தி - பெருமபுகழ்சேர்; கடிகாசலன் பெயர் அன்றி - திருக்கடிகையாளன் பெயரை அல்லாது; மறறு - ஏ அசை. (இஃது அகத்துறை. நற்றாயிரங்கல்)*

**மற்(று)ஒன்று வேண்டி மறந்தேனும் ஒர்பொருள் மாமனத்தே**
**உற்றிடு மோஅவை உற்றாலும் என்மனம் ஒப்பிடுமோ**
**சிற்றவை கூறும் மொழியால் வனத்திடைச் செல்லும்பிரான்**
**குற்றமில் ஆளரி நாதனை வாழ்த்துவன் கோதறவே 82**

*மற்றொன்று - பிறிதொன்றினை: வேண்டி - ஆசைப் பட்டு; மறந்தேனும் - நினைவின்றிக் கூட; ஓர் பொருள் - ஒரு வஸ்து; மாமனத்து - பெரிய மனத்தினில்; உற்றிடுமோ - சேர்ந்திடுமோ; அவை - அவ்வஸ்துக்கள்; உற்றாலும்- தானே வந்து சேர்ந்தாலும்; என் மனம் - எளியேன் உள்ளம்; ஒப் பிடுமோ - ஒப்புக் கொள்ளுமோ, ஏற்குமோ; சிற்றவை கூறும்- சிற்றன்னை செப்பும்; மொழியால் - உரையால் (ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே யாள நீபோய், தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவம் மேற்கொண்டு, பூழிவெங் கானம் நண்ணி'' என்பது கேயி உரை-கம்பன்) வனத்திடை-காட் டிற்கு; செல்லும்-போகும்; பிரான்-இராமனாகிய தலைவன்; குற்றமில் - ஆசு அற்ற; ஆளரி நாதனை - நரசிங்கப் பெருமாளை; வாழ்த்துவன் கோது அற - என்பால் உள்ள குற் றங்கள் அகல வழிபடுவேன்; (கவிஞன் தன்னை உளப்படுத்திப் பாடியது)*

**கோ(து)அற்ற ஞானம் தழைத்(து)ஓங்கு மாறு குவலயத்தில்**
**வே(து)உற்ற ஐம்புலன் தன்னால்வெம் பாவங்கள் மேவிநிதம்**
**போ(து)உற்ற சில்பகல் அற்றே எமபுரம் போய்விடுவீர்**
**தாதுற்ற பூந்தொடை ஆளரி நாதனைச் சாற்றுமினே 83**

*குவலயத்தில் - பூமியில்; வேது உற்ற - வெய்து அடைந்த; ஐம்புலன் தன்னால் - பஞ்சேந்திரியங்களால்; வெம்பாவங்கள் மேவி - கொடிய தீவினை அடைந்து. நிதம் - நாளும்; போதுற்ற - வந்து அடையும்; சில்பகல் - சில காலம்; அற்றே- நீங்கி; எமபுரம் - யமலோகம் (நரகம்); போய்விடுவீர் - சென்றுவிடுவீர்கள்; கோதற்ற - குற்றமில்லாத; ஞானம் - அறிவு; தழைத்து ஓங்குமாறு - செழித்து உயரும்படி; தாதுற்ற - மகரந்தம் சார்ந்த அல்லது இதழ்கள் கொண்ட; பூந்தொடை - மலர்மாலை பூண்ட; ஆளரிநாதனை-நரசிங்கப் பெருமாளை; சாற்றுமினே - துதி கூறுங்கள்;*

**சாற்றுக் கரும்பின் மொழியார் மயலிடைத் தான்தளர்ந்து**
**சோற்றுக்(கு) அலைந்து திரிவீர் கடிகைச் சுராட்(டு)எனும்பேர்**
**ஊற்றுக் கருணைப் பெருமான் நரகரி உத்தமனை**
**ஏற்றுத் துதித்துப் பணிந்தே புகழ்ந்திடும் இன்புறவே 84**

*சாற்றுக் கரும்பின் மொழியார் - ரசமுள்ள கரும்பினை ஒத்த இனிய உரை பேசும் மகளிர்; மயலிடைத்தான் - மோகத்திடையேதான்; தளர்ந்தே - மெலிவுற்று; சோற்றுக்கு - உணவுக்கு; அலைந்து திரிவீர் - குழம்பி அலைபவர்களே; கடிகை - திருக்கடிகைப்பதி; சுராட்டு எனும் - திருமால் என்னும்; பேர் ஊற்றுக் கருணைப் பெருமான் - கருணையாம் பெருவெள்ளம் கொண்ட இறைவன்; நரகரி - நரசிம்மம்; உத்தமனை - பெரியவனை; ஏற்றுத் துதித்துப் பணிந்தே புகழ்ந்திடும் - இறைவனாகக் கொண்டு தொழுது வணங்கிப் பெருமை சாற்றுவீர்; இன்புஉறவே - மகிழ்ச்சி கொளவே அல்லது பேரின்பம் அடையவே;*

**இன்(பு)அற்ற துன்பமும் துன்(பு)அற்ற இன்பமும்எப்பொழுதும்**
**அன்(பு)அற்ற போதில் எவர்க்கும்உண் டோவுளம்**
**ஆய்ந்திடுங்கால்**

**வம்(பு)உற்ற போதினிற் சூழ்பொழில் மேவிய வண்கடிகை**
**முன்புற்ற சீர்நர சிம்மமென் மூர்த்தியை முன்னுமினே** 85

*இன்பற்ற துன்பமும் - மகிழ்வில்லாத துயரமும்; துன்பற்ற இன்பமும் - துயரற்ற சுகமும்; எப்பொழுதும் - எந்தக் காலத்தும்; அன்பு அற்ற போதில் - நேசம் இல்லாத சமயத்தில்; எவர்க்கும் உண்டோ - யாருக்காவது உளதோ ('துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது-கம்பன்); உளம்ஆய்ந்திடுங்கால்- உள்ளத்தில் தேர்ந்திடும்போது; வம்புற்ற போதினில் - மணமுள்ள மலர்களால்; சூழ் - பரவியுள்ள; பொழில் மேவிய - சோலைகள் பொருந்திய; வண்கடிகை - எழிற்கடிகைப் பதியில்; முன்புற்ற - எதிர் விளங்கும்; சீர் - சிறப்புள்ள; நரசிம்மமென் மூர்த்தியை - நரசிங்க வடிவப் பெருமாளை; முன்னுமினே - கருதுங்கள்;*

**முன்னரும் பேதத் துறைகொண்டு மாழ்கிஇம் மூதுலகில்**
**தன்இயல் மாறிக் கெடுவீர் சகல தருமங்களும்**
**மன்னிய சோலைக் கடிகா சலநகர் வாழும்அருள்**
**பொன்அவிர் ஆளரி சேவடிக் கேஅன்பு பூணுநிரே** 86

*முன்அரும் - நினைக்க இயலாத; பேதத்துறை கொண்டு- முரண்பட்ட செய்கை கொண்டு; மாழ்கி - மயங்கி; இம்மூதுலகில் - இப்பழம்பெரும் பூமியில்; தன் இயல் - தன் தன்மை (சுபாவம்); மாறிக் கெடுவீர் - வேறுபட்டு அழிபவர்களே; சகல தருமங்களும் - அனைத்து அறங்களும்; மன்னிய- பொருந்திய; சோலை - பூங்காவுடைய; கடிகாசல நகர் வாழும் - திருச்கடிகைப் பதியில் கோயில் கொண்டு; அருள் - விளங்கும்; பொன் அவிர்-எழில் ஒளிரும்; ஆளரி சேவடிக்கே- நரசிங்கப் பெருமாள் சிவந்த திருவடிகளுக்கே; அன்பு - பக்தி; நிர் - கொள்ளுங்கள்: ஏ - அசை.*

**பூண்ஆரம் பூண்(டு)அருள் மக்களும் வாழ்வும் புகலும்எல்லா**
**வேணா ரமும்அவை வீணாகு மேஇந்த மேதினியில்**
**பேணார்கள் அஞ்ச நரசிம்ம மென்னப் பெயரடைந்த**
**மாண்ஆர் கடிகா சலத்திறை நற்றுதி வண்புகழே** 87

பூண் ஆரம் பூண்டு - அணிகலனாக மாலை பூண்டு; அருள் - பெற்ற; மக்களும் - குழந்தைகளும்; வாழ்வும்-வாழ்க்கையும்; புகலும் - கூறும். எல்லா - அனைத்து; வேள் நாரமும் - விரும்பும் சுற்றமும்; அவை வீணாகுமே - அவை எல்லாம் பாழாகுமே; இந்த மேதினியில் - இவ்வுலகில்; பேணார்கள் - பகைவர்கள்; அஞ்ச - அச்சம் அடைய; நரசிம்மம் என்ன - நரசிங்கப் பெருமாள் என்ற; பெயர் அடைந்த - நாமம் பெற்ற; மாண்ஆர் - மாண்பு பொருந்திய; கடிகாசலத் திறை - திருக்கடிகைப்பதிக் கடவுளின்; நற்றுதி - நல்ல வழிபாடு (மட்டுமே) வண்புகழ் - மெய்ப்புகழாகும்; ஏ-அசை;

**புகழ்கொண்டு நாளும் இருந்(து)உயர் வேம்எனப் பூதலத்தே**
**இகழ்கொண்டு மேவித் திரிவீர் கதிபெறல் எப்படியோ**
**நகைகொண்ட தாமரைக் கண்ணன் நரகரி நாதன்எனும்**
**வகைகொண்ட சீர்த்திக் கடிகை நகரனை மன்னுமினே** 88

புகழ் கொண்டு - மேன்மை பெற்று; நாளும் இருந்து - என்றும் விளங்கி; உயர்வேம் என - ஓங்குவோம் என்று; பூதலத்தே-பூலோகத்தில்; இகழ் கொண்டு மேவி - நிந்தனையடைந்து விளங்கி; திரிவீர் - அலைபவர்களே; கதிபெறல் - மோட்சம் அடைதல்; எப்படியோ - எவ்விதமோ; நகை கொண்ட - புன்சிரிப்புடைய; தாமரைக்கண்ணன் - மலர் விழியன்; நரகரி நாதன் எனும் - நரசிங்கப் பெருமாள் என்னும்; வகை கொண்ட - முறைமை பெற்ற; சீர்த்தி - மிகு சிறப்புடைய; கடிகை நகரனை-திருக்கடிகாசலத்தில் கோவில் கொண்டவனை; மன்னுமின் - அடைவீர்; ஏ - அசை;

**மன்னற்(கு) அரிய இளந்தென்றல் வீசஒண் மாழைஎன**
**மின்உற்ற சோதிகொள் மெய்வெயர் தோன்ற வெதும்பிஅகம்**
**தென்உற்ற சோலை திகழ்கடி காசலச் சேவகனாம்**
**கொன்உற்ற ஆழிப் படைக்கல நாதனைக் கூறுவனே** 89

மன்னற்கு அரிய - அடைவதற்கு அருமையான; இளந் தென்றல் - மந்தமாருதம்; வீச - பரவ; ஒண்மாழை என - ஒளிசேர் எழில் என்ன; மின் உற்ற சோதிகொள் மெய் - பளிச்சிடும் பிரகாசம் கொள்ளும் மேனியில்; வெயர் தோன்ற -

வியர்வை அரும்பிட; வெதும்பி அகம் - மனம் வாட்டம் அடைந்தது (என); தென் உற்ற - அழகு அடைந்த; சோலை திகழ்-பொழில்கள் விளங்கும்; கடிகாசலச் சேவகனாம்-திருக் கடிகைத் தலைவனாம்; கொன் உற்ற - பெருமை சார்ந்த; ஆழிப் படைக்கல நாதனை - சக்ராயுதம் கொண்ட தலைவன் பால்; கூறுவனே - உரைப்பேன்; (இப்பாடல் 'அகத்துறை; தென்றலைப் பழித்தல்)

**கூறுகொண் டேபவம் மாறுகொண் டேவினைக்**
**கோதுகொண்டே**
**ஊறுகொண் டேநசை ஆறுகொண் டேமனம் ஓசைகொண்டே**
**வீறுகொண் டேமற வேரிகொண் டேகுல்லை மேவுஅணியல்**
**நாறுதிண் தோளன் நரசிம்ம நாதனை நண்ணிலரே 90**

வீறு கொண்டே மற - வீரத்தின் பெருமை கொண்டு; வேரி கொண்டே - வாசனை கொண்டு; குல்லை மேவு அணி யல் - துளவு சேர் மாலை; நாறு - மணக்கும்; திண்தோளன்- வலிய புயத்தினன்; நரசிம்ம நாதனை - நரசிங்கப் பெருமா ளாம் தலைவனை; கூறுகொண்டே - பங்குகொண்டு; பவம் மாறுகொண்டே - பிறவிகள் மாறுதல் கொண்டு; வினைக் கோது கொண்டே - வினைகளின் குற்றம் கொண்டு; ஊறு கொண்டே - துன்பம் கொண்டு; நசை ஆறுகொண்டே - ஆசை வழிக்கொண்டு; மனம் - உள்ளம்; ஓசை கொண்டே - இசைவு கொண்டு; நண்ணிலர் - அடைந்திலர்; ஏ - அசை;

**நண்ணிலர் தீயவை என்(று) அறிந் தாலிந்த நற்புவியில்**
**கண்ணிலர் வேறு பொருள்மீதும் நாளும் கருத்தின்இடை**
**மண்மிசை நற்கடி காநகர் வாழும் நரமடங்கல்**
**எண்ணம்உற் றேதவம் நண்ணி உற்(று)ஏகம் இருப்பவரே 91**

இந்த நற்புவியில் - இந்த நல் உலகில்; தீயவை என்று அறிந்தால் - தீங்கானவை எனத் தெரிந்தால்; நண்ணிலர் - சேரமாட்டார்கள்; கண் இலர் வேறு பொருள் மீதும் - பிற பொருள்களின் மேலும் நாட்டம் கொள்ளார்; நாளும் - எப் போதும்; கருத்தினிடை - மனத்தில்; மண்மிசை - பூமீது; நற் கடிகாநகர் வாழும் - நல்ல கடிகைப்பதிக் கோவிலில் வசிக்கும்;

(நகர்-கோவில்; முக்கட்செல்வன் நகர் வலம் வரினே - புற நானூறு); நரமடங்கல் - நரசிங்கத்தின்; எண்ணம் உற்றே- சிந்தை கொண்டே; தவம் நண்ணி உற்று - தபசில் சேர்ந் தடைந்து; ஏகம் இருப்பவரே - ஒருமையில் இருப்பவர்களே;

இருப்பவர் எங்கும் இலாதவர் பாவத்(து) இருப்பிடத்திற்
பொருப்பவர் யானை புரப்பவர் போதிடைப் போந்தவரோ(டு)
அருப்பறும் அந்தணர் சூழ்ந்(து) ஏத்தும் ஆளரி அப்பனையே
விருப்பம்உற்(று) ஓதி இருப்பவர்க் கேநன்மை வேறிலையே 92

இருப்பவர் எங்கும் - எல்லா இடத்திலும் விளங்குபவர்; இலாதவர் பாவத்து-தீவினைகளில் இல்லாதவர்; இருப்பிடத் தில் - இருக்கும் இடத்திருந்தே; பொருப்பவர் - தாங்குபவர் (காப்பவர்); யானை புரப்பவர் - கசேந்திரனைக் காத்தவர்; போதிடைப் போந்தவரோடு - பிரமனுடன்; அருப்பு அறும் துன்பம் நீக்கிய; அந்தணர் - மறையோர்; சூழ்ந்து - பரவி ஏத்தும் - துதிக்கும்; ஆளரி அப்பனையே - நரசிம்மப் பெரு மாளையே; விருப்பம் உற்று - பிரியம் கொண்டு; ஓதி - செபம் செய்து; இருப்பவர்க்கே - இருப்பவர்களுக்கு; நன்மை வேறு இலையே - நன்மைகள் பிற எதுவும் இல்லை;

வேறுஆன சீவ வதைபுரிந் தேமக வேள்விதனை
மாறா இயற்றி வருவோன் கனகன் வலிஇழக்கக்
கூறாய் உடலம் கெடுமாறு கொல்நர கோளரியை
ஆறாத இன்ப மொடுதினம் வாழ்த்துவர் அன்பர்களே 93

வேறு ஆன - வேறுபட்ட; சீவ வதை புரிந்தே - உயிர்க் கொலை செய்து; மகவேள்விதனை - பெரும் யாகத்தை; மாறா இயற்றி - (முறைக்கு) மாறுபட ஆற்றி; இயற்றி வரு வோன் - செய்து வருபவனாம்; கனகன் வலி இழக்க - இரணியன் பலம் இழந்துபோக; கூறாய் உடலம் கெடுமாறு கொல் - சரீரம் பிளவு பட்டழிய வதைக்கும்; நரகோளரியை - நரசிம்ம மூர்த் தியை; ஆறாத இன்பமொடு - தணியாத மனமகிழ்வுடன்; தினம் வாழ்த்துவர் - தினந்தோறும் போற்றித் துதிப்பவர்; அன்பர்களே - பக்தர்களாம்;

**அன்பொடு ஞானமும் மோனமும் மோனத்(து) அருந்தவமும்**
**வன்பவம் நீக்கும் வலிமையும் வாய்க்கும் வரும்பெரிய**
**துன்பினை ஆற்றி அளித்(து) அருள் ஆழிச் சுடரவனை**
**இன்(பு) அமர் மெய்க்கடி காநகர் அப்பனை ஏத்துமினே** 94

அன்பொடு - பக்தியுடன்; ஞானமும் - அறிவும்; மோனமும் - மௌன நிலை (சும்மா இருத்தல்); மோனத்து - அச் சும்மா இருக்கும் நிலையில்; அருந்தவமும் - அரிய தவசும்; வன்பவம் நீக்கும் - கொடிதான பிறப்பை ஒழிக்கும் தன்மையும்; வாய்க்கும் - கைகூடும்; வரும் - எதிரே வருவதாம்; பெரிய துன்பினை - பெருந் துயரங்களை; ஆற்றி - தணியச் செய்து; அளித்தருள் - காத்து அருளும்; ஆழிச் சுடரவனை - ஒளிசேர் சக்கரமுடையவனை; மெய் இன்பு அமர் - உண்மை மகிழ்ச்சி பொருந்தி இருக்கும்; கடிகாநகர் அப்பனை - திருக் கடிகையில் கோயில் கொண்டுள்ள பெருமாளை; ஏத்துமின் - வழிபடுவீர்; ஏ - அசை,

**நேர்ஒத்த ஆண்மை நிலையாத நெஞ்சம் நினைப்பதனால்**
**வார்ஒத்த மேனி வடிவாம் சரப வகைஉருக்கொள்**
**கார்ஒத்த கண்டன் கசிந்(து)ஓட அருள் கற்பகத்தை**
**சீர்ஒத்த ஆண்மைத் திறலா ளரிதனைச் சிந்திப்பனே** 95

நேர் ஒத்த - நேர்மை அனைய; ஆண்மை - வீரத்தை; நிலையாத நெஞ்சம் - ஸ்திரமற்ற மனம்; நினைப்பதனால் - சிந்திப்பதனால்; வார்ஒத்த மேனி வடிவாம் - புயல் போன்ற உடல் எழில் கொண்ட; சரபவகை உருக்கொள் - சரபப் பட்சி வடிவுகொள்; கார் ஒத்த கண்டன் - கருமை நிகர்த்த கழுத்தினன் சிவன்; கசிந்து ஓட - கரைந்து ஓடுமாறு; வென்று அருள் - வெற்றி கொணடருளும்; கற்பகத்தை - கற்பகத் தரு அனையனை; சீர்ஒத்த - சிறப்பமைந்த; ஆண்மைத் திறல் - மெய் வலிமை உள்ள; ஆளரிதனை - நரசிங்கப் பெருமாளை; சிந்திப்பனே - நினைப்பேன்; (கவிஞர் உளப்பாடு)

**சிந்திக்கும் நல்வினை எல்லாம் அளிக்கும் திறல் அளிக்கும்**
**முந்திக் கருணை முதலாகி நின்(று)எனை முன் அளிக்கும்**

**வந்திக்கும் போது வழிகாட்டும் வீரமெய் வஞ்சகனை**
**அந்திக்குள் ஆவி அழித்தானைப் பாடினற்(கு)**
**அன்(பு)உறவே 96**

*சிந்திக்கும் நல்வினை எல்லாம் - நினைக்கும் நற்செயல் யாவும்; அளிக்கும் - அருளும்; திறல் அளிக்கும் - பலம் தரும்; முந்தி - பழைய; கருணை முதலாகி நின்று-தயையின் வேராக இருந்து; எனை முன் அளிக்கும் - எளியேனை முன்வந்து புரக்கும்; வந்திக்கும்போது - வணங்கும்போது; வழிகாட்டும் - நன்னெறி காண்பிக்கும்; வீரமெய் வஞ்சகனை - வீரமுள்ள உண்மைத் துரோகியை (இரணியனை); அந்திக்குள்-பொழுது சாயும் சந்தியா வேளை கழிவதற்குள்; ஆவி அழித்தானை - உயிரை அழித்தவனை; பாடினற்கு - பாடியவனுக்கு; அன்புறவே - அன்பு பொருந்தவே;*

**பாடு திறல்உடைப் பத்தருக்(கு) எல்லாப் பலன்அளிக்கும்**
**நாடினர்க்(கு) இன்ப நயம்தரும் நன்வினை நன்குதரும்**
**தேடற்(கு) அரிய திருஆ ளரிஎனச் செப்புகின்ற**
**வீடற்ற சோதிக் கடிகா சலத்தனை ஏத்தினர்க்கே 97**

*பாடும் திறல் உடைப் பத்தருக்கு - கவிதை பாடும் வல்லமை உடைய பக்தர்களுக்கு; எல்லாப் பலன் அளிக்கும் - அனைத்துப் பயன்களும் அருளும்; நாடினர்க்கு - சந்நிதியை வந்தடைந்தவர்களுக்கு; இன்ப நயம் தரும் - சுக மேன்மை அளிக்கும்; நல்வினை - நல்ல செயல்களை; நன்கு தரும் - நன்றாக அருளும்; தேடற்கு அரிய - தேடிக் காண அரிதான; ஆளரி என - எழில் நரசிங்கம் என்று; செப்புகின்ற-உரைக்கப் பெறும்; வீடற்ற சோதி - அழியாத பிரகாசத்து; கடிகாசலத்தனை - திருக்கடிகை நாதனை; ஏத்தினர்க்கே - வழிபடுபவர்களுக்கே;*

**ஏத்தினர்க் கும்பவ மாற்றினர்க் கும்முனை இன்பம்உற**
**நாத்தகை ஆர வசைமொழி கூறி நவில்பவர்க்கும்**
**மாத்திகழ் மார்பன்நரஆ ளரிஎனும் மாதவனே**
**காத்தனை வன்பவம் எல்லாம் ஒழியக் கருதினையே 98**

ஏத்தினர்க்கும் - தொழுபவர்களுக்கும்; பவம் மாற்றினர்க்கும் - பிறவியை மாறச் செய்தவர்களுக்கும்; முனை இன்பம் உற - மிக்க மகிழ்வு அடைய; நாத்தகை ஆர - நாக்கு அயர்வுறும்படி; வசைமொழி கூறி - பழிச்சொல் பகர்ந்து; நவில்பவர்க்கும் - உரைப்பவர்களுக்கும்; மாத்திகழ் மார்பன் நர ஆளரி எனும் - லக்ஷ்மி நரசிமமன் என்ற; மாதவனே - திருமாலே; காத்தனை-இரட்சித்தாய்; வன்பவம் எலலாம் ஒழிய-கொடிய பாவங்கள் யாவும் நீங்க; கருதினையே - நினைந்தனையே;

**கருதினை யேல்உனை ஒப்பவர் ஆர்இந்தக் காசினியில்**
**மருதினை வீழ்த்தவன் தாமரைக் கண்ணன் மலர்அடியால்**
**விருதுடை ஏழ்புவி கொண்டோன் நரகரி மெய்த்தவனை**
**அருமறை போற்றரும் அண்ணலைப் போற்றும்**
**அடியரையே 99**

இந்தக் காசினியில் - இவ்வுலகில்; மருதினை வீழ்த்தவன் - மருத மரங்களை வேரற முறித்தவன்; தாமரைக் கண்ணன் - மலர்விழியான்; மலர் அடியால் - மலர்ந்த திருவடிகளால்; விருதுடை - வெற்றியுள்ள; ஏழ்புவி - ஏழு உலகஙகளையும்; கொண்டோன் - ஆட்கொண்டவன்; நரகரி - நரசிம்மப் பெருமாள்; மெய்த்தவனை - சத்திய ரூபனை; அருமறை போற்றரும் - அரிய வேதங்களும் புகழ இயலாத; அண்ணலை - தலைவன் திருமாலை; போற்றும் - புகழும்; அடியரையே - தாசர்களையே; கருதினையேல் - சிந்தித்தால; உனை ஒப்பவர் ஆர் - உனக்கு நிகராவார் எவரே;

**அடியரைப் போதுடன் தந்(து)என வாமணி அங்கனைமார்**
**மிடியரைச் சென்று தொடராமல் நாளும்உன் வேட்கைஉறக்**
**கடியரைக் கொன்(று) அருள் கார்வண்ணனே இந்தக்**
**காசினியில்**
**வடிபுகழ் ஆளரிமாமணி யேஅருள் மாதவனே 100**

அடியரை - தொண்டர்களை; போதுடன்-காலத்துடன்; மலர்களுடன்; தந்து எனவாம் - தந்து என்னவாகும்; மணி அங்கனைமார் - எழிற் பெண்களை; மிடியரைச் சென்று

தொடராமல் - வறியவர்களைப் போய்ப் பின் தொடராது; நாளும் - எப்போதும்; உன் வேட்கை உற - உன்பால் ஆசை அடைய; கடியரை - மூர்க்கரை; கொன்று அருள் - வதைத்து (உலகை) அருளும்; கார்வண்ணனே - மேகவண்ணனே; இந்தக் காசினியில்-இப்புவியில்; வடிபுகழ் - வடித்தெடுத்த புகழ் கொண்ட; ஆளரி மாமணியே - மிக அழகான நரசிம்மனே; அருள் மாதவனே - மாதவப் பெயரோய் அருளுக;

**மாதவத் தால்வரும் மாதவம் என்று வருந்திநிதம்**
**ஒ(து)அவம் செய்து திரிவீர் உமக்(கு) அதில் உள்ளபயன்**
**யாதவ லம்பம் நரஆ ளரிஎனும் அற்புதனே**
**போதவன் போற்றப் புரப்பவன் ஞானம் பொலிந்திடவே** 101

மாதவத்தால் வரும் - பெரும் தவம் புரிவதால் கிடைக்கும்; மாதவம் என்று - இன்பம் என; வருந்தி நிதம் - நாளும் துன்பம் அடைந்து; ஓது - கூறும்; அவம் செய்துதிரிவீர்- வீணானவை புரிந்து அலைபவர்களே; உமக்கு - உங்களுக்கு; அதில் உள்ள பயன் யாது - அதில் கிடைக்கும் பலன் என்ன; அவலம்பம் - பற்றுக்கோடு; நரஆளரி எனும் - நரசிங்கம் என்ற; அற்புதனே - இறைவனே; போதவன் - பிரமன் (மலரோன்); போற்ற - துதிக்க; ஞானம் பொலிந்திட - அறிவு ஒளிர; புரப்பவன் - காப்பவன்; ஏ - அசை.

**பொலிவான மாமறை நல்நெறிப் போக்கைப் புகழ்அறவே**
**நலிமா வலிஉறும் ஆசுரற் காய்ந்(து)எழு நண்ணிமுன்நாள்**
**கலிவா னவர்புகழ்ந்(து) ஏத்திட அட்டவன் காவளங்கள்**
**மலிவார் கடிகைப் பதிஆள் நரகரி மால்தருமே** 102

பொலிவான - சிறப்பான; மாமறை - பெருவேதங்களின்; நல்நெறிப் போக்கை - நல்மார்க்கப் போக்கினை; புகழ் அறவே - சிறப்பு நீங்கவே; நலி - அழிக்கும்; மாவலி உறும் - பெருவலி கொண்ட; ஆசுரற்காய்ந்து - அரக்கனைச் (இரணியனை) சினந்து; எழுநண்ணி - கம்பத்திலிருந்து; முன்நாள் - பண்டு; கலிவானவர் புகழ்ந்து ஏத்திட - கேடுற்ற தேவர்கள் சிறப்பாகப் போற்றிட; அட்டவன் - கொன்றவன்; காவ்ளங்

கள் - சோலைச் செழுமைகள்; மலிவார் - மிகுதி பொருந்திய; கடிகைப் பதி ஆள் - கடிகாசலப் பதியில் விளங்கும்; நரகரி - நரசிங்கப் பெருமாள்; மால் தருமே - வீடு அருளும்;

**மால்பெறு மால்அறு வார்வள மாவரு மால்உறுவார்**
**நீல்உறு பாவ வினைஅறுப் பார்நெடு நீள்நிலத்தில்**
**சூல்இளை சங்(கு)உறும் தண்பணை மாவளம் சூழ்கடிகைப்**
**பால்உறு வார்அருட் பால்உறு வார்அருள் பற்றினரே.** 103

மால் பெறு - வேட்கை பெறும்; மால் அறுவார்-மயக்கம் அழிப்பார்கள்; வளமாவரு - சிறப்பாக வரும்; மால் உறு வார் - பெருமை எய்துவர்; நீல் உறு - கருமை பெற்ற; பாவ வினை - தீமைச் செயல்களை; அறுப்பார் - அழிப்பார்கள்; நெடுநீள் நிலத்தில்-நெடிய பூமியில்; சூல் இளை சங்கு உறும - கருவுற்ற இளஞ் சங்குகள் உற்ற; தண்பணை - குளிர்ந்த பண்ணையின்; மாவளம் - பெரும் செழுமை; சூழ் - வளையும்; கடிகைபால் உறுவார் - கடிகை நகரை அடைபவர்கள்; அருட் பால் உறுவார் - அருளின் பக்கம் சேருவர்; அருள் பற்றினரே- இறையருளைப் பற்றி நிற்பார்கள்;

**பற்றும் தவமும் ஒழுக்கமும் ஞானப் பயனும்மிக**
**உற்றிடும் தீமை ஒழிந்(து)ஓடும் நாளும் உளத்(து)**
**எணுவோர்க்(கு)**
**அற்றம்இல் நற்கடி காசல மாநகர் ஆளரிதாள்**
**பொற்ற கமலத் தகைவாய்ந்(து) அருள்எழிற் பூமலரே** 104

பொற்றகமலத் தகைவாய்ந்து - ஒளிரும் தாமரையின் தன்மை சேர்ந்த; அருள் எழிற் பூ மலரே - அருளும் அழகார் மலர்ந்த பூவனைய; அற்றமில் - அழிவில்லாத; நற்கடிகாசல- நல்ல கடிகை; மாநகர் - பேரூரில்; ஆளரி தாள் - நரசிம்மப் பெருமாள் திருவடியை; நாளும் - என்றும்; உளத்து எணு வோர்க்கு - மனத்தில் நினைப்பவர்களுக்கு; பற்றும் தவமும் - பற்றியுள்ள தவப் பயனும்; ஒழுக்கமும் - நன்னடையும்; ஞானப் பயனும் - அறிவின் பலனும்; மிக உற்றிடும் - மிகவும் அடைந்திடும்; தீமை ஒழிந்து ஓடும்-தீங்குகள் அகன்று செல் லும்; இஃது அந்தாதியின் இறுதிப் பாடல். இப்பாடல் இறுதி

யில் வந்துள்ள பூமலர் என்பதில் உள்ள 'பூ' முதற் பாடலின் முதலாக பூமாதென வந்து மண்டலித்தது.

வாழ்த்து

அடியாரும் வாழி அரங்கரும் வாழி அலைகடல்சூழ்
படியாரும் வாழிஇப் பாவாழி பாவைப் படிப்பவரும்
கடிகா நகரமும் வாழிஎம் மாருதிக் கற்பகமும்
வடிஆர் வரநர கோளரி நேமியும் வாழியவே. 105

அடியாரும் வாழி - தாசர்கள் வாழ்க; அரங்கரும் வாழ்க-சபையில் உள்ளார்களும் வாழ்க; அலை கடல் சூழ் - திரை சேர் கடல்சூழ்ந்த;படியாரும் வாழி-பூஉலகினரும் வாழ்க;இப் பாவாழி - இந்தப் பாடல்கள் வாழ்க; பாவைப் படிப்பவரும் - பாடலைப் படிப்பவர்களும்; கடிகா நகரமும்-கடிகைப் பதியும்; வாழி - வாழ்க; எம்மாருதிக் கற்பகமும் - எமது ஆஞ்சநேய ராம் கற்பகமும்: வடி ஆர் - கூர்மை பொருந்திய; வரநர கோளரி - வரமருளும் நரசிங்கப் பெருமாளின்; நேமியும் - சக்கராயுதமும்; வாழிய - வாழ்க; ஏ - அசை, இப்பாடல் நூலின் வாழ்த்தாகும்.

சபை வணக்கம

ஊமன் உழறுமொழி ஒப்பாக ஓதிஇந்தப்
பாமதுரப் பாவலர்கள் பார்த்(து) இகழார்—தேமருதார்
ஆழிநர கோளரிதாள் அன்பாக ஓர்ஏழு
நாழிகைக்குள் பாடினதால் நன்கு. 106

ஊமன் - பேச இயலா ஊமை; உழறுமொழி ஒப்பாக - பிதற்றும் உரை போல (உளறு-உழறு எனலாயிற்று; பாண்டி நாட்டில் 'ள'கரமும் 'ழ'கரமும் ஒருபோல ஒலிப்பர். எழுதும் போதும் 'ள'கரத்துக்கு 'ழ'கரமும் 'ழ'கரத்துக்கு 'ள'கரமும் உபயோகிப்பார்கள்); ஓதி இந்தப் பா - கூறிய இப்பாடல் களை; தேமருதார் - இனிய மணம் சேர் மாலை உடைய; ஆழி நரகோளரி தாள்-சக்கரம் தரித்த நரசிம்மப் பெருமாள் திருவடிகளில்; அன்பாக - பக்தியாக; ஓர் ஏழு நாழிகைக்குள் - ஒரு ஏழு நாழிகை நேரத்தினுள்; (2 மணி 48 நிமிடங்களுக் குள்ளாக) பாடினதால் நன்கு - நன்கு பாடப் பெற்றதால், மதுரப் பாவலர்கள் - இனிய கவிஞர்கள்; பார்த்து இகழார்- கண்டு இகழ மாட்டார்கள்;

# பாடல் முதற் குறிப்பு அகராதி

எண்—பாடல் எண்


| | | | |
|---|---|---|---|
| அஞ்சாம் வினை | 72 | கருதினையேல் | 99 |
| அடியரை | 100 | கற்றவர் | 12 |
| அடியாரும் | 105 | காட்சி | 60 |
| அருளான | 17 | காணாத | 43 |
| அல்லியந் | 45 | காதலிக்கு | 79 |
| அறுகால் | 6 | குற்றம் | 44 |
| அற்பமெய் | 47 | கூறரு | 71 |
| அற்புதமான | 20 | கூறுகொண்டே | 90 |
| அற்றிடும் | 5 | கேடான | 80 |
| அன்பொடு | 94 | கொடிதான | 62 |
| ஆகுற்ற | 68 | கோதற்ற | 83 |
| ஆயும் | 65 | சயமீது | 73 |
| ஆய்ந்தவர்க் | 74 | சாற்றுக் கரும்பு | 84 |
| ஆற்றிடும் | 70 | சிந்திக்கும் | 96 |
| ஆற்றுமுப் | 7 | சீதரனே | 66 |
| ஆனந்தம் | 33 | சீர்தரும் | 13 |
| இருப்பவர் | 92 | செப்பரிதாய | 41 |
| இருப்பவன் | 58 | சேவகம் | 35 |
| இலராரும் | 49 | சொல்லற்கு | 76 |
| இலைகாய் | 19 | சோரும் | 16 |
| இறைஞசுதற் | 28 | தணியாத | 78 |
| இனன்னார் | 27 | தயாபரர் | 34 |
| இன்பததில | 64 | தவமே | 8 |
| இன்பறற | 85 | தழல் | 61 |
| இன்றே | 40 | தாளிணை | 14 |
| உத்தமமான | 38 | தீங்கான | 39 |
| உத்தமமான உயர் | 63 | துவரான | 69 |
| உற்றன | 54 | துன்பறும் | 36 |
| ஊமன் | 106 | தூய்தரு | 77 |
| எங்கெங்கும் | 57 | தேசத்தர் | 59 |
| எய்துற்ற | 42 | தேவரும் | 22 |
| ஏத்தினர்க்கும் | 98 | தோற்றமும் | 23 |
| ஏந்திழை | 67 | தோன்றரு | 48 |
| கதம | 30 | நண்ணரும | 10 |
| கருதிடும் | 11 | நண்ணற்கரிய | 46 |

| | | | |
|---|---|---|---|
| நண்ணிலர் | 91 | மற்றொன்று | 82 |
| நந்தா | 2 | மன்னற்கரிய | 89 |
| நம்பிக்கை | 51 | மன்னிய | 75 |
| நலம்பெறு | 55 | மாதவத்தால் | 101 |
| நேரொத்த | 95 | மாயவன் | 18 |
| படைப்பர் | 31 | மால்பெறு | 103 |
| பவ்க்கேடிலை | 37 | மின்னான | 25 |
| பற்றிலை | 9 | முன்னரும் | 86 |
| பற்றும் | 104 | மெல்லியல் | 15 |
| பாடுந்திறல் | 97 | மேவரும் | 52 |
| புகழான | 24 | வண்மையும் | 56 |
| புகழ் | 88 | வருந்துவ | 26 |
| புண்ணியம் | 29 | வாழிகருணை | 1 |
| பூணாரம் | 87 | வாழ்த்துமின் | 53 |
| பூமாது | 4 | வைகும்தம்முள் | 50 |
| பேசுற்ற | 81 | வையாது | 32 |
| பொலிவான | 102 | வெருக்கடியும் | 3 |
| போற்றுமின் | 21 | வேறான | 93 |


மதுரகவி நரசிங்கப் பெருமாள் அந்தாதி முற்றும்.



# நரசிம்மாவதாரம்

திருமால் நரசிம்மாவதாரம் எடுத்து இரணியன் என்னும் அசுரனை மாய்த்துப் பிள்ளை பிரகலாதனுக்கு அருள் புரிந்தார். பிரம்ம குமாரனாகிய மரீசி பிரசாபதியின் மகன் காசிப முனிவருக்கும் திதி என்பவளுக்கும் பிறந்தவன் இரணியன். தேவர், மனிதர், விலங்கு, ஐம்பூதங்கள், ஆயுதங்கள் போன்ற எவற்றாலும் தனக்கு அழிவு நேரக் கூடாது என்று வரம் பெற்றவன். தேவர்களுக்கும், மற்றவர்களுக்கும் பெரும் தீங்கு விளைவித்து வந்தான். தானே கடவுள் என்றும் சொல்லிக் கொண்டான். ஆனால் இரணியனுக்குப் பிறந்த பிள்ளை பிரகலாதன் நாராயணன் நாமத்தையே நாளும் ஜெபித்து வந்தான். தந்தையைக் கடவுளாக ஏற்க மறுத்து அவர் நாமத்தைச் சொல்ல மறுத்தான். தன் பெயரைச் சொல்ல வைக்க, தனயனிடம் தந்தை பல வழிகளில் முயன்று தோற்றான்.

இதனால் இரணியன் கடுங் கோபம் கொண்டான். ''நீ வணங்கும் அரியைக் காட்டு'' என்று பிள்ளையை அரசன் அதட்டினான். ''நான் வணங்கும் தெய்வம் நாராயணன், அத் தெய்வம் எங்கும் வியாபித்துள்ளது. இந்தத் தூணிலும் அத் தெய்வம் உள்ளது,'' என்று பிள்ளை பிரகலாதன் பேசினான்.

''அந்த அரி இங்கே இருந்தால் வெளியே வரட்டும்'' என்று கூறி, இரணியன் அந்தத் தூணை எட்டி உதைத்தான். அந்தத் தூண் இரண்டாகப் பிளந்தது. பிளவிலிருந்து சீரிய சிங்கம் ஒன்று புறப்பட்டது. மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்ட அந்தச் சீரிய சிங்கம் இரணியனைப் பிடித்து இழுத்துத் தன் மடியில் வைத்து மலைவாயிலில் சூரியன் விழும் நேரத்தில் வதைத்தது. நரசிங்கத்தைப் பார்த்த இரணியன் மைந்தன் பிரகலாதன் "நாராயணா! நாராயணா!'' என்று நாம சங்கீர்த்தனம் செய்தான்.

இந்த இனிய வரலாறு வால்மீகி இராமாயணத்தில் இடம் பெறவில்லை. நரசிம்மமூர்த்தியிடம் தளராத பக்தி கொண்ட கம்பன் தன் இராமாயணத்தில், விபீஷணன் மூலம் இந்த வரலாற்றை இராவணனுக்குச் சொல்லுகின்றார். கம்பர் இயற்றிய இராமாயணம் இப்படிப் பல இடங்களில் மூல காவியத்திலிருந்து மாறுபட்டு நிற்கின்றது. இந்தத் தெய்வ காவியத்தைச் சோழ மன்னன் சபையிலும், சிதம்பரத்திலும் அரங்கேற்ற முயன்ற கம்பனால் இயலவில்லை. இறுதியில் திருவரங்கத்திற்குச் சென்று, நாதமுனிகள் தலைமையில், தாயார் சந்நிதிக்கு எதிரில், ஐந்து குழி மூன்று வாசல் அருகில் அழகிய சிங்கர் சந்நிதிக்கு அருகில் அமைந்துள்ள நாலுகால் மண்டபத்தில் புலவர்கள் முன்னிலையில் அரங்கேற்றினார்.

இரணியன் வதைப் படலத்தைப் படிக்கத் தொடங்கியவுடன், ''இது மூலத்தில் இல்லாத ஒன்று'' என்று புலவர்கள் அங்கு ஆட்சேபணை யெழுப்பினர். ''கவிதைகளைப் படிக்கின்றேன். மறுப்பு இருப்பின் இறுதியில் ஏற்கின்றேன்'' என்று கம்பர் கூறினார். தலைமை தாங்கிய நாதமுனிகள் கம்பரைப் பாடல்களைப் படிக்க அனுமதித்தார். கவிதைகள் படிக்கப் பட்டன. இந்தக் கவிதைகளைக் கேட்டு, **மோட்டு அழகிய சிங்கர்** தனது கரங்களை நீட்டி, தலையைத் தூக்கி வாய்விட்டுக் கடகடவென்று சிரித்து ஆரவாரம் செய்தார். ஆட்சேபணை எழுப்பிய புலவர்கள் ''இது தெய்வ காவியம்'' என்றனர். நாதமுனிகள் அப்புலவர்களை நோக்கிப் புன்னகை

புரிந்தார். அப்புலவர் கூட்டம் கம்ப இராமாயணத்தை ஆட்சேபணை இன்றி அரங்கேற்ற உதவி புரிந்தது.

பிரகலாதனுக்கும், கம்பனுக்கும் இவ்வாறு அருள் புரிந்த நரசிம்மர் பல கோவில்களில் வீற்றிருக்கின்றார். அன்பர்களுக்கும் பக்தர்களுக்கும் அருள் பாலிக்கின்றார். சோளிங்கர் அல்லது திருக்கடிகையில் உள்ள நரசிம்மர் அங்கு ஒரு க்ஷணப் போது இருந்தவர்களுக்கு முக்தி அளிக்கின்றார். கார்த்திகை மாதம், ஞாயிற்றுக்கிழமைகளில் இந்த நரசிம்மரைத் தரிசிக்க கூட்டம் அலைமோதும். இந்த நரசிம்மர் மதுரகவிக்குப் பிரத்யட்சம். கம்பனுக்கு இராமாயணத்தை அரங்கேற்ற அந்த நரசிம்மர் அரங்கத்தில் உதவியதுபோல இந்தத் திருக்கடிகை நரசிம்மர் மதுரகவியின் நாவில் நர்த்தனமாடி, ஏழு நாழிகைக்குள் தன் மீது ஒரு அதி அற்புதமான அந்தாதியைப் பாட வைத்துள்ளதைப் பார்த்தோம்.

கம்பர் இயற்றிய சில கவிதைகளை இங்குக் காண்போம்.

# கம்பர் இயற்றிய நரசிம்மாவதாரத்தில் சில கவிதைகள்

1

**பிரகலாதன் நாராயணனைத் தொழுவது**

ஓநமோ நாரா யணாயவென் றுரைத்து உளமுருகித்
தான மைந்திரு தடக்கையும் தலைமிசைத் தாங்கிப்
பூநிறக் கண்கள் புனலுக மயிர்ப்புறம் பொடிப்ப
ஞான நாயகன் இருந்தனன் அந்தணன் நடுங்க.

2

**தந்தையிடம் பிள்ளை நாராயணன் மகிமை கூறுவது**

காமம் யாவையும் தருவது அப்பதம் கடந்தால்
சேம வீடுறச் செய்வதும் செந்தழல் முகந்த
ஓம வேள்வியின் உறுபதம் உய்ப்பது ஒருவன்
நாமம் அன்னது கேள்நமோ நாராய ணாய.

3

**பேதைப் பிள்ளையின் பேச்சு**

மந்திர மாதவம் என்னும் மாலைய
தந்துறு பயனிவை முறையிற் சாற்றிய

நந்தலில் தெய்வமாய் நல்கும் நான்மறை
அந்தமில் வேள்விமாட் டவிசு மாமவன்

4

ஓமெனும் ஓரெழுத்து அதனின் உள்ளுயிர்
ஆமவன் அறிவினுக்கு அறிவு ஆயினான்
தாமமும் உலகமும் தழுவிச் சாதலால்
தூமமும் கனலும்போல் தொடர்ந்த தோற்றத்தான்

5

காலையில் நறுமலர் ஒன்றைக் கட்டிய
மாலையின் மலர்புரை சமய வாதியர்
சூலையின் திருக்கலாற் சொல்லு வார்க்கெலாம்
வேலையும் திரையும்போல் வேறு பாடிலான்

6

பிரகலாதனைப் பல வகையிலும்
துன்புறுத்திய இரணியன் அவனை ஒன்றும் செய்ய
முடியவில்லை. இது எதனால் ?

மூன்றவன் குணங்கள் செய்கை
மூன்றவன் உருவம் மூன்று
மூன்றுகண் சுடர்கொள் சோதி
மூன்றவன் உலகம மூன்று
தோன்றலும் இடையும் ஈறும்
தொடங்கிய பொருள்கட் கெல்லாம்
சான்றவன் இதுவே வேத
முடிவிது சரதம் என்றான்

7

உன் இறைவன் எங்கு உள்ளான் என்றபோது
தூணைக் காட்டி இங்கும் உள்ளான் என்று
பிரகலாதன் பேசினான்

சாணினும் உளன்ஓர் தண்மை
அணுவினைச் சதகூ றிட்ட
கோணினும் உளன்மா மேருக்
குன்றிலும் உளன்இந் நின்ற
தூணினும் உளன்நீ சொன்ன
சொல்லினும் உளன்இத் தன்மை
காணுதி விரைவில் என்றான்
நன்றெனக் கனகன் சொன்னான்.

# திருக்கூடல் திரிபு அந்தாதி

## காப்பு

### 1

**செந்தாதி னம்புயத் தேன்வாழும் கூடற் றிருப்பதியான்
அந்தாதி னம்பரன் அந்தாதி பாடற் கருந்துபண்பாய்
நந்தாதி னம்பயில் விண்ணோர்கள் வாழ நலஞ்செயனு
மந்தாதி னம்தொறும் நாயேன்றன் நாவிடை வந்தருளே.**

*செந்தாதின் அம்புய - செழுமையான தாமரை மலரில்; தேன் வாழும்-வண்டுகள் வசிக்கும்; கூடற்றிருப்பதியான்-மதுரைத் தலத்து அழகன்; அந்தாதில் - முதலும் முடிவுமற்ற; நம்பரன் - நம்மிறைவன் பேரில்; அந்தாதி பாடற்கு - அந்தாதி என்ற சிற்றிலக்கியம் பாடுதற்கு; இனம்பயில் விண்ணோர்கள்-வானவர் கூட்டம்; நந்தாது - குறைவு படாது; வாழ - ஜீவிக்க; நலம் செய் - நன்மை புரியும்; அனுமந்தா - ஆஞ்சநேய; அருந்து பண்பாய் - அனுபவிக்கும் தன்மையுடன்; தினந்தொறும் - நாள்தோறும்; நாயேன்தன் - நாயனைய நன்றியுள்ள என்; நாவிடை வந்து - வாக்கிலிருந்து; அருளே - அருள் புரிக.*

### 2

**மான்கூட னாறி மதிதோய் பொழில்தொறும் வண்ணநறும்
தேன்கூட னாளிறை தானாகு மென்னத் திகழ்தரும்சீர்
யான்கூட னாதன் புகழ்பாட வந்தென வாழ்விக்குமால்
தான்கூட னாகத் தமர்ந்தான் புகழ்க்குரு காதிபனே.**

*மான்கூட நாறி - மான்கள் அதிகமாகத் தோற்றந் தரும்; மதிதோய் - சந்திரனை முட்டும் (வானளாவிய); பொழில் தொறும் - சோலைகள் முற்றும்; வண்ண நறும் - மணக்கும் தன்மையுள்ள; தேன்கூட - வண்டுகளும்; நாள் இறை தானாகும் என்ன - நாள்தோறும் இறைஞ்சும் என; திகழ் தரும் - விளங்கும்; சீர் - சிறப்பை; யான் - எளியேன்; கூடல் நாதன் - கூடற்பதித் தலைவன் (அழகன்); புகழ்பாட வந்*

தேன - கீர்த்தியைப் பாட வந்தேன் என; வாழ்விக்கும் மால் தான்-வாழவைக்கும் அழகனே; கூடல் நாகத்து அமர்ந்தான்-மதுரை நகரில் பாம்பணையில் அமர்ந்தான்; புகழ்-போற்றும்; குருநாதிபனே - குருகூர்த் தலைவனாம் நம்மாழ்வார்;

நூல்

**பொன்னா கரத்தினஞ் சுண்டோனும் போற்றும் புயவளைவாய்ப்**
**பன்னா கரத்தினஞ் சேர்மாடக் கூடற் பதிஉறையும்**
**மன்னா கரத்தி னகராதி யர்க்கருள் வானழகன்**
**என்னா கரத்தினர் பொற்பாதம் வாழ்த்துமின் இப்பொழுதே. 1**

பொன் - திரு (இலக்குமி); ஆகரத்தின் - உறைவிடத்தில் (பாற்கடலில்) உள்ள; நஞ்சுண்டோனும் - ஆலகால விஷம் உண்ட சிவனும்; போற்றும் - துதிக்கும்; புயவளைவாய் - வளைந்த வரிகளுடைய வளையில் வாழும்; பன்னாகரத்தினம்- நாக மாணிக்கம்; சேர் - விளங்கும்; மாடக் கூடற் பதி உறையும் - நான்மாடக் கூடலாம் பதியில் விளங்கும்; மன் - தலைவன்; ஆகர - மேலான; தினகராதியர்க்கருள்வான் - சூரியன் முதலாயவர்களுக்கு அருள் புரிபவன்; அழகன் - கூடற் பெருமாள்; என் - எளியேன்; நாகரத்தினர்-விருப்பத்திற்குரியவர்; பொற்பாதம் - அழகிய திருவடிகளை; வாழ்த்துமின் இப்பொழுதே - இப்போதே போற்றுவீர்கள்;

**பொழுதா விரவு வருமதி யோவம் புலிஎனக்கண்**
**அழுதாவி சோர்த லழகாகு மாவந் தளித்திலையேற்**
**பழுதா விடியுமிப் பாவைக்குன் மாலை பணித்தருள்வாய்**
**எழுதா வியன்மறைக் கெட்டாய்தென் கூடற் கிறைவனே. 2**

பொழுதா இரவு - இராத்திரி வேளையில்; வரும் மதியோ -தோன்றும் சந்திரனோ; அம் - அசை; புலி என - வேங்கை என; கண் அழுது - கண்களில் நீர் வரப் புலம்பி; ஆவி சோர்தல்-(தலைவி) மூச்சுத் தளர்தல்; அழகாகுமா-நன்றாகுமோ; வந்து அளித்திலையேல்-அவள்பால் வந்து காக்கவில்லைஎனில் பழுதா விடியும்-காலைப் பொழுது சிதைவுறும் (கேடாகும்); இப்பாவைக்கு - இப்பெண்ணுக்கு; உன்மாலை - உனது பூமா

வையை; பணித்தருள்வாய் - கொடுத்தருளுக; எழுதா - வரி வடிவம் பெறாத; வியன் மறைக்கு - அழகிய வேதங்களுக்கு; எட்டாய் - அகப்படாதவ; தென் கூடற்கு - தென்மதுரைக்கு; (வடக்கேயும் ஒரு மதுரை உள்ளது) அல்லது அழகிய கூடல் நக ருக்கு; இறைவனே - தலைவனே; இஃது அகத்துறை. (நற்றா யிரங்கல்).

**இறைவனந் தண்புனன் முத்தலை யானு மெழில்யமுனைத்**
**துறைவனந் தன்மகன் தன்னடி யார்தம் துயரமனக்**
**குறைவனந் தங்கதிர் முன்பனி யாக்கிய கொண்டலண்டர்**
**மறைவனந் தன்னில் விளையாடும் கூடல்எம் மாணிக்கமே** 3

அம்தண்புனல் - அழகிய குளுமையான கங்கை; முத் தலையானும் - முத்தெறியும் முடியானும்; எழில் - அழகிய; யமுனைத் துறைவன் நந்தன் மகன் - யமுனைக் கரையில் நந்த கோபன் மகனாம் கண்ணன்; தன்னடியார்தம் - தன்னுடைய தாசர்களின்; துயர மனக் குறைவு அனந்தம்-பலவாகிய மனத் துள்ள துன்பங்கள்; கதிர் முன் - சூரியனெதிரே; பனியாக்கிய- பனிபோல இல்லாதாக்கிய; கொண்டல் - மேகவண்ணன்; அண்டர் - வானோர்; மறை வனந்தன்னில் - வேதங்களாகிய காட்டில்; விளையாடும் - களித்து ஆடும்; கூடல் எம் மாணிக் கமே - கூடற் பதியில் உள்ள மணியனையானே; இறைவன் - தலைவன்;

**மாதத் துவந்தனை உத்தவர்க் கோதிய மாயபிர**
**மாதத் துவந்தனை யாளவல் லாய்செழு மாமறைக்கா**
**மாதத் துவந்தனை மார்மயங் காயிடை வ்ாவிரதி**
**மாதத் துவந்தனைப் பெற்றாய்தென் கூடல் மரகதமே** 4

மாதத்துவந்தனை-பேருண்மைகளை; உத்தவர்க்கு ஓதிய- உத்தவன் என்ற பெரியவருக்கு உபதேசித்த (உத்தவ கீதை); மாய - கிருஷ்ணா; பிரமாதத்துவந்தனை - மோகத்தாலேற் படும் சலனத்தை; ஆளவல்லாய் - அடிமைகொள்ள வல்ல; செழுமாமறைக்காமா - வளமான எழில் வேதங்கட்காகும் வண்ணம்; தத்துவந்து - அவமிருந்து வந்து; அனைமார் - தாய்மார்; மயங்காயிடை - மயங்குறாத வண்ணம்; வாவு

*இரதி - விரும்பும் இரவி தேவியாம்; மாது - அழகிய பெண்ணுடன்; அத்து வந்தனை - ஒன்றிப்பான மன்மதனை; பெற்றாய் - மகனாகப் பெற்றவ; தென்கூடல் - அழகிய கூடற் பதியில் உள்ள; மரகதமே - பச்சைக்கல் வண்ணனே;*

**கதனாக மானகிற் கண்வலைப் பாவையர் கட்கினிய**
**மதனாக மானவ மாநிதி யாயென வாழ்த்துதல்என்**
**இதனாக மானப் புரைமாடற் கூடற் கிறைவனந்தன்**
**சுதனாக மானப் புவியில்வந் தானைத் தொழுதுய்நெஞ்சே 5**

*கத நாக மாநகில்கண் - வலிய மலைபோன்ற பெரிய முலைகளிடத்தே; வலைப் பாவையர் தங்கட்கு - காண்பார் மனத்தைச் சிக்க வைக்கும் பெண்களுக்கு; இனிய - இனிமை தரும்; மதனாகமா - காம சாத்திரத்தாய்; நவ மாநிதியாய் என - பெரிய நவநிதி (அழகு தரும் புதுச் செல்வம்) உடையவ என்று; வாழ்த்துதல் - போற்றுவது; என் இதனாக-எளியேன் உரிமையாக; மானப்புரைமாடற்கூடற்கு - விமானங்களை அடைந்த மாட வீடுகளுடைய மதுரைக்கு; இறைவன் - கலைவன்; நந்தன்சுதனாக - நந்தகோபன் மகனாக; மான - பெருமைசேர்; புவியில் - பூவுலகில்; வந்தானை - அவதாரம் செய்தவனை; தொழுது - பணிந்து; உய் நெஞ்சே - மனமே ஜீவிப்பாயாக;*

**நெஞ்சவ ராகமுற் றாவன வென் சமர் நேர் விசயம்**
**பஞ்சவ ராக வரமளித் தாளும் பரமனையுள்**
**நஞ்சவ ராகனைத் தென்கூடல் என்னும் நகர்நம்பியைத்**
**தஞ்சவ ராகனை ஏத்தீர் பவக்கடல் தாண்டுதற்கே 6**

*நெஞ்சு - மனம்; அவர் ஆகமுற்றாவன என் - அவர் என் மார்பிடை அடைந்து ஆவது என்ன; சமர் - போரில்; நேர் விசயம் - வெற்றி பெறுவது; பஞ்சவராக - பாண்டவர்கள் எனும்படி; வரமளித்து - அருள் தந்து; ஆளும் -ஆட்சி புரியும், பரமனை - இறைவனை; உள் நஞ்சவர் - மனம் நைந்து உருகுபவர்; ஆகனை - நெஞ்சில் இருப்பவனை; தென் கூடல் என்னும் நகர் - அழகிய மதுரை என்னும் பேரூர்; நம்பியை - புருஷ சிரேஷ்டனை; தஞ்ச வராகனை - புகல் தரும் வராகப்*

பெருமானை; பவக் கடல் தாண்டுதற்கு - பிறவியாம் கடலைக் கடப்பதற்கு; ஏத்தீர் - வழிபடுவீர்; ஏ - அசை.

**தாண்டவந் தானன என்றாடும் ஈசனுந் தான்புகழும்**
**மாண்டவந் தான நயமுறுங் கூடல் வரதனைநீ**
**யீண்டவந் தானன ரின்பமுண்டாமினி இன்னலுமக்கரு**
**காண்டவந் தானன லுண்டதுபோலும் கருதுநெஞ்சே** 7

தாண்டவம் - நடனம்; தானன என்றாடும் - தானன என்ற லயத்துக்கேற்ப ஆடுகின்ற; ஈசனுந்தான் புகழும்-சிவன் தானும் போற்றித் துதிக்கும்; மாண்ட வந்தான - மாட்சிமை பெற்றதாய; நயமுறும் - மேன்மை அடைந்த; கூடல் - மதுரை; வரதனை - வள்ளல் அழகனை; நீ - மனமே நீ; ஈண்ட வந்தால் நனர் - இங்குவரின் நன்கு; இன்பம் உண்டாம் இனி - இனிமேல் சுகம் (மகிழ்வு)ஏற்படும்; இன்னல் உமக்கு-உங்களுக்குள்ள துன்பங்கள்; காண்டவந்தான் அனல் உண்டது போலும் - காண்ட வனத்தில் அனல் (தீயை) அருந்தியது போலாகும்; கருது நெஞ்சே - மனமே மதித்திடு.

**கருமா தவாவிருந் தாவன என்நினைக் காணலின்றித்**
**திருமா தவாவிருந் தாவனஞ் சேர்வயற் றென்மதுரை**
**வருமா தவாவிருந் தாவன மன்மனை வாயருந்துந்**
**தருமா தவாவிருந் தாவன நாதஎம் தற்பரனே** 8

திருமாது - இலக்குமி; அவா - விரும்பும்; விருந்தாவனம் - துளசி வனங்கள்; சேர் - நிறைந்த; வயல் - கழனிகள் கொண்ட; தென்மதுரை வரும் - அழகிய மதுரையில் கோயில் கொண்டருளும்; ஆதவா - சூரியன் போன்றவா; விருந்து ஆவன - புதுமையாக ஆனவை; 'மன்மனைவாய் - விதுரன் மனையகத்து; அருந்தும் - உண்ணும்; தரு - கற்பகமனைய; மாதவா - மாதவப் பெயரினை; விருந்தாவன நாத - பிருந்தாவனத்துத் தலைவா; எம் - எளியேம்; தற்பரனே - இறைவனே; கருமா - எல்லாச் செயல்களும் புரிபவனே; தவா விருந்து - சும்மா இருந்து; ஆவன என் - அடைவது என்ன பயன்; நினைக் காணலின்றி - உன்னைக் காணாமல்;

**தற்பர னஞ்சனை யீன்றானை தென்கூடற் றனிமுதல்வன்**
**இற்பர னஞ்சனை வாணன்நின் றேத்த இகல் கடந்த**
**பொற்பர னஞ்சனை யேன்பவந் தீர்த்தருள் பூவைவண்ணன்**
**சிற்பரன் அஞ்சனை சேய்க்கருள் வான்கழல் சேருமினே 9**

*தற்பரன் - தனக்குத் தானே தலைவன்; அஞ்சனை - கரு நிறத்தானை (மன்மதனை); ஈன்றானை - பெற்றவனை: தென்கூடற்றனி முதல்வன் - தென் கூடற் பதியின் ஒப்பற்ற தலைவன்; இற்பரன் அஞ்ச - ஒன்றுமில்லாத சிவன் அஞ்சவும்; நைவாணன் நின்றேத்த - இகழ்வுற்ற பாணாசுரன் எதிர் நின்று துதிக்க; இகல் கடந்த - ஒப்பற்ற; பொற்பர் - அழகர்; அ - அந்த; நஞ்சனையேன் - விஷமனைய பாவி என்; பவந் தீர்த்தருள் - பாவங்களை ஒழித்து அருள் புரியும்; பூவை வண்ணன் - காயாம்பூ நிறத்தன்; சிற்பரன்-இறைவன்: அஞ்சனை சேய்க்கு - ஆஞ்சநேயருக்கு; அருள்வான் - அருள் புரிபவன்; கழல் - திருவடிகளை; சேருமின் - அடைவீர்கள்;*

**சேரத் தனஞ்சக் கரன் கூரம் பாவிகா சீரியகும்**
**பாரத் தனஞ்சக் கரவாக மாகுமிப் பாவைதனை**
**வீரத் தனஞ்சக் கரப்புவி மீது விளக்கியபொன்**
**ஆரத் தனஞ்சக் கரத்தாய் தென்கூடற் கதிபதியே 10**

*சீரிய - அழகான; கும்பாரத்தனம் - குவி முலைகள்; சக்கரவாகமாகும் - சக்கரவாகப் புள்ளினைப் போலாகும்; இப்பாவைதனை - இப்பெண்ணை; வீரத்தனம் - ஆண்மைத் தன்மை; சக்கரப் புவிமீது - வளைந்துருண்ட பூமி மேல்: விளக்கிய - விளங்கச் செய்த; பொன் ஆரத்தன் - பொன்மாலை அணிந்தவன்: அம்சக்கரத்தாய் - அழகிய சக்கராயுதமுடையவ; தென்கூடற்கு அதிபதியே - தென்மதுரைப் பதிக்குத் தலைவனே; சேர் - சேர்வாய்; அத் தன் நஞ்சக்கரன்-அந்தத் தன்னுடைய (மன்மதன்) விஷமனைய கரங்களின்; கூரம்பு - கூர்மையான கணைகளினின்றும்; ஆவிகா - உயிரைக் காப்பாற்று; அகத்துறை.*

அதிகவ ராகத்திரியாத வாயுறும் ஆசுடையேன்
மதிகவ ராகத் திரிவச மாயின வந்தாருணின்
றுதிகவ ராகத் திரிபந்து வுக்கருள் மாயநல்லோர்
பதிகவ ராகத் திரிமூர்த்தி கூடற் பரம்பொருளே 11

அதிகவர் ஆக - மிக்கவராக; திரியாத - அலையாத; வாயுறும் - சொற்களை உடைய; ஆசுடையேன - குற்றமுடையவன்; மதிகவரா - மனத்தை வசமாக்கி; கத்திரிவசமாயின - கத்திரிக் கோலிற் பட்டது போன்றன; நின றுவந்தாருள்-வந்தவர்களிலிருந்து; திகவர்-வைராக்கிய சீலர்; ஆகத்து இரி-மனத்திலிருந்தோடும்; பந்துவுக்கருள் - உறவினர்களுக்கருள் புரியும்; மாய - கிருஷ்ணா; நல்லோர் - நல்லடியார்; பதிக - வழிச் செல்பவ; வராக - வராகாவதார; திரிமூர்த்தி - மும்மூர்த்தியானவ; கூடற் பரம்பொருளே - கூடல் நகரத்து இறைவனே;

பொருமாலை யாமிது கொல்வம் புலியது பூங்குழலீர்
வருமாலை யாதனை செய்யுமந் தோவினி மாற்றுதற்குத்
தருமாலை யாரணஞ்சேர்கூடல் நாதனைச் சார்ந்துவனத்
திருமாலை யாயினும் வேராயினும் கொண்டு சேர்மின்களே 12

பூங்குழலீர்-பூவணிந்த கூந்தற் பாங்கியர்களே; பொரும் மாலையாம் - போரிடும் மாலைப் பொழுது; இதுகொல் - இதுவோ; அம்புலியது - சந்திரனானது; வருமால் - தோன்றும்; ஐ - சன்னி; யாதனை செய்யும் அந்தோ - துன்பம் தரும் ஐயோ; இனி மாற்றுதற்கு - இனிமேல் இந்நோய் நீக்க; தருமாலை - மாலலயைத் தருகின்ற; ஆரணம்சேர் - வேதங்கள் சேரும்; கூடல் நாதனை - கூடல் அழகனை; சார்ந்து - அடைந்து; வனத்திருமாலை - அழகிய துளசி மாலை; ஆயினும் - ஆவது; வேராயினும் - வேறு மணமுள்ள வேர்கள் ஆயினும; கொண்டு சேர்மின்கள் - கொண்டு வந்தடைவீர்; அகத்துறை.

களங்கனி யாய நிறத்தாய்நல் அன்பர் கருதிநிதம்
உளங்கனி யாயர் கொழுந்தே தென்கூடற் கொருமுதல்வா
விளங்கனி யாயம் புவிமீது தோன்றும் விமலநிற்கா
வளங்கனி யாயமருமிந்த காணுதன் மைக்குழலே 13

களங்கனியாய நிறத்தாய் - களாப் பழம் போன்ற தன்மையாய்; நல் அன்பர் - நல்ல பக்தர்கள்; கருதி - நினைந்து; நிதம் - நாளும்; உளங்கனி - மனங்கசிந்துருகும்; ஆயர் கொழுந்தே - ஆயர்குலத்து இளம் குருத்தே; தென் கூடற்கு - தென் மதுரைக்கு; ஒரு முதல்வா - ஒப்பற்ற தலைவா; விளங் கனியாய் - விளாம்பழம் போல ஒட்டியும் ஒட்டாது; அம்புவி மீது - உலகில்; தோன்றும் - காணப் பெறும்; விமல - அழக; நிற்கா - உனக்காக; வளம் - செழுமையான; கனியாய் - கன்னிப் பெண்ணாக; அமரும் - இருக்கும்: இந்த வாணுதல் மைக் குழலே - இந்த ஒளிசேர் நெற்றியும் கருங்கூந்தலுமுடையவள்; அகத்துறை.

குழலுங் கலையுஞ்செங் காந்தளம் போதுறுங் கோல்வளையும்
கழலுங் கலையும் முருக்குறும் காமர்க் கலாமதியும்
அழலுங் கலையும் நெகிழுந்தென்கூடற் கதிபமனஞ்
சுழலுங் கலையுஞ் சிகண்டமு நேர்இத் துடியிடைக்கே 14

கலையும் சிகண்டமும் நேர் - மானும் மயிலும் ஒத்த; இத்துடி யிடைக்கே - உடுக்கை போன்று குறுகிச் சிறுத்த இடையினை உடையவட்கு; குழலும் கலையும் - கூந்தல் கலைந்து விடும்; செங்காந்தளம் போதுறும் - செங்காந்தளின் அழகிய மலரனைய வளைகளும்; கழலும் - கழன்றுவிடும்; கலையும் - மேகலையும்; முருக்குறும் - அழியும்; காமர்க் கலா மதியும்-விரும்பத்தக்க கலைகள் கூடிய சந்திரனும்; அழலும்- சுடும்; கலையும் - ஆடையும்; நெகிழும் - தளர்ந்து விழும்; தென் கூடற்கதிபதி - தென்மதுரைத் தலைவனாம் அழக; மனம் சுழலும் - சிந்தை கலங்கும்; (அகத்துறை; தலைவி தலைவன்பால் கொண்ட காதலின் மெய்ப்பாடு)

துடியிடை அம்பொற் சுணங்கணி பூண்முலை துப்பிதழ்ஒண்
பிடியிடை யந்நடை பெண்கள்தம் நாயகம் பேரிளம்பெண்
படியிடை யஞ்சனம் தீட்டாள் விழிக்குப் படிஇணையோ
டடியிடை யம்புயக் கண்ணாதென்கூடற் கணிமணியே 15

துடியிடை - துடியனைய இடுப்பு; அம்பொற் சுணங்கணி பூண்முலை - அழகிய தேமலும் பொன்னாபரணங்களும்

பூண்ட கொங்கைகள்; துப்பிதழ் - பவள இதழ்கள்; ஒண் பிடியிடை யந்நடை - சுடரும் பெண்யானை போன்ற அழகிய நடை; பெண்கள்தம் நாயகம் - மங்கையர்களில் தலைமை சான்றவள்; பேரிளம் பெண்-பேரிளம் பெண் பருவத்தினாள்; படியிடை - பூமியில்; அஞ்சனம் தீட்டாள் விழிக்கு - கண் களுக்கு மை தீட்டாள்; படி இணையோடு - ஜோடியாக ஒத்த; அடியிடை - திருவடிக்கு நிகரான; அம்புயக் கண்ணா - தாமரைக் கண்ணனே; தென் கூடற்கு - தென் மதுரைப் பதிக்கு; அணிமணியே - மணிக்கலன் ஒத்தவனே; (அகத் துறை)

மணிக்கடங் காட்டும் சுணங்கணி பூண்முலை மாமதனன்
கணிக்கடங் காமர் மொழிவாணகையடற் காமமெனும்
பிணிக்கடங் காமனம் பேதுற் றனளவட் பேணுகநீ
அணிக்கடங் காதன லுறுங்கூடல் வாழ்தரு மச்சுதனே 16

மணிக்கடம் காட்டும் - அழகிய மதர்ப்புக் காணப்பெறும்; சுணங்கணி பூண் முலை - தேமலும் ஆரமும் பூண்ட முலை கள்; மாமதனன் - எழில் மன்மதன்; கணிக்கடங்கு-கண்ணிக்கு அடங்கக்கூடிய; காமர்மொழி-அழகுறப் பேசும் பேச்சு; வாள் நகை - ஒளிநிறைந்த பற்கள்; அடற்காமம் எனும்-போரிடும் (கொல்லும்) வேட்கை என்ற; பிணிக்கு - நோய்க்கு; அடங்கா மனம் பேதுற்றனள்-அடிமைப்பட்டு மனம் மாறுபாடு கொண் டாள்; அவட்பேணுக நீ - நீ அவளைக் காத்தருள்; அணிக் கடம் - அழகிய தோட்டங்கள்; காதம் - காத தூரம் (பத்து மைலளவு); நல்உறும் - நன்கு பெற்ற; கூடல் வாழ்தரும் - கூடற்பதியில் கோயில் கொண்டுள்ள; அச்சுதனே - திரு மாலாம் அழகனே; (அகத்துறை)

சுதக்கணை யாகமெய்த் தென்கூடல் மால்வரைச் சூழலின்மன்
மதக்கணை யாகமுற் றாங்கது வால்விழி வார்தருநீர்
பதக்கணை யாகனல் என்றனை யேவழி பார்க்குமலர்
விதக்கணை யாகளி வண்டார்க்கும் பூங்கிளை
மென்கொடியே 17

சுதக் கணையாக - நல்ல காணிக்கையாக; மெய்த் தென் கூடல் - உண்மையான அழகிய மதுரை; மால்வரைச் சூழலில்

மன் - மயக்கந்தரும் மலைச் சாரலில்; மன்மதக் கணை - மன்மதனின் மலரம்புகள்; ஆகமுற்றாங்கதுவால் - உடலிற் தைக்க அங்கு அதனால்; விழி - கண்கள்; வார்தரு நீர் - பெருகும் கண்ணீர்; பதக்கு - பதங்களுக்கு; அணையாகு கனல் என்றனையே - சேரும் நெருப்பு என்றனையே; வழி பார்க்கும் - (உன் வரவெதிர்கொண்டு) நீ வரும் வழியை நோக்கும்; மலர் விதக் கணையா - விரிந்த மலர் போன்ற கண்களை உடைய; களி வண்டார்க்கும் - மகிழ்வுடன் வண்டுகள் பாடும்; பூங்கிளை மென்கொடியே - புஷ்பக் கிளைகள் சார்ந்த மெல்லிய கொடியனையவளே; (அகத்துறை; வரவெதிர்பார்த்தல்)

**கொடியா டகரம் பொலிகூட லம்பதிக் கொற்றவஇப்**
**படியா டகரக் கனல்புரை நேமிப் படையநின**
**தொடியா டகரவிச் சுந்தரத் தோளந் துழாயலது**
**முடியா டகரக் குழல்வா ணகையிம் முகிழ்முலையே** 18

கொடியாடு - கொடிகள் பறக்கும்; அகரம் பொலி - வீடுகள் விளங்கும்; கூடலம்பதி - அழகிய மதுரைப் பதியின்; கொற்றவ - தலைவ; இப்படியாள் - இப்பூமி தேவி; தகரக் கனல்புரை நேமிப்படைய-வருத்தும் நெருப்பை ஒத்த சக்கராயுதத்த; நின - உன்னுடைய; தொடி ஆடு அகர - வளை குலுங்கும் அழகிய கரத்த; இச் சுந்தரத் தோள் - இவ்வழகிய புயத்து; அம்துழாயலது - அழகிய துளசியன்றி; முடியாள் - அணியமாட்டாள்; தகரக் குழல் - மயிர்ச் சாந்தணிந்த கூந்தலும்; வாள்நகை - ஒளிசேர் பற்களும் உடைய; இம்முகிழ் முலையே - இந்த அரும்பு முலையாள்;

**முலைக்கலங் காரந் தனக்கு நல்லார்கண் முகிழ்நகைக்குக்**
**கலைக்கலங் காரளருக் கிச்சை யாகுங் கருத்தினையா**
**மலைக்கலங் காரணம் கண்டறி யேமினி யாவதுதென்**
**மலைக்கலங் காரனந் தென்கூடல்மாலை வணங்குதுமே** 19

முலைக்கு அலங்காரந் தனக்கு - கொங்கைகளுக்கு அணி புனைதலில்; நல்லார்கள் - பெண்களின்; முகிழ் நகைக்கு - அரும்பும் புன்சிரிப்புக்கு; கலைக்கு - ஆடைக்கு; அல் அம் காரளருக்கு - அழகிய இருண்ட கருங்கூந்தலுக்கு; இச்சை

யாகும் - விருப்பம் கொள்ளும்; கருத்தினை - எண்ணத்தை; யாம் மலைக்கலம் - நாங்கள் மறுக்கவில்லை; காரணம் கண்டறியேம் - அதன் மூலத்தை நோக்கி உணரவில்லை; இனியாவது-இனிமேலாயினும்; தென்மலைக்கு அலங்காரன் - தெற்கு மலை அழகன்; நம் - நம்முடைய; தென்கூடல்[1] மாலை - தென் மதுரைத் திருமாலை; வணங்குதும் - பணிவோம்; ஏ - அசை. அகத்துறை.

**வணக்கந் தரம்புரை மால்கூட லாதிதெய் வானைவள்ளி**
**மணக்கந் தரம்புயன் மாலர னாதியர் வந்திறைஞ்சும்**
**குணக்கந் தரச்சுடர் போல்நேமி யான்கழல் கூடினல்லோர்**
**இணக்கந் தரம்பொரு ளெல்லாமும் முத்தியுந் எய்துறுமே 20**

வணக் கந்தரம் புரை - மேக வண்ணம் ஒத்த; மால் - திருமால்; கூடலாதி - கூடல் நகர முதல்வன்; தெய்வானை வள்ளி- தேவயானை வள்ளியை; மண - மன்றல் புரிந்த; கந்தர் - முருகன்; அம்புயன் - பிரமன்; மால் - பெருமை மிக்க; அரன் ஆதியர்-சிவன் முதலிய தெய்வங்கள்; வந்திறைஞ்சும் - வந்து வணங்கும்; குணக்கு-கிழக்கே; அந்தரச் சுடர் போல் - வான் கதிர் சூரியன் போன்ற; நேமியான்-சக்கராயுதன்; கழல்-திருவடிகளை; கூடின்-அடையின்; நல்லோர் இணக்கம் - நல்லவர்களின் சேர்வு; தரம் - ஒப்புமை; பொருள்-சம்பத்து; எல்லாமும் - அனைத்தும்; முத்தியும் - அதன் பின் பரமபதமும்; எய்துறும் - வந்தடையும்; ஏ - அசை.

**துறுவிடக் காமச் சுவையா லுழன்று சுழன்றலைந்து**
**கறுவிடக் காக வுறுதல்என்ஆகும் கமுகமடல்**
**செறுவிடக் காளை வரால்பாயும் கூடலைச் சேர்கிலைநீ**
**தெறுவிடக் காவை நமப்புரி வாயினித் தீமனமே 21**

துறு விடக் காமச் சுவையால் - நெருக்கும் நஞ்சனைய காம இனிமையால்; உழன்று - வருந்தி; சுழன்று - கலங்கி; அலைந்து - திரிந்து; கறு - கோபமுறும்; விடக்காக - தசைக்காக; உறுதல் - அடைதல்; என் ஆகும் - எவ்விதமாகும்; கமுக மடல் - பாக்குப் பாளையை; செறுவிட - நெருக்கிட; காளை வரால் - ஆண் வரால் மீன்; பாயும்-தாவும்; கூடலை-

கூடல் நகரை; சேர்கிலை நீ-நீ அடையவில்லை; நமப்புரிவாய் இனி - இனி யம லோகத்தில்; தெறுவிடக் காவை - அழிவதற் காகுவாய்; தீ மனமே - தீய நெஞ்சே;

**மனத்தடங் காம மதமாதி யான்மன மாழ்கி நல்லார்**
**தனத்தடங் காமயல் கொண்டேனை யாள்தல்உன்**
**தாளல்லவோ**
**வனத்தடங் காமரம் வண்டாருங் கூடல் வரவரக்கர்ச்**
**சினத்தடங் காமர்க் கணைமுனி யாயடற் சேவகனே 22**

மனத்தடம் - மனமாகிய இடத்து; காம மதமாதியால் - காமக் குரோத லோப மத மாற்சரியம் ஆகியவற்றால்; மனம் மாழ்கி - உளம் மயங்கி; நல்லார் - பெண்களின்; தனத்து - கொங்கைகளில்; அடங்கா மயல் கொண்டேனை - தணியாத மோகம் கொண்ட என்னை; ஆள்தல் - காப்பது; உன் தாளல் லவோ - உன் திருவடிகள் அன்றோ; வனத் தடங் காமரம் - சோலைகளில் பெருமைசேர் காமரப் பண்ணை (காமர இராகத்தை); வண்டு ஆரும் - வண்டுகள் இசைக்கும்; கூடல் - மதுரை; வர - வரமுடைய; அரக்கர் - அரக்கர்கள்; சினத்து அடு அம் காமர் கணை - கோபித்துத் தாக்கும் அந்த வேகச் சரங்களை; முனியாய் - கோபித்தழிப் பாய்; அடற் சேவகனே - வல்லமை மிக்க தலைவனே:

**சேவா கனத்த னயனரி யானருட் செல்விஎனு**
**மாவாகனத் தனந்தென்கூட லாதி மறைப்பொருள்நம்**
**ஆவா கனத்த னருணினைந் தேத்தி யறைவதுதம்**
**நாவா கனத்தனஞ் செய்வார்க்கு நாளும் நரகில்லையே 23**

சேவாகனத்தன் - இடப வாகனத்தன் சிவன்; அயன் - பிரமன்; அரியான் - மாலவன்; அருட்செல்வி எனும் - அருட் சம்பத்துடையவளெனும்; மா - திருமகளினை; ஆகநத்தன் - மார்பில் விரும்பி ஏற்றவன்; அம்தென் கூடல் - அழகிய தென் மதுரை; ஆதி - முதல்வன்; மறைப் பொருள் - வேதங்களின் பொருளாயவன்; நம் ஆவாகனத்தன் - நம் அழைப்புக்கு உரி யவன்; அருள் நினைந்து - அருளில் மூழ்கி; ஏத்தி - தொழுது; அறைவது - துதி கூறுவது; தம் - தங்கள்; நாவாக - நாக்காக;

*நத்தனம் செய்வார்க்கு - நடனம் புரிபவர்களுக்கு; நாளும் - எப்போதும்; நரகில்லையே - நரகமே இல்லையாம்;*

**இல்லாமை யாலலைந் தீனரைப் பாடி எவற்றினும்யாம்**
**வல்லாமை யாவென வாயாடு வீரது வானவர்க்காய்க்**
**கல்லாமை யாகிய தென்கூடல் நாதனைக் காதலுடன்**
**சொல்லாமை யால்வரும் என்றே பலமுறை சொல்லுவனே 24**

*இல்லாமையால் - வறுமையால்; அலைந்து - திரிந்து; ஈனரைப் பாடி - இழிவானவர்களைப் புகழ்ந்து பாடி; எவற்றினும் - எந்தக் காரியத்திலும்; யாம் வல்லாம் ஐயா என - ஐயனே நாம் கைவந்தோம் என்று; வாயாடுவீர் - வாய்ச் சொல் புகல்பவர்களே; அது - அச்செயல்; வானவர்க்காய் - தேவர்களுக்கென: கல்லாமை ஆகிய - அறிந்தோதாதவை யாம்; தென் கூடல் நாதனை - தென் மதுரைத் தலைவனை: காதலுடன் - நேயமுடன்; சொல்லாமையால் - கூறாதிருப்பதால்; வரும் என்றே - நேரும் எனவே; பலமுறை - பற்பல விதங்களிலும்; சொல்லுவன் - கூறுவேன்; ஏ - அசை.*

**சொல்லலங் காரம்பொருளெழுத் தியாப்பிவை சோர்வறவே**
**கல்லலங் காரக் கவிமாலை சூட்டுமின் காவனைத்து**
**மல்லலங் காரமர் நான்மாடக்கூடல் வரதனைவான்**
**எல்லலங் கார மணிமார்ப னைப்புகழ் தேத்துமினே 25**

*சொல் அலங்காரம் பொருள் எழுத்து யாப்பு - எழுத்து சொல் பொருள் யாப்பு அலங்காரம் என்ற ஐந்திலக்கணங் களும்; சோர்வறவே - தளர்வின்றியே; கல் - கற்று; அலங் காரக் கவிமாலை - அணிபெறக் கவிதை ஆரம்; சூட்டுமின் - அணிவிப்பீர்; காவனைத்தும் - சோலை முற்றும்; மல் அல அம்கார் அமர் - மிகுதியாக இருண்ட எழில் சேர் மேகம் தவழும்; நான்மாடக் கூடல்-நான்மாடக் கூடலென்னும் மதுரை; வரதனை - வரம்தரு மாலினை; வான் எல் அலங்கு ஆரமணி மார்பனை; சூரியன் போல் ஒளிவீசும் மணிமாலை புனை மார்பினனை: புகழ்ந்து ஏத்துமினே-போற்றி வழிபடுவீர்; ஏ - அசை.*

**ஏததனத் தானரன் மால்போற்று மீசனிவ் வேழுலகும்**
**பூத்தனத் தானரம் போல்விழி யாளெழிற் பூவுறையு**
**மாத்தனத் தானர சிங்கந்தென் கூடல் வரதனம**
**தாத்தனத் தானர லொப்பா னவருக் கருள்சுரந்தே** 26

*ஏத்து அனத்தான் - தொழுதற்குரிய அன்னவாகனப் பிரமன்; அரன் - சிவபெருமான்; மால - விஷ்ணு; போறறும் ஈசன் - துதிக்கும பரமன்; இவ்வேழுலகும - இநத ஏழு உலகங் களும்; பூத்தனத்தான் - படைத்த செயலான்; அரம்போல் விழியாள் - கூரிய அரம் போன்ற கணணினளாம்; எழிற் பூவுறையும் - அழகிய தாமரை மலரில் விளங்கும்; மாததன் அத்தான் - இலக்குமியின் கணவன; நரசிங்க - நரசிங்க அவ தாரம் செய்தவன்; தெனகூடல் வரதன் - தென்மதுரை அழகன்; நம தாததன் - நமக்குத் தோழன்; அத்தான் - செவ்வையானவன்; நரல ஒப்பானவருக்கு - செத்தை ஒத்த வர்களுக்கு; அருள் சுரநதே - அருளைப் பொழிவான்;*

**சுரத்தினஞ் சாதடைந் தப்பாற் புகுந்தபின் தோற்றும்வண்சா**
**கரத்தினஞ் சாரு மணிக்கண்டன் வாழும் கடம்பவனத்**
**தரத்தினஞ் சாயன் மயிலனை யான்து தான்கடந்தால்**
**வரத்தினஞ் சாயுதன் மால்வாழும் கூடல் வளநகரே** 27

*சுரத்தின் - பாலைவனத்து; அஞ்சாது அடைந்து - பய மின்றிச் சென்று; அப்பால் புகுந்த பின் - அப்பாலைக்கு அப் புறம் போயபின்; தோற்றும் - தோன்றும், காணக் கிடைக் கும்; வணசாகரத்தின் - வளமான திருப்பாற் கடலின்; நஞ்சு ஆரும் - ஆல விடம் பொருந்திய; மணிக்கண் டன் - அழகிய கழுத்துடைய நீலகண்டன்; வாழும் - உறை யும்; கடம்பவனம் - கடமபாரணியம; தரத்தில் அம்சாயல் மயிலனையாய்-அழகிய மயிலொத்த தரத்துச் சாயல் கொண் டவளே; அதுதான் கடந்தால் - அக்கடம்பவனத்தைத் தாண் டினால்; வரத்தின் - மேன்மையில்; அஞ்சாயுதன் - பஞ்சாயுத முடையவன் (ஐம்படையான்); மால் வாழும் - திருமால் (அழகன்) கோயில் கொண்டிருக்கும்; கூடல் வளநகரே - கூடல் (மதுரை) என்னும் செழித்த நகராகும்; (அகத்துறை)*

வளநக ராகிய தென்கூடல் நாதன் மணிநகர்வாய்
களநக ராகம் வளைமதி மாழையொண் கண்முகநேர்
குளநக ரார்குழற் கோலமுற் றோர்மலர்க் கொம்புருகி
உளநக ராவலை யான்மயல் கூர ஒளிர்கின்றதே 28

*வள நகராகிய - வளம் சேர் பேரூராகிய; தென் கூடல் நாதன் - தென் மதுரைத் தலைவன்; மணிநகர் வாய்-அழகிய தலத்தில்; களம் நகர் ஆகம் - கழுத்து நகங்கள் உடல்; வளை மதிமாழை - (முறையே) சங்கு பிறைச் சந்திரன் பொன்; ஒண் கண் முகம் நேர் - ஒளிசேர் கண்களும் முகமும் ஒப்பன; குள நகர் - குளமும் மருத நிலமும்; ஆர்குழற் கோலமுற்று - பொருந்திய கூந்தலை அலங்கரித்து; ஓர் மலர்க் கொம்பு - ஒரு பூங் கொம்பனையாள்; உருகி - கரைந்து; உளம் நகர் - உள்ளத்து அசையும்; ஆவலையால் - வேட்கையால்; மயல்கூர - மயக்கம் மிக; ஒளிர்கின்றதே - பிரகாசிக்கின்றது;*

ஒளியாத வன்மதி ஒத்தகண் கூடற் கொருமுதல்வன்
களியாத வர்குலக் கற்பக மால்வரைக் கண்ணெவருந்
தெளியாத வம்பொற் செழுந்தனங்காட்டியுஞ் செங்கையிடத்
தளியாத வன்மை எவர்பா லறிந்தனை ஆயிழையே 29

*ஒளி - பிரகாசிக்கும்; ஆதவன் மதி ஒத்த - சந்திரர் சூரியர் ஒப்பான; கண் - விழிகளை உடைய; கூடற்கு - மதுரைக்கு; ஒரு முதல்வன் - ஒப்பற்ற தலைவன்; களி - மகிழும்; யாதவர் குலக் கற்பகம்-ஆயர்குலத்துக் கற்பகத் தருவனையான்; மால் வரைக் கண் - பழம் பெருமை வாய்ந்த மலையிடத்து; எவரும் - யாரும்; தெளியாத-அறியாத; அம்பொற் செழுந்தனங் காட்டியும் - அழகிய பெ.ன்னனைய வளமான முலைகளைக் காண்பித்தும்; செங்கையிட - செங்கரத்தால் தழுவ; அளியாத - தராத; வன்மை - கொடுமை; எவர்பாலறிந்தனை - யாரிடம் கற்றனை; ஆயிழையே - தேர்ந்த அணிகலன் புனைந்தவளே; செழுந்தனங் காட்டியும் - வளமான செல்வத்தைக் காண்பித்தும்; செங்கையிடத்தளியாத - சிவந்த கரத்தில் கொடுக்காத; வன்மை - கொடுமை என்பது தொனிப் பொருள்; (அகத்துறை)*

ஆயா தவாவிடை வாழ்வேனைக் காத்தரு ளுங்கைவளைத்
தூயா தவாவிடை மங்கையர்க் கின்பஞ் சுரந்தருள்செவ்
வாயா தவாவிடை யூர்வோன் அரனயன் மாய்ந்திடினும்
மாயா தவாவிடை யூறற்ற கூடன் மரகதமே 30

*ஆயாது - தேராது; அவாவிடை - ஆசைகளுக்கு இடையில்; வாழ்வேனை-வாழும் என்னை; காத்தருளும் - இரட்சித் தருள் புரியும்; கைவளைத்தூ யாதவா - கரங்களில் வளை யணிந்த தூய்மையான யதுகுலத்தாய்; இடைமங்கையர்க்கு - ஆயர் பெண்களுக்கு; இன்பம் சுரந்து அருள் - மகிழ்வு பொழிந்தளிக்கும்; செவ்வாயாதவா - சிவந்த வாயுடையவவ; விடை ஊர்வோன் - காளை வாகனனாய; அரன் - சிவன்; அயன் - பிரமன்; மாய்ந்திடினும் - அழிவுற்றாலும்; மாயா தவா - அழிவில்லாதவனே; இடையூறற்ற - துன்பம் இல்லாத; கூடல் மரகதமே - கூடல் நகரத்து மரகதக் கல் போன்றவ; (அகத்துறை).*

தகவா கனத்தனரன்பணி கூடற் றலைவவடற்
ககவா கனத்த னரநாம வாயர்தம் கன்னியர்க்குச்
சுகவா கனத்த னரசிங்க ரூபவெங் தொல்வினைகள்
உகவா கனத்த னரகும் புகாம லுகந்தருளே 31

*தகவாகு - தக்க தன்மையதாம்; அனத்தன் - அன்னத்தை உடைய பிரமன்; அரன் - சிவன்; பணி - வணங்கும்; கூடற் றலைவ - மதுரைக்கிறைவ; அடல் - வலிமை சேர்; ககவாக னத்த - கருடனை வாகனமாக உடையவ; நரநாம - நரநாரா யணக் கோலத்த, நர என்ற பெயர் கொண்டவ; ஆயர்தம் கன்னியர்க்கு - இடையர் இளம் பெண்களுக்கு; சுகவா - இன்பமளிப்பவ; கனத்த - வன்மையான; நரசிங்க ரூப - நர சிம்ம வடிவ; எம் தொல் வினைகள் - எங்கள் பழைய வினை கள்: உக - அழிய; வா - வந்தருள்; கனத்த - நெருக்கமான; நரகும் புகாமல் - நரகத்துப் போகாமல்; உகந்தருள் - மகிழ்ந் தருளுக; ஏ-அசை.*

அருள மலைக்கும் படிக்குந்தென் கூட லணிநகர்க்கும்
தெருள மலைக்கும் விண்டேவர்க்கும் யாவர்க்குஞ்
செம்பொனுருக்

கருள மலைக்கு மடியார்க்கு நாயகன் காவன்மன
மருள மலைக்கு மனனாட்டுப் பானெதிர் வந்தளித்தே 32

*அருள் அமலைக்கும் - அருள் புரியும் திருமகளுக்கும்; படிக்கும் - பூமி தேவிக்கும்; தென் கூடல் அணிநகர்க்கும் - தென் மதுரை எழிற்பதிக்கும்; தெருள மலைக்கும் - நிறைந்து திகைக்கும்; விண் தேவர்க்கும் - வானவர்களுக்கும்; யாவர்க்கும் - அனைவருக்கும்; செம்பொன் உரு - சிவந்த பொன் வடிவ; கருள-மலைக்கும் - மலையனைய கருடனுக்கும்; அடியார்க்கும் - தாசர்களுக்கும்; நாயகன் - தலைவன்; வன்மனம் - கடின உள்ளம்; மருள - மயங்க; மலைக்கும் - போரிடும்; மனம் - சிந்தை; நாட்டுப்பான் - நாட்டுவிப்பவன்; எதிர் வந்து - முன்வந்து; அளித்தே கா - நெருங்கி இரட்சிப்பாய்;*

வந்தன மாதங்கங் காத்தாயுன் பாற்புகல் வண்ணவிடைத்
தந்தன மாதங்கத் தனய னேத்துந் தயரதன்தன்
நந்தன மாதங்க நாகத்தி னாய்நள நாண்மலர்வாய்ச்
சந்தன மாதங்க மற்றுறை கூடற் றயாபரனே 33

*உன்பாற் புகல் - உன்னிடம் அடைக்கலம்; வந்தன - வந்ததாய; மாதங்கம் - யானையை (கசேந்திரனை); காத்தாய் - காப்பாற்றினை; வண்ண இடை - அழகிய இடையானது; தந்தன - நூல் அன்ன; மாது - உமையவள்; அங்கத்தான் - தன் உடலின் இடது பாகத்தானாகிய, அரன் சிவன்; அயன் - பிரமன்; ஏத்தும் - தொழும்; தயரதன் தன்நந்தன - தசரத சக்கரவர்த்தித் திருமகனே; மா - பெரிய; தங்க நாகத்தினாய் - மேரு எனும் பொன் மலையை உடையவ; நள நாண்மலர் வாய் - அகன்று நாள்தோறும் மலரும் தாமரையில்; சந்தனம் - தூது விடுத்தற்குரிய அன்னம்; ஆதங்கம் அற்று - உபத்திரவமின்றி; உறை - தங்கி இருக்கும்; கூடல் - மதுரை நகரத்து; தயாபரனே - கிருபாகரனே;*

பரத்துவம் பாண்டியன் கொண்டாடப் பாடிய பட்டர்பிரான்
சிரத்துவம் பார்மலர்ச் சேவடி நாட்டிய சீதரன்செங்
கரத்துவம் பார்முலைக் கஞ்சமின் னாள்புணர் காதலன்கா
மரத்துவம் பார்பொழிற் றென்கூடல்நாதனை வாழ்த்துமினே 34

பரத்துவம் - கடவுட்டன்மையை; பாண்டியன்-பாண்டிய நாட்டு மன்னவனே; கொண்டாட - மெச்சும்படி; பாடிய - கவிதை புகன்ற; பட்டர்பிரான் - பெரியாழ்வார்; சிரத்து - தலையில்; வம்புஆர் மலர்ச்சேவடி - வாசனை கமழும் சிவந்த மலரனைய திருவடிகளை; நாட்டிய - பதித்தருளிய; சீதரன்- இலக்குமியை மார்பில் தரித்த மாலவனின்; செங்கரத்து - செம்மையான கைகளில்; வம்பார் முலை - கச்சணிந்த முலைகளுடைய; கஞ்ச மின்னாள் - தாமரையில் ஒளிரும் மின்னலனைய திருமகள்; புணர் - அணையும்; காதலன் - மகிழ்நன்; காமரத்து - சோலைகளின் மரங்களில்; வம்பு ஆர் - வண்டுகள் நிறைந்த; பொழில் - சோலைகளை உடைய; தென்கூடல் நாதனை - தென்மதுரை இறைவனை; வாழ்த்துமினே - போற்றுங்கள்; (காமரத்து வம்பு - காமரப்பண் இசை வண்டு எனவும் கொள்க)

துவந்தனை யாதனைச் சாபமு மாற்றிஒண் சோதியினாற்
கவந்தனை யாதவ னாக்கிய மால்கழல் காண்பதற்கு
நிவந்தனை யாதனை போலளிப் பானெடு நாள்வனநீர்
தவந்தனை யாதரஞ் செய்வீர் தென்கூடலைச் சாருமினே 35

துவந்தனை - துவந்த என்றவனின்; யாதனைச் சாபமும் மாற்றி - அவனைப் பற்றிய சாபங்களை எல்லாம் நீக்கி; ஒண் சோதியினால் - ஒளிரும் பிரகாசத்தால்; கவந்தனை - கவந்தன் என்பானை; ஆதவனாக்கிய - சூரியன் போலச் செய்த; மால் கழல் காண்பதற்கு - திருமால் திருவடிகளைத் தரிசிப்பதற்கு; நிவந்தம் - கடமையை; நையாது - நோவுறாது; அனை போல் - தாய் போன்று; அளிப்பான் - அருளுவான்; நெடு நாள் - நீண்ட காலம்; வனம் - காட்டில்; நீர் - நீங்கள்; தவந்தனை - தவம் புரிதலை; ஆதரம் செய்வீர் - விரும்புபவர்களே; தென்கூடலை - அழகிய மதுரைப் பதியை; சேருமினே- சேருவீர், அடைவீர்;

சாரங்க னாக மலைக்குந்தென் கூடற்குந் தாரகமாம்
வாரங்க னாக மலைக்குநன் னாயகன் வாரிசம்சேர்
காரங்க னாக மலைக்குங் கராவைக் கடிந்தவன்பொற்
சீரங்க னாக மலைக்குமெப் பாவமுந் தீர்ந்திடுமே 36

சார் அங்கு அ நாக மலைக்கும் - அங்கே சார்ந்துள்ள அந்தச் சேடகிரிக்கும்; தென்கூடற்கும் - தென் மதுரைக்கும்; தாரகமாம் - கண்ணென விளங்கும்; வார் அங்கன் ஆ - கச்சு அங்கத்தாம்; கமலைக்கும் - திருமகளுக்கும்; நன்நாயகன் - நற்றலைவன்; வாரிசம் சேர் - தாமரைக் குளத்தை யடைந்த; காரங்க நாகம் - கரிய வடிவ யானையை; அலைக்கும் - வருத்தும்; கராவை - முதலையை; கடிந்தவன் - கொன்றவன்; பொன் - ஒளிசேர்; சீரங்கன் - ஸ்ரீரங்கநாதன்; ஆகம் மலைக்கும் - நெஞ்சில் போரிடும்; எப்பாவமும்-எந்தத் தீவினையும்; தீர்ந்திடும் - அழியும்;

தீரத் தனஞ்செய வல்லவை யாயுதஞ் சேருமடல்
ஏரத் தனஞ்செயும் புற்பவ நேர்விழி யின்கணவ
வீரத் தனஞ்செயன் பாகாதென் கூடற்கு வித்தகபொன்
ஆரத் தனஞ்செய லெல்லாமுன் தாளுக் கருப்பணமே 37

தீரத்தனம் செயவல்ல - வலிய ஆண்மை புரியவல்லதாம்; வையாயுதம்சேர் - கூரிய படைக்கலன் சேரும; அடல் ஏர் அத்தனம் செயும் புற்பவ நேர் - வலிமை பொருநதிய அத்தன்மை புரியும் அம்பினை ஒத்த; விழியின் - கண்களுடையவள் (திரு); கணவ - மகிழ்ந; வீரத் தனஞ்செயன் பாகா - வீரமுள்ள பார்த்தனின் சாரதியே; தென்கூடற்கு - அழகிய மதுரைக்கு; வித்தக - இறைவன்; பொன் ஆரத்தன் - பொன்மாலை பூண்டவன்; நம் செயல் எல்லாம் - நாங்கள் புரியும் செய்கை யாவும்; உன் தாளுக்கு - உன் திருவடிகளுக்கு; அருப்பணமே - படையலாகும்;

அருப்பனந் தாவனம் சேர்தனம் பூங்குழ லாயிழையை
கருப்பனந் தாவனற் பூங்கணை யாலெய்து கண்டனனென்
விருப்பனந் தாவன மாவா பரண விமலவராப்
பொருப்பனந் தாவனன் போற்றுந்தென் கூடற் புரிஇறையே 38

அருப்பு அன - பூ மொட்டுக்கள் அனைய; அந்தா வனம் சேர் - ஐயோ (மகிழ்ச்சிக் குறிப்பு) அழகு சேர்ந்த; தனம் - முலைகளுடைய; பூங்குழல் ஆயிழையை - புஷ்பமணிந்த கூந்தலுடைய பெண்ணை; கருப்பன் - கரும்பு வில்லுடைய மன்

மதன்; நந்தா - மிகுதியாக; அனற் பூங்கணையால் - தீய னைய மலரம்புகளால்; எய்து கண்டனன் - தாக்கலுற்றனன்; என் விருப்பு - என் ஆசை; அ - அந்த; நந்தாவன - பூஞ் சோலையில்; மாவாபரண - அழகிய அணி புனைந்த (இலக்கு மியை மார்பில் அணி எனத் தரித்த); விமலவரா - இறைவ ராக; பொருப்பன் - கைலை மலையன்; நந்தா அனன் - வெண்மையான அன்ன வாகனன்; போற்றும் - வணங்கும்; தென்கூடற்புரி - தென்மதுராபுரி; இறையே - அழகனே;

**புரிவல மாயின்நீ ராட்டி னருமனப் போற்றும்பாற்**
**பரிவல மாயி னுறுமெனப் பார்த்தயர் பண்பினொடும்**
**பிரிவல மாயினங் கூடற் பிராற்கென பேசிடில்வெண்**
**கரிவல மாயிரங் கண்ணாற்கெட் டாத கதிவருமே** 39

புரிவல மாயின்நீர் ஆட்டினரும் - வலம்புரிச் சங்கால் அபி டேகம் செய்பவரும்; மனப்போற்று - மனத்திற் றொழும்; நும்பால் - உம்மிடம்; பரிவு அலமாயின் உறும் என - அன்பு சஞ்சலமடையின் சம்பவிக்கும் என்று; பார்த்து - கண்டு; அயர் - தளரும்; பண்பினொடும் - குணத்துடன்; பிரிவல மாயில் நங்கூடற் பிராற்கு என - ஆராயின் பிரியோம் நம் கூடல் அழகனை என்று; பேசிடில் - கூறினால்; வெண்கரி வலம் - வெள்ளானையில் வலம் வரும்; ஆயிரம் கண்ணாற்கு- ஆயிரம் கண்களுடைய இத்திரனுக்கு; எட்டாத - அடைய வியலாத; கதி - மோட்சம்; வரும் - கிட்டும்; ஏ - அசை.

**வரும்படி யாரை யுவந்தளிப் பானிவண் வந்துதன்பால்**
**திரும்படி யாரை யளப்பவன் கூடல்எம் தெய்வத்தினைக்**
**கரும்படி யாரை நறுஞ்சுவை போன்மொழிக் காரிகைநீ**
**விரும்படி யாரை நிகரா யுனக்கு விளம்புவதே** 40

வரும் - தன்பால் வந்து சேரும்; படியாரை - பூவுலக மாந் தரை; உவந்து - மகிழ்ந்து; அளிப்பான் - காப்பான்; இவண் வந்து தன்பால் - இங்கு வந்து தன்னிடம்; திரும்ப - திரும்ப நிற்கும்; அடியாரை - தாசர்களை; அளப்பவன் - அவர்கள் (விருப்பத்தை) அளவிடுபவன்; கூடல் எம் தெய்வத் தினை - மதுரையில் உறை எம் இறைவனை; கரும்படியாரை-

*நறுஞ்சுவைபோல் மொழிக் காரிகை - கரும்பின் அடிப்பகுதியின் இன்சுவை போலப் பேசுகின்ற பெண்ணே; நீ விரும்படி - அடி! நீ விரும்பு; யாரை நிகராயுனக்கு விளம்புவதே - உனக்கு ஒப்பாக எவரை உரைப்பது;*

**விளைப்பா னலங்கை மலர்க்கணை யாலடல் வேள்வின்பந்**
**திளைப்பா னலங்கை விடாதவட் சேர்க தினமும் வயற்**
**களைப்பா னலங்கை விடநேர் நிறத்தரக் கன்குலங்கள்**
**கிளைப்பா னலங்கையைச் செற்றாய்தென் கூடற்கிளரொளியே**
**41**

*பானல் அங்கை மலர்க் கணையால் - கருங்குவளை முதலாய அகன்ற கரத்துள்ள புஷ்ப பாணங்களால்; அடல்விளை- வெற்றி விளைவிக்கும்; வேள் - மன்மதன்; இன்பம் - சுகம்; திளைப்பான் - அனுபவிக்க; நலம் - இன்பத்தை; கைவிடாது - நீங்காது; அவட் சேர்க - அவளை அடைக; வயற் களைப்பு ஆன - வயலிற் களை முளைத்தது போல; அல் அங்கைவிட நேர் - இருளும், கையில் உள்ள விஷமும் ஒத்த; அரக்கன் குலங்கள் - அரக்கர்களின் வமிசம்; கிளைப்பான - கூட்டமான; லங்கையை - இலங்கா நகரை; செற்றாய் - அழித்தாய்; தென்கூடற் கிளர் ஒளியே - தென் மதுரையில் விளங்கும் சோதியே;*

**ஒளிவானவனை நிகர்முடியாய்மறை உச்சியெலாந்**
**தெளிவா னவர்தம் திருமுடி யாய்வளம் சேர்பொழின்மேற்**
**றுளிவா னவமுகில் தோய்கூடல் நாதநின் தொண்டனைநன்**
**களிவானவ மணியாராவுன் தாளுக் கடைக்கலமே 42**

*வானவனை நிகர் - சூரியனை ஒத்த; ஒளி முடியாய் - பிரகாசிக்கும் மகுடத்தாய்; மறை உச்சி எலாம் - வேதத்தின் மேன்மை யாவும்; தெளிவானவர் - தெளிந்துணர்ந்தோர்; தம் - தமது; திருமுடியாய் - அழகிய சிரத்திலிருப்பவ; வளம் சேர் பொழின்மேல் - செழிப்பு நிறையும் சோலைகளின் மேலே; வான் நவமுகில் துளிதோய் - வானில் புதிதாக மழை மேகம் தவழும்; கூடல் நாத - மதுரைக்கிறைவ; நின் தொண்டனை - உன் அடியனாம் எனை; நன்கு அளி - நன்றாகக் கா;*

வான் - பெருமை சேர்; நவமணி ஆரா - நவரத்தின மாலை பூண்டவா; உன் தாளுக்கு - உன் திருவடிகளுக்கு; அடைக் கலமே - சரணே;

**அடைத்தலை யாகங் கறுத்தா ரரக்கிய ரால்வயிறு**
**புடைத்தலை யாவிழ விற்கோட்டு நாத புரப்பழிப்புப்**
**படைத்தலை யாற்றுந்தென் கூடலண்ணா கொடும் பாவியர்தம்**
**கடைத்தலை யானினிச் செல்லாது க க்கக் கடனுனக்கே 43**

அடைத்தலை - பரட்டைத் தலை; ஆகம் - உடல்; கறுத் தார் - கருமையானவராம்; அரக்கியரால் - இராட்சசிகளால்; வயிறு புடைத்து - வயிற்றிலடித்துக் கொண்டு; அலையாவிழ- அலைந்து விழுமாறு; விற்கோட்டு - வில்லை வளைத்த; நாத- தலைவ; புரப்பழிப்புப் படைத்தலை - காத்தல், அழித்தல், ஆக்கல் எனும் முத்தொழிலை; ஆற்றும் - புரியும்; தென் கூடல் - தென் மதுரை; அண்ணா - இறைவா; கொடும்பாவி யர் தம் - கொடிய தீவினையாளர்களின்; கடைத்தலை - வாச லில்; யான் இனிச் செல்லாது - இனியும் நான் போகாமல்; காக்கக் கடன் உனக்கே - காத்தல் உனக்கே கடமை;

**கடமலை யார மருப்பொசித் தாரருட் கண்ணன்மணி**
**வடமலை யார மருப்பன வன்முலை மங்கையர்கோன்**
**தடமலை யார மருப்பங் கயம்புரை தாளரராத்**
**திடமலை யார மருங்கூடல் சேருதும் சேவிக்கவே 44**

கடமலை - மதம்சேர் மலை போன்ற யானை (குவலயா பீடம்) ஆரமருப்பு - முத்துக்களுடைய தந்தத்தை; ஒசித்தார்- முறித்தார்; அருட்கண்ணன் - அருள் பொழியும் விழியினன்; மணிவடம் - ரத்ன ஹாரம்; அலையார - புரளுதல் பொருந் திய; மருப்பன வன்முலை மங்கையர்கோன் - கொம்பொத்த வலிய முலைகளுடைய பெண்களின் தலைவன்; தடம் அலை - அலை தவழ் நீர்த் தடாகத்து; ஆர - நிறைந்த; மருப்பங்கயம்- வாசனை கமழ் தாமரை மலரினும்; புரைதாளர் - உயர்ந்த திருவடியினர்; அராத் திடமலையார் - சேஷ மலையினர்; அமரும் - வீற்றிருக்கும்; கூடல் சேர்தும் சேவிக்கவே - வணங்கு வதற்கு மதுரையை அடைவோம்;

**சேவிக்க வந்தனை செய்யநின் பேரெழில் சேவைசெய்து**
**பாவிக்க வந்தனை போலளித்தாயது பற்றிவிண்மேற்**
**றாவிக் கவந்தனைச் செற்றாயுன் தாளிணை சார்ந்தனனெ**
**னாவிக் கவந்தனைத் தீர்ப்பாய்தென் கூடலுக் காரமுதே** 45

*சேவிக்க - தரிசனம் செய்ய; வந்தனை செய்ய - வணக்கம் புரிய; நின் பேரெழில் - உன் மகத்தான அழகை; சேவை செய்து - வழிபட்டு; பாவிக்க - வழங்க; வந்தனை போலளித் தாய் - வந்தவன் போல் அனுக்கிரகம் செய்தாய்; அதுபற்றி - அதனால்; விண்மேல் - வான்மீது; தாவி - பாய்ந்து; கவந்த னை - கவந்தன் என்பவனை; செற்றாய் - வதைத் தாய்; உன் தாளிணை சார்ந்தனன் - உன் திருவடிகளை அடைந்தேன்; என் ஆவிக்கு அவந்தனை - என் பிராணனுக் குள்ள பாழ்நிலையை; தீர்ப்பாய் - நீக்குவாய்; தென்கூட லுக்கு - தென்மதுரைக்கு; ஆரமுதே - பொருந்திய அமிழ்தம் அனையானே;*

**ஆரவ ராகத்தம் பொன்னொளி யோடுநின் றார்மதுரை**
**ஊரவ ராகத்த னஞ்சயின் றோனல னுற்றுணர்ந்தால்**
**வீரவ ராகத் தனிமுத லோன்எனல் வித்தகமெய்**
**யோரவ ராகத் தனைஎளி யேன்றனக் கோதுகவே** 46

*ஆரவ - ஆரவாரமுடன்; ராகத்து - சிவந்த; அம்-அழகிய; பொன் ஒளியோடு - பொன்னின் சோதியுடன்; நின்றார் - இருந்தவராகிய; மதுரை - கூடல்; ஊரவராக - பதியினராக; அத்த-அந்த; நஞ்சயின்றோன்-ஆலவிடமுண்ட சிவன்; அலன்- அன்று; உற்றுணர்ந்தால் - சென்று அறியின்; வீர - வலிமை யுள்ள; வராக-பன்றி உருவெடுத்த; தனிமுதலோன்-ஒப்பற்ற முதற் பொருளே; எனல் - என்பது; வித்தக மெய்யோர் - மெய்ஞானியர்; அவராக - அவர்களாக; தனை - தங்களை, எளியேன் தனக்கு - அற்பன் எனக்கு; ஓதுக - கூறட்டும்; ஏ - அசை;*

**ஓதம ராடி யொருபான் முடியன் உருளமண்மேற்**
**பாதம ராடி பரதனுக் கீய்ந்த பரமமனை**

மீதம ராடி ஒளிசேருங் கூடலெம் வித்தகநீ
யேதம ராடி யெனையளிப் பாரினி இங்கில்லையே 47

ஓது - கூறப் பெறும்; அமராடி - போர் புரிந்து; ஒருபான் முடியன் - பத்துத்தலை ராவணன்; உருள - மடிய; மண்மேல்- பூமியில்; பாதமராடி - திருவடிப் பாதுகை; பரதனுக்கு - இள வல் பரதனுக்கு; ஈய்ந்த - அளித்த; பரம - பரம்பொருளே; மனைமீது - வீடுகளின் மேலே; அமர் - பதித்த; ஆடி ஒளி சேரும் - பளிங்குக் கண்ணாடியின் ஒளி கூடிய; கூடல் - மதுரை; எம் வித்தக-எங்கள் பெரியவ (கடவுள்); நீயே தமர்- நீயே உறவு; ஆடி - ஆளுக; எனையளிப்பார் - எனை ரட்சிப் பார்; இனி - வேறு ஒருவர்; இங்கில்லை - இங்கே இலர்; ஏ - அசை.

இலவங்க மாக முகினேர் தரும்பொழி லிற்பயிலும்
பிலவங்க மாக முகிறாவுங் கூடற்பிரான் மலைகள்
குலவங்க மாக மந் தோதரி தாமடிக் கோகனகம்
வலவங்க மாக மதிப்போம் பவக்கடல் மாற்றுதற்கே 48

இலவங்கம் - கிராம்பு மரம்; மாகமுகின் - உயர்ந்த பாக்கு மரத்தின்; ஏர்தரும் - அழகு தரும்; பொழிலில் - சோலை களில்; பயிலும் - சஞ்சரிக்கும்; பிலவங்கம் - குரங்கு; மாக முகில் தாவும் - வானில் மேகங்களில் சாடும்; கூடல் - மதுரை; பிரான் - தலைவன்; மலைகள் - வரைகள்; குலவ - விளங்கும்; அங்கமாகஅம் - உறுப்புக்கள் ஆகும்( முலைகளாகும்) அழ கிய; மந்தோதரி-இராவணன் மனைவி மண்டோதரி;தாமடிக் கோகனம் - தம்முடைய பாதங்களாம் தாமரையை; பவக் கடல் - பிறவிக் கடலை; மாற்றுதற்கு - கடத்தற்கு; வல - வல் லமையுள்ள; வங்கமாக - மரக்கலமாக; மதிப்போம் - கருது வோம் (அகலிகை, திரௌபதி, தாரை, மந்தோதரி, சீதை என்ற ஐவரும் பஞ்ச கன்னியராகப் போற்றப்படுகின்றனர்);

மாற்றத் தரமலம் வல்வினைப் புன்பவம் மாற்றிநம்மை
ஏற்றத் தரமல வேதற்கெட் டாக்கதி யீய்ந்தொருவா
நாற்றத் தரமல ராராமக் கூடல் நகரில் மழைத்
தோற்றத் தரமல மும்மையும் வீட்டிச் சுகந்தருமே 49

மாற்றத் தரம் அலம் - நீக்கும் தன்மை இலேம்; வல்வினைப் புன்பவம் மாற்றி நம்மை - கொடிய பாவங்களால் பெற்ற ஈனப் பிறவியை நமக்கு மாறும்படி செய்து; ஏற்று அத்தர் - விடைக்கு நாதன் சிவன்; அமல வேதற்கு - புனிதப் பிரமனுக்கு; எட்டா - அடையவியலாத; கதியீய்ந்து - ஆதரவு அருளி; ஒருவா - நீங்காத; நாற்றத்தர - நல்மணங்கமழும்; மலர் ஆராம - பூஞ்சோலை விளங்கும்; கூடல் நகரில் - மதுரைப் பதியில்; மழைத் தோற்றத்தர் - மேகமனைய வடிவர்; அ-அந்த; மலம் மும்மையும்-ஆணவம், கன்மம், காமியம் என்ற மூன்று மலங்களையும்; வீட்டி - வீழ்த்தி; சுகந்தரும் - இன்பம் அருளும்; ஏ - அசை;

**தருமந்த காரமுண் ணோயினை யென்று தளர்ந்திடுமென்**
**அருமந்த காம ரணங்கினை வாளழ கார்ந்தமணித்**
**திருமந்த காச வதனகம் பீரவெந் தீயவரைப்**
**பொருமந்த காவளத்தென் கூடற் போதப் பொருட்கடலே 50**

தரும் அந்தகாரம் உள்நோயினை என்று - இருளானது மன நோயினைத் தரும் என; தளர்ந்திடும் - சோர்வடையும்; என் அருமந்த - என் அரிய மருந்து (அமுது) அனைய; காமர்- அழகிய; அணங்கு - பெண்மகள்; இனைவாள் - வருந்துவாள்; அழகார்ந்த - எழில் பொருந்திய; மணித்திரு மந்தகாச வதன- மணியனைய அழகிய புன்னகை தவழும் முக விலாச; கம்பீர - வீரமுழக்கும் தோற்றத்த; வெந்தீயவரை - கொடிய பாவிகளை; பொரும்-அழிக்கும்; அந்தகா-கூற்றுவனே; வளத்தென் கூடல் - வளம் மிகுந்த தென் மதுரையில் உள்ள; போதப் பொருட்கடலே - ஞான சாகரனே;

**பொருப்பரந் தாமரைப் பொன்னா தனத்தர் புகழ்ந்திறைஞ்சும்**
**திருப்பரந் தாமரைத் தென்கூடல் நாதனைச் சேவைசெய்யா**
**மிருப்பரந் தாமரை வேல்விழி யாருக் கினைந்தனமிவ்**
**வுருப்பரந் தாமரைத் தென்றுகொ லோவிருந் துய்குவமே 51**

பொருப்பர் - கைலை மலைச் சிவன்; அம்தாமரைப் பொன் ஆதனத்தர் - அழகிய தாமரை மலராம் பொலிவுள்ள பீடத்தன் பிரம்மா; புகழ்ந்து இறைஞ்சும் - போற்றித் துதிக்

குட்; திருப்பரந்தாமரை - எழிலார் வைகுந்த வாசரை; தென் கூடல் நாதனை - தென் மதுரை இறைவனை; சேவை செய் யாம் - தொண்டு செய்யும் நாங்கள்; இரு - கரிய; பரம்தா - தாவும் செயல் உள்ள; மரை - மான்; வேல் - வேலாயுதம் ஒத்த, விழியாருக்கு - கண்களை உடைய பெண்களுக்கு; இனைந்தனம் - வருந்தினோம்; இவ்வுருப்பரம்தாம் - இவ்வடிவின் சுமைகள் எல்லாம்; அரைத்து-அழித்து; என்றுகொலோ- என்றைக்கு; இருந்து - நின்று; உய்குவம் - ஈடேறுவோம்;

**உய்யத் தராமனை வாழ்க்கைஎன் றோர்ந்தொரு வாமுனியம்**
**பெய்யத் தராமனை யாததென் கூடற் கிறைவதிரு**
**மெய்யத்த ராமனை நேர்வதனா விடமேவு துத்திப்**
**பையத்த ராமனை யாவென்று போற்றிப் பணிகுதுமே 52**

உய்யத்தரா - ஈடேறலைத் தராது: மனை வாழ்க்கை - இல்வாழ்வு; என்றோர்ந்து - எனத் தெளிந்து; ஒருவா - நீங்கி: முனியம்பு - வில்லிலிருந்து கணைகளை; எய்யத் தராமல் - செலுத்தவளிக்காது; நையாத - குறைவு படாத; தென் கூடற்கு - அழகிய மதுரைப் பதிக்கு; இறைவ - தலைவா; திருமெய்யத்த - திரு மெய்யப்பதியவனே; ராமனை நேர்வ தனா - ஸ்ரீராமனை ஒத்த முகத்த; விடம்மேவு - விஷம் பொருந்திய; துத்திப்பையத்த - புள்ளிகளை உடைய படம் உடைய; அரா - பாம்பை; மனையா - வீடாகக் கொண்டவனே; என்று போற்றி - எனப் புகழ்ந்து; பணிகுதும் - வணங்குவோம்; ஏ - அசை.

**பணிமுடி ஆயிரந் தாங்கிய பார்ஒரு பைங்குடைக்கீழ்**
**மணிமுடி யாதி பதியா யிருந்துமென் மஞ்சுளஞ்சேர்**
**அணிமுடி யாடவர் வாழ்கூடல் நாதருக்கு அன்புடன்வெம்**
**பிணிமுடி யாயது வன்றோ அடையும் பெரும்பயனே 53**

பணி முடி ஆயிரம் - ஆயிரம் தலைகள் உடைய பாம்பு. (ஆதிசேடன்); தாங்கிய - தலையில் தாங்கிடும்; பார் - பூமியை; ஒரு பைங்குடைக் கீழ் - ஒற்றைக் கொற்றக் குடையின் கீழே; மணிமுடி - (ஆளும்) மணிமகுட; ஆதிபதியாய் - மன்னனாக; இருந்தும் - வாழ்ந்தும்; என் - என்ன பயன்;

*மஞ்சுளம்சேர் - எழில் சேர்ந்த; அணிமுடி - ஆபரணங்கள் சூடிய; ஆடவர் வாழ்-ஆண் மக்கள் வாழும்; கூடல் நாதருக்கு- மதுரை இறைவனுக்கு; தெருக்கு-வீதிகளுக்கு; அன்புடன்-நேய முறவும்; வெம்பிணி முடியாயதுவன்றோ-கெ.டிய (வேட்கை) நோய் கொள்ள முடியாது அஃதன்றோ; அடையும் பெரும் பயன்-பெருகின்ற மிக்க பலன்; ஏ - அசை.*

**பயம்பய னாமென உண்டுடற் பாரம் பரிப்பவர்க்கு**
**நயம்பய னாடுநர் தங்கட்குங் கூடற்கு நாதனந்தாச்**
**சுயம்பய னான்மறைச் சோதிமெஞ் ஞானச் சுடரைமறந்**
**தியம்பய னாரியர்க் கென்னோ வுனைந்துளைந் தேங்குவதே 54**

*பயம் - பால்; பயனாமென - பயனாகும் என்று; உண்டு - அருந்தி; உடற் பாரம் - உடலின் சுமை; பரிப்பவர்க்கும்- தாங்குபவர்களுக்கும்; நயம் பயம் நாடுநர் தங்கட்கும் - நன்மை தின்மை அடைபவர்களுக்கும்; கூடற்கு நாதன் - மதுரை இறைவன்; நந்தா - வளரும்; சுயம்பயன் நான்மறை - தானாகவே சொல்லுரையான நால் வேதங்களின்; சோதி - ஒளியான; மெய்ஞான - உண்மை அறிவின்; சுடரை- ஒளியை; மறந்து - நினையாமல்; அம்பயல் நாரியர்க்கு - அயற் பெண் களுக்கு; என்னோவும் - ஏனோ; நைந்து - கெட்டு; உளைந்து- கொதித்து; ஏங்குவதே - தளர்வது; இயம்பு - கூறுக;*

**ஏங்கு வளைக்குலம் வெண்மணி ஈனும் இருந்தடத்துந்**
**தேங்கு வளைக்குலம் சேரரங் காதென் மதுரைஎந்தாய்**
**பூங்கு வளைக்குமங் காந்தசெவ் வாயெம் புராதனனீ**
**தாங்கு வளைக்கு நிகர்குழை யாளிந்தத் தையலையே .55**

*ஏங்கு வளைக்குலம் - வருந்தும் சங்கினங்கள்; வெண்மணி ஈனும் - முத்துக்களை அளிக்கும்; இருந்தடத்தும் - பெரிய நீர் நிலையில்; தேங்குவளைக் குலம் - தேன்நிறை குவளை மலர்க் கூட்டம்; சேர் - அடைந்த; அரங்கா - ஸ்ரீரங்கநாதா; தென் மதுரை - அழகிய மதுரை நகர; எந்தாய் - தலைவனே; பூங் குவளைக்கும் - மென்மையான செங்குவளை மலருக்கு ஒப்ப; அங்காந்த - வாய் திறந்த; செவ்வாய் - சிவந்த வாயுடைய;*

புராதனன் நீ - பழைமையோனாகிய நீ; தாங்கு - காப்பாற்று; வளைக்கு நிகர் - கைவளைக்கு ஒத்த; குழையாள் - குண்டலத்தாள்; இந்தத் தையலை - இவ்விளம் பெண்ணை; ஏ - அசை;

தையலஞ் சாயற் றடங்கணி னார்தம் தனத்துமதப்
பையலஞ் சாய மலர்க்கணை யால்வசப் பட்டுருகி
நையலஞ் சாயக நான்மாடக் கூடல் நகர்நம்பிரான்
மையலஞ் சாய வருவான்பொற் பாதம் வழுத்துவமே 56

தையல் அம் சாயல் தடங்கண்ணினார் தம் - அழகிய நுண்ணிய அகன்ற விழியினர்களுடைய; தனத்து - முலைகளில்; மதப்பையல் - மன்மதன்; அஞ்சாய மலர்க் கணையால் - பஞ்ச புஷ்ப பாணங்களால்; வசப்பட்டு - ஆளப் பட்டு; உருகி - கரைந்து; நையலம் - வருந்திலம்; சாயக - அம்புபோல் கூர்மையாக உயர்ந்த; நான்மாடக் கூடல் நகர் - மதுரைப்பதி; நம்பிரான் - நம் தலைவன்; மையல்ம் சாய - குற்றம்சேர் துன்பம் அழிய; வருவான் - வந்தருளுபவனின்; பொற்பாதம் - பொன்னார் திருவடிகளை; வழுத்துவமே - வந்தனை புரிவோமே;

வழுத்தமை மானம் பணைத்தோண் மலர்க்குழல் வல்லியிடம்
விழுத்தமை மானன வேல்விழி யாள்மதி வெண்கலையால்
எழுத்தமை மான மிழந்தனள் நீவந் திடுகவளம்
பழுத்தமை மானப் படப்பைஒண் கூடற் பராபரனே 57

வழுத்து-கூறப் பெறும்; அமைமான் அம்பணைத்தோள் - மூங்கிலை ஒத்த பருமையான தோள்களுடைய; மலர்க்குழல் வல்லி - பூச்சூடிய கூந்தற் கொடியனையாள்; இடம் - அவளிடம்; விழுத்த - செழுமையான; மை - கருத்த; மான் அன - மானை ஒத்த; வேல் விழியாள் - வேல் போன்ற கண்ணினள்; மதி வெண்கலையால் - சந்திரனின் வெண் கிரணத்தால்; எழுத்து அமை - தோன்றிப் பொருந்திய; மானம் இழந்தனள் - வெட்கத்தை இழந்தனள்; நீ வந்திடுக - நீ அவள்பால் அடைக; வளம் பழுத்த - செழுமை கனிந்த; மைமான - வான

மேகம் என; படப்பை ஒண்கூடல் - கொல்லைகள் ஒளிசெய் மதுரை; பராபரனே - மூலப் பரமனே (அகத்துறை);

பரதனத் தாமனற் பைம்பொழிற் கூடற் பதியிறைவ
சரதனத் தாமனர் தங்குலத் தேவருந் தற்பரபொ
னரதனத் தாம முடியா யதியிளை யார்கலவிச்
சுரதனத் தாமனந் தந்தாளு வாய்சிற் சுகம்பெறவே 58

பரதன் அத்தா - ப்ரதனுக்கு மூத்தவ; மன் நற் பைம் பொழிற கூடற்பதி - நலம பொருநதிய பசு ஞ சோலை மதுரைக்கு; இறைவ - கடவுளே; சரதனத்தா - கணைகளாம செல்வம் உடையவ; மனர் தங்குலத தேவரும் - க்ஷததிரிய வமி சத்தில் அவதாரம் செய்த; தற்பர - தனக்குத தானே தலைவ; பொன் அரதனத் தாம முடியாய் - பொனனும மணியும கலந்து ஒளி செய்யும மகுடத்தாய்; அதியிளையார் - மிகக இளமை பொருந்திய பெணகள்; கலவிச் சுரதனத்தாம் - அணையும் காமத்து ஆகும, மனம் - சித்தம; தநது ஆளுவாய் - அளித்து ஆட்சிபுரிக; சிற்சுகமே - சிற்றினபமே; பெறவே - பெறுவதற்கு; (அகத்துறை)

சுகவார ணாசின் மயமான ரூபஎம் தொல்வினைக
ளுகவார ணாசிற் பரவாதி மூலமென் றோதியகை
நகவார ணாசிவன் நன்குறு மாறிட நாடிநல்கு
மகவார ணாசி உடையாயுன் பாற்புகல் வந்தனமே 59

சுக வாரணா - இன்பக் கடலே; சின்மயமான ரூப - ஞானமே நிறைந்த வடிவ; எம் தொல்வினைகள் - எங்கள் பழம் பாவங்கள்; உக - அழிய; ஆரணா - வேத வடிவ; சிற் பர - கடவுளே; ஆதிமூலம் என்று ஓதிய - ஆதிமூலமே எனக் கூவிய; கை நக வாரணா - கைம்மலை (யானையை) விடு விததவ; சிவன் - அரன்; நனகுறு மாறிட - நன்மை அடையும் படி; நாடி நல்கும் - விருமபி அருளும்; மக - மகத்தான; வாரணாசி - ஸ்ரீகாசிப்பதி; உடையாய் - உள்ளவன்; உன் பால் - உன்னிடம்; புகல் வந்தனமே - சரணாக வந்தடைந் தோம்;

**தனமாய மாதரை யாதரித்தாமுன் தனிப்புகழைத்**
**தினமாய மாதரை யாதரித்தாயவளை செங்கைமலர்**
**வனமாய மாதரை யாதனிக் கூடல மனாவரக்கர்**
**இனமாய மாதரை யாதனை நீக்கிய ஈச்சுரனே** 60

*தனமாய மாதரை - முலைகளினால் மாயம் புரியும் பெண்களை; ஆதரித்தாம் - நேசித்தோம்; உன் தனிப் புகழை - உனது ஒப்பற்ற சீர்த்தியை; தினம் - நாளும்; ஆய - தெளிய, மாதரை - பெரும் பூமியை; ஆதரித்தாய் - தாங்கினாய்; வளைசெங்கை - வளை புனைந்த செங்கரங்கள்; மலர் - விரியும்; வனம ஆயமாதர் - அழகிய கோபியர்கள்; ஐயா - தலைவா; தனிக கூடல் மனா - ஒப்பற்ற மதுரைப் பதிக் கிறைவா; அரககர் இனம் மாய - அரககர் கூட்டம் அழிய; மாதரை - அரக்கியரை; ஆதனை நீக்கிய - விலாசம் அழித்த; ஈசசுரனே - இறைவனே;*

**ஈசனந் தாதி யணிமாடக் கூடற் கிறையமலன்**
**ஆசனந் தாதிய லம்புயத் தாளுக் கருந்துணைவன்**
**மாசனந்தாதியர் போற்றும் பிரானருள் வந்தலது**
**பாசனந் தாதியற் பாவல ராகிய பக்தர்களே** 61

*ஈசன் - சிவபெருமான்; நந்து - விரும்பும்; ஆதி - முதல்வன்; அணிமாடக் கூடற்கு - அழகிய மாடங்கள் உடைய துரைக்கு; இறை - தலைவன்; அமலன் - குற்றமற்றவன்; ஆசனம் - பீடமாக; தாது இயல் - மகரந்தம் சேர்ந்த; அம்புயத்தாளுக்கு - தாமரைச் செல்வி (திரு) க்கு; அருந்துணைவன் - அரிய கணவன்; மாசு அல் - குற்றமற்ற; நந்தாதியர் - நந்தன் முதலிய ஆயர்கள்; போற்றும் பிரான் - துதிக்கும் தலைவன்; அருள் வந்தலது - கிருபை சேர்ந்தாலன்றி; பாசம் - பற்றுக்கள்; நந்தாது - அழியாது; இயற்பாவலராகிய - இயற்பாக்களை ஓதும் கவிஞராம்; பக்தர்களே - அன்பர்களே;*

**பத்தியம் பாடி யறியேம் எதிபதி பங்கயத்தாட்**
**டுத்தியம் பாடியம் கண்டறி யேம்பெருந் தொண்டரென்**

வத்தியம் பாடி யறம்புரிந் தாவதென் னாமிதுவே
சத்தியம் பாடியற் றண்கூடல் மால்முத்தி தந்திடுமே 62

பத்தியம் பாடி அறியேம் - சிற்றிலக்கியங்கள்; பாடி - யாத்து; அறியேம் - அறியாதேம்; எதிபதி - யதிராசர் இராமாநுசர்; பங்கயத்தாள் - மலர்த் திருவடிகளில்; துத்தியம் - துதி; பாடியம் - இராமாநுசரருளிய பிரம சூத்திர வியாக்கியானம்; கண்டறியேம் - பார்த்ததும் இல்லை; பெருந்தொண்டர் என - பெரிய அடியவர்போல; அத்தியம் ஆடி - அக்கலக்கத்தில் இருந்து; அறம் புரிந்து - தர்மம் செய்து; என்னாம் இதுவே - அடைவது என்ன; சத்தியம் - வாய்மை; பாடு இயல் - பக்கலில் இசையும்; தண்கூடல் மால் - குளிர்ச்சிமிக்க திருமால்; முத்தி தந்திடுமே - பரம பதம் அருளுமே;

தந்தா வலம்புரி மைக்கண்ணி யார்மயல் தான்தணந்து
சிந்தா வலம்புரித் தாரான் குலத்தொடுஞ் சேர்ந்தறம்செய்
நந்தா வலம்புரி நாதாதென் கூடற்கு நாதமறை
அந்தா வலம்புரி ஐயாவென் றோதுமின் ஆற்றுமினே 63

தந்து ஆவல் - விருப்பம் (மோகம்) அளித்து; அம்புரி - அழகு செய்த; மைக்கண்ணியார் - மை தீட்டிய விழியினர்; மயல் - மயக்கம்; தான்தணந்து - அது நீங்கி; சிந்தா - குறைவற்ற; வலம்புரித்தாரான் - வெற்றி வாகை மாலை சூடியவன்; குலத்தொடும் - இனத்துடனும்; சேர்ந்து - கூடி; அறம் செய் - புண்ணியம் செய்த; நந்தார - நந்தகுமாரா; வலம்புரி நாதா - பாஞ்சசன்னியம் என்ற சங்கின் தலைவா; தென் கூடற்கு - தென் மதுரைக்கு; நாத - இறைவ; மறை அந்தா - வேதாந்த; வலம்புரி - நலம் செய்க; ஐயா - ஐயனே; என்று - என; ஓதுமின் - கூறுங்கள்; ஆற்றுமின் - துயர் தீருங்கள்; ஏ - அசை;

ஆற்றுவித் தார வணிமாடக் கூடற் பதியழகன்
மாற்றுவித் தாரடி யாரவம் வானொடு வையகங்கள்
தோற்றுவித் தாரடித் தாமரை யுன்னித் தொழுதுதுதி
சாற்றுவித் தாரத் தமிழ்பாடுகஎன் தனிநெஞ்சமே 64

ஆற்று வித்தார - ஆற்றினைப் போலகன்ற; அணிமாடக் கூடல்பதி - அழகிய நான்மாடக் கூடலம் பதியின்; அழகன் - சுந்தரராஜ பெருமாள்; அடியார் அவம் - தாசர்களின் பயனற்ற பண்பினை; மாற்றுவித்தார் - பயனுள்ள பண்புகளாக மாற்றம் செய்தார்; வானொடு - விண்ணுலகுடன்; வையகங்கள் - ஈரேழு உலகங்களையும்; தோற்றுவித்தார் - சிருட்டி செய்தார்; அடித்தாமரை - மலர்ச் சரணங்களை; உன்னி - நினைந்து; தொழுது - வணங்கி; துதிசாற்று - தோத்திரம் புகல்: வித்தாரத் தமிழ் பாடுக-விரிந்த காவியம் தமிழில் பாடுவாயாக; என் தனி நெஞ்சமே - என்னுடைய மனமே;

**தனித்த வனத்தனவ் வண்ட சராசரம் தந்தவுந்தி**
**செனித்த வனத்தனஞ் சுண்டவன் காணரும் சேவடியான்**
**பனித்த வனத்தன லுண்டான் தசமுகன் பட்டிடவிற்**
**குனித்த வனத்தன மால்வாழுங் கூடலைக் கூடிடுமே** 65

தனித்த வனத்தன் - ஒப்பற்ற பேரழகன்: அவ் - அந்த; அண்டசராசரம் தந்த பிரபஞ்சத்தைப் படைத்த உந்தி; கொப்பூழில்; செனித்த - உதித்த; அனத்தன் - அன்னவாகனப் பிரமன்; நஞ்சுண்டவன் - ஆலகால விடமருந்திய சிவன்; காணரும் - பார்ப்பதற்கு இயலாத; சேவடியான் - சிவந்த திருவடிகளை உடையான்; பனித்த வனத்து - குளிர்ந்த வனத்தில்; அனல் உண்டான் - தீயினை உண்டவன்; தசமுகன் பட்டிட - பத்துத்தலை இராவணன் இறந்திட; விற்குனித்தவன் - வில்லை வளைத்தவன். அத்தன - அத்தன்மை உள்ள; மால் வாழும் - திருமால் கோயில் கொண்டிருக்கும்; கூடலை - மதுரை நகரை; கூடிடும் - அடைவீர்; ஏ - அசை;

**கூடியி ராகந் தனையளித் தற்றங்கொண் டானுளமும்**
**வாடியி ராகந் தனல்வன மாலை மணம்தெரிதி**
**சேடியி ராகந் தகனையார் லிட்டுச் சேருதும்பாண்**
**தோடியி ராகந் தனைப்பாடிக் கூடல் தொழுதுகொண்டே** 66

கூடி - அணைந்து; இராகந்தனையளித்து - மோகத்தைத் தந்து; அற்றம் கொண்டான் - மறைவு கொண்டவன்; உளமும் வாடி - மனமும் வருந்தி; இரா - இருக்காத; கந்தநல் -

நல்ல மணமுள்ள; வனமாலை - துளசி மாலை; மணம் தெரிதி சேடியிர்-வாசனையை உணர்ந்துகொள் பாங்கிகளே; ஆகம்- நெஞ்சு; தக - வெப்பமுற; நையார் - வருந்தமாட்டார்; பாண் - இசையில்; தோடி இராகந்தனைப் பாடி - தோடி இசை பாடி; கூடல் - மதுரையம்பதி; தொழுது கொண்டே - வணங்கிக் கொண்டே; விட்டு - அனைத்தையும் விட்டு; சேருதும் - அடைவோம்;

**கொண்டலை வாளை யயனின்று தாவுந்தண் கூடல்மன்னா**
**புண்டலை வாளை யிடுவது போலவப் புன்கருப்பன்**
**தண்டலை வாளைம் படையா லியற்றிடு சஞ்சலமே**
**கண்டலை வாளை யளிப்பவன் பாரங் கடைக்கணித்தே** 67

கொண்டலை - மேகத்தை; வாளை - வாளைமீன்; அயல் நின்று - தள்ளி நின்று; தாவும் - பாயும்; தண்கூடல் மன்னா - குளிர்ந்த கூடல் அரசனே; புண்தலை - ரணத்தில்; வாளை யிடுவது போல-கத்தியைச் சொருகுவது ஒப்ப; அப்புன் கருப்பன் - அந்த அற்பனாம் கரும்பு வில் மன்மதன்; தண்டு அல் - சேரும் இரவில்; ஐவாள் - அழகிய ஒளிசேர்; ஐம்படையால் - பஞ்சபாணங்களால்; இயற்றிடு - செய்திடும்; சஞ்சலமே - கலக்கமே, துன்பமே; கண்டு - நோக்கி; அலைவாளை - வருந்துமவளை; கடைக்கணித்தே - கடைக்கண்ணால் நோக்கியே; அளிப்பு - காப்பது; அவன் பாரம் - அவன் சுமை (பொறுப்பு ஆகும்);

**கணித்தானை யம்பரங் கைநீட்டிக் கூவக் கராச்செயிடர்**
**தணித்தானை யம்பரர் பொன்னானைக் கூடற் றனிமுதலை**
**யணித்தானை யம்பரம் போன்மேவ வேன்ற அரக்கனைக்கந்**
**துணித்தானை யம்பரந் தாமனை ஏத்தித் தொழுதுய் நெஞ்சே**
68

கணித்து - மதித்து; ஆனை - கசேந்திரன்; அம்பரம் கை நீட்டி - வானில் துதிக்கை நீட்டி; கூவ - ஆதிமூலமே என அலற; கராச் செய் இடர் - முதலை புரியும் துன்பத்தை; தணித்தானை - ஆற்றுவித்தவனை; அம்பரர் - வானோர்; பொன்னானை - செல்வத்தானை; கூடல் - மதுரைப்பதிக்கு; தனி முதலை-ஒப்பற்ற முதல்வனை; அணித்தானை - சேனை

வரிசைகள்; அம்பரம்போல் - கடல் போன்று; மேவ - பொருந்த; ஏன்ற - எதிர்த்த; அரக்கனை - இராட்சசனாம் இராவணனை; கம் துணித்தானை - சிரங்களை அறுத்தவனை; அம் - அழகிய; பரந்தாமனை - வைகுந்தவாசனை; ஏத்தி - போற்றி; தொழுது உய் நெஞ்சே - மனமே வணங்கி ஜீவிப்பாயாக;

தொழுவளை யானிரை மேய்த்தாய் கமலத் துறைகடோறும்
உழுவளை யாரஞ் சொரிதருங் கூடற் கொருவவனங்
கெழுவளை யாரமு துண்டோயென் றோதகில் லார்கண்மலப்
புழுவளை யாதனைப் பொல்லாத லோபப் புலையர்களே 69

தொழு - கொட்டில்களில்; வளை - சுற்றி வரும்; ஆநிரை - பசுக் கூட்டங்களை; மேய்த்தாய் - மேயச் செய்தாய்; கமலத் துறைகள் தொறும் - தாமரை மலர்ந்த நீர்த் துறைகளில்; உழு - கிளைத்த; வளை - சங்குகள்; ஆரம் சொரிதரு-முத்துக் களைச் சொரியும்; கூடற்கு - மதுரைப் பதிக்கு; ஒருவ - ஒப்பற்ற தலைவ; வனம்கெழு-வீடுகளில் உள்ள; அளை ஆரமுது - தயிர்ச் சோறு; உண்டோய் என்று - அருந்தியவனே என; ஓதகில்லார்கள் - கூறாதவர்கள்; மலப்புழு வளை - மலத்தில் உண்டாகும் புழுக்களின் கூண்டாகும்; ஆதனை - அறிவிலியை; பொல்லாத லோபப் புலையர்களே-தீய வன்கண்ணராம் கீழ்மக்களே;

புலைத்தன மாதரஞ் செய்தோம்தென் கூடலைப் போற்றுதற்கு
மலைத்தன மாத ரணைமீது நாடொறும் வேட்கையிற்பொன்
விலைத்தன மாத ரவரிடங் காமவினை மீறினபுன்
கலைத்தன மாதரங் காட்டாது செல்லுங் கதிதனக்கே 70

புலைத்தனம் - கீழான (மட்டமான) செயல்களை; ஆதரம் செய்தோம் - நேசித்தோம்; தென்கூடலை - தென் மதுரையை; போற்றுதற்கு - துதிப்பதற்கு; மலைத்தனம் - தடுமாறினோம்; மாதர் அணைமீது - பெண்களின் படுக்கையில்; நாள்தொறும் - தினமும்; வேட்கையில் - மோகத்தினால்; பொன் விலைத்தன மாதரிடம் - பொன்னை விலையாகப் பெறும் பரத்தையர்களிடம்; காம வினை மீறின - இச்சைச்

செயல்கள் அதிசரித்தன; புன்கலை-அற்பக் கல்வி; தனம் - செல்வம்; மா-பெரிய; தரம் காட்டாது - வலிமை (தன்மை) காணச் செய்யாது; செல்லும் கதி தனக்கு - போகும் வழி தனக்கு; ஏ - அசை;

கதிக்கும்ப தந்தக் கவுண்மத மாவினைக் காத்தடியார்
மதிக்கும்ப தந்தந்து வாழ்வளிப் பார்பொழில் வாய்மருவி
உதிக்கும் பதங்கன் விடாய்தீர்க்கும் கூடற் குகந்தபிரான்
துதிக்கும் பதங்களை நட்டார்க்கு நாளும் துயரிலையே 71

கதிக்கும்ப தந்த - வலிய மத்தகத்துத் தந்தமுடைய; கவுள் மத - கன்ன மதமுடைய; மாவினை - யானையை; காத்து - இரட்சித்து; அடியார் - தாசர்கள்; மதிக்கும் - கருதும்; பதம் தந்து - இடம் அளித்து; வாழ்வளிப்பார் - வாழ்க்கை அருளு வார்: பொழில்வாய் மருவி - சோலைகளில் சார்ந்து; உதிக் கும் - தோன்றும்; பதங்கன் - சூரியனின்; விடாய் தீர்க்கும் - வெப்பம் அகற்றும்; கூடற்கு - மதுரைப் பதிக்கு; உகந்த பிரான் - உயர்ந்த தலைவன்; துதிக்கும் பதங்களை - தொழு தற்குரிய திருவடிகளை; நாட்டார்க்கு - நேசித்தவர்களுக்கு; நாளும் - என்றும்; துயரில்லை - துன்பங்கள் இல்லை; ஏ- அசை;

இலைத்தனம் பாலுங் கசந்தன வின்னுயிர் இல்லைஎன
மலைத்தனம் பானலங் கண்ணிக்கென்றோதி மலைத்தனங்கா
புலைத்தனம் பாமரம் பொல்லாங்கு சேரும் புலையரக்கர்த்
தொலைத்தனம் பாவளத் தென்கூடல் ஞானச்
சுடர்க்கொழுந்தே 72

இலைத்தனம் - வலிமை குறைந்து; பாலும் கசந்தன - ஆவின் பாலும் உருசியற்றது; இன்னுயிர் - இனிய பிராணன்; இல்லை என - இன்மையானதென; மலைத்தனம் - மலை யனைய முலையுடைய; பானல் - கருங்குவளையன்; அம் கண்ணிக்கு - அழகிய விழியினளுக்கு; என்று ஓதி - எனக் கூறி; மலைத்தனம் - தடுமாறினோம்; புலைத்தனம்-கீழ்த்தன்மை; பாமரம் - அறிவின்மை; பொல்லாங்கு - தீமை; சேரும் - கூடிய; புலை அரக்கர் - இழிந்த அசுரர்களை; தொலைத்த - அழித்த; நம்பா-இறைவா; வளத் தென்கூடல் - செழிப்புள்ள

*தென் மதுரைப் பதியின்; ஞான வளச் சுடர்க் கொழுந்தே அறிவின் அழகிய ஒளியே; கா - காப்பாற்று;*

**கொழுந்துவ ராலந் தனைப்புரை வாய்விழிக் கோதையர்பால்**
**அழுந்துவ ராலந் தகன்பா லழுந்த வறிகிலர்நீர்**
**எழுந்து வராறந் தரம்பாயும் கூடலுக் கின்னமுதாம்**
**செழுந்துவ ராலந் தளிர்ப்பாய லான்கழல் சேர்கிலரே** 73

*கொழுந்துவர் - செழுமையான பவளம்; ஆலம் - விடம்; தனைப்புரை - தம்மை (முறையே) ஒத்த; வாய்விழி - வாயும் விழிகளும் உடைய; கோதையர்பால் - மகளிரிடத்து; அழுந்துவர் - பதிவர்; ஆல் - அசை; அந்தகன்பால் - யமனிடம்; அழுந்த - வருந்துவதை; அறிகிலர் - உணர்கிலர்; நீர் எழுந்து- நீரிலிருந்து மேலே; வரால் - வரால் மீன்கள்; அந்தரம் பாயும்- வானத்தில் தாவும்; கூடலுக்கு - மதுரையம்பதிக்கு; இன் அமுதாம் - இனிய அமிழ்தமாகும்; செழும் - செழித்த; துவர் ஆலம் தளிர்ப்பாயலான் - சிவந்த ஆலின் அழகிய துளிர் இலையிற் படுத்தவன் (வடபத்ரசாயி); கழல் - திருவடிகளை; சேர்கிலரே - அடைகின்றாரிலையே;*

**சேலப் பனங்கிளர் கண்ணடையீர்தண் செழுமலரா**
**மாலப் பனங்கி நிகராகக் கூடல் வளருமுகில்**
**போலப் பனங்கிச மென்னாம லென்னைப் புழுங்கினளிக்**
**கோலப் பனங்கிளிக் கென்னோ வியற்றுங் கொடுமையதே** 74

*சேல் - மீன்; அப்பு - அம்பு; அனம் - அன்னம்; கிளர் - ஒத்த; கண் நடையீர் - விழிகளும், நடத்தலும் உடையவர்களே; தண் - குளிர்ந்த; செழுமலரா - செழித்த மலர் போலும்; மாலப்பன் - திருமால்; அங்கிநிகராக - தீயினை ஒத்த; அக்கூடல் - அந்த மதுரையில்; வளரும் முகில் - உறையும் மேகம்; போலப்பன் அங்கிசம் என்னாமல் - போன்ற தலைவன் வமிசம் என்கிலாது; என்னைப் புழுங்கினள் - என வருந்தினள்; இக் கோல - இந்த அழகிய; பனங்கிளிக்கு - கிளியனையாளுக்கு; என்னோ - ஏனோ; இயற்றுங் கொடுமையதே - கொடுமையையே புரியும்;*

**கொடுமா வினையங் குரித்திடு மாநமன் கோளுறுமா**
**வடுமா வினையன கண்ணா யிரவு மதியுமினிச்**
**சுடுமா வினையனந் தென்கூடல் மால்வரை தொட்டயர்வு**
**படுமா வினையளித் தான்தந்த தாமிந்தப் பைந்தழையே** 75

*கொடும் மா வினை அங்கு - கொடுமையான பெரிய தீவினைகள் அங்கே; உரித்திடுமா - உரியதாகுமா; நமன் - எமனுடைய; கோள் உறுமா - இடையூறு வந்தடையுமா; வடு மாவினை அன - மாவடுவை ஒத்த; கண்ணாய் - விழியுடையவளே; இரவு - இராத்திரியில்; மதியும் - சந்திரனும்; இனிச் சுடும் - இனிமேல் தகிக்கும்; ஆவி நையல் - உயிர் வருந்தாதே; நம் - நமது; தென்கூடல்-அழகிய மதுரை; மால் - திருமால்; வரைதொட்டு - மலையைத் தூக்கி; அயர்வுபடும் - தளர்ச்சியுறும்; ஆவினை-பசுக்களை; அளித்தான்-காத்தான்; தந்ததாம் - (அத்திருமால்) கொடுத்ததாகும்; இந்தப் பைந் தழையே - இந்தப் பசுமையான இலைகளையேயாகும்;*

**தழைப்பத் தருக்குலம் வேயூதுங் கூடலந் தாமத்தர்தாள்**
**உழைப்பத் தருக்கு வகையோங்க மூலமென் றோதியும்பல்**
**அழைப்பத் தருக்குங் கராத்தடிந் தார்திரி யம்பகன்வில்**
**குழைப்பத் தருக்கு முடிவா னவரெங் குலதெய்வமே** 76

*தழைப்பத் தருக்குலம் - மரக்குலங்கள் செழிக்க; வேய் ஊதும் - புள்ளாங்குழல் இசைக்கும்; கூடல் - மதுரையாம்; அம் - அழகிய; தாமத்தர் - இடத்தினர்; தாள் உழை - திருவடிகளின் அருகே உள்ளே; பத்தருக்கு - அன்பர்களுக்கு; உவகை ஓங்க - மகிழ்ச்சி மேலாக; மூலம் என்றோதி - ஆதி மூலமே எனக் கூறி; உம்பல் - யானை (கஜேந்திரன்); அழைப்ப - விளிக்க; தருக்கும் - வீரம் கொள்ளும்; கரா - முதலையை; தடிந்தார் - கொன்றார்; திரியம்பகன் - முக்கண்ணன் சிவனின்; வில் - வில்லினை; குழைப்ப - வளைக்கவும்; தருக்கு - களிக்கும்; முடி வானவர் - மகுடம் புனைந்த தேவர்; எம் குலதெய்வம் - எங்கள் குலத்து இறைவன்; ஏ - அசை;*

**குலைக்காமனம்புத மாலாகுங் கூடலெங் கோனடியை**
**மலைக்காம னம்பு தனமாயுள் கீர்த்தி வரும்பிணியும்**
**மலைக்காம னம்புதன் போலறி வாகர மாகுங்கனற்**
**சிலைக்கா மனம்பு தகையாது முத்தியும் சித்திக்குமே** 77

*குலைக்கா மன் - குலைகளுடன் சோலை பொருந்திய; அம்புத - மேகம்; மாலாகும் - மயங்கும்; கூடல் - மதுரை; எம்கோன் அடியை - எம் தலைவன் திருவடிகளை; மலைக்கா மர் - தடுமாறிடாமல்; நம்பு - விசுவாசம் கொள்; தனம் - செல்வம்; ஆயுள் - ஆயுசு (வாழ்நாள்); கீர்த்தி - புகழ்; வரும் - சேரும்; பிணியும் - நோயும்; அலைக்கா - வருத்தாது; மனம் - சிந்தை; புதன் போல் - புதன் கிரக தேவதை போல; அறிவா கரம் ஆகும் - கல்வியின் இருப்பிடம் ஆகும்; கனல் - கன்னல், கரும்பு; சிலை - வில்லாகவுடைய; காமன் அம்பு - மன்மத பாணம்; தகையாது - வாட்டாது; முத்தியும் - பரமபதமும்; சித்திக்கும் - கைகூடும்; ஏ - அசை;*

**சித்திக் கருந்தவம் செய்வீர் மலர்க்கணை தேர்ந்திருங்கண்**
**முததிக் கருந்த வருந்தல்செய் வீர்முது நான்மறையும்**
**எத்திக் கருந்தவ றாதேத்துங் கூடற்கிறை வனைத்தண்**
**அத்திக் கருந்தவங் காத்தானை ஏத்துமின் ஆதரித்தே** 78

*சித்திக்கு - மணம் புரிதலுக்காக; அருந்தவம் செய்வீர் - அரிய விரதம் இருப்பவர்களே; மலர்க்கணை - புஷ்ப பாணங் களை; தேர்ந்து - ஆராய்ந்து; இருங்கள் - இருப்பீராக; முத் திக்கு - மோட்சத்துக்கு; அருந்த - அனுபவிக்க; வருந்தல் செய் வீர் - துன்பம் புரிவீர்; முது நான்மறையும் - பழைமையான நால்வேதங்களும்; எத்திக்கரும் - எந்தத் திசையில் உள்ளவர் களும்; தவறாது - இடைவிடாது; ஏத்தும் - வழிபடும்; கூடற் கிறைவனை - மதுரைக் கடவுளை; தண் - தண்ணீரில் இருந்த; அத்திக்கு - யானைக்கு; அருந்து - உண்டாய; அவம் - துன் பம்; காத்தானை - இரட்சித்தவனை; ஏத்துமின் ஆதரித்தே - அன்பு வைத்தே வழிபடுவீர்;*

**ஆதர வாகநம் பாதவர் பாலடை யாதவதா**
**மோதர வாகநம் புள்ளர சாகும் முகுந்தவளர்**
**பூதர வாகநந் தென்கூடல் நாதநற் புத்திசெல்வ**
**நீதர வாகநம் போலடி யேன்முன் நித்தமுமே** 79

*ஆதரவாக - அன்பாக; நம்பாதவர்பால் - விசுவாசம் கொள்ளாதவர்களிடம்; அடையாதவ - சேராதவ; தாமோதர - தாமோதரப் பெயரினாய்; வாகநம் புள்ளரசாகும் - தான் அமர்ந்து செல்லும் வாகனம் பக்ஷிராஜன் (கருடன்) ஆகப் பெற்ற; முகுந்த - முகுநதப் பெயரின; வளர் - துயில்வது; பூதரவாக - பூமியைத் தாங்கும் சேடன் மீதாக; நம் - நமது; தென்கூடல் நாத - தென் மதுரைக்கிறைவ; நற்புத்தி - நல்லறிவு; செல்வம்-சம்பத்து; நீ தர வா கநம் போல் - மேகம் போல நீ வழங்கியருள வருக; அடியேன் முன் - வறிஞனாம் என் முன்னர்; நித்தமும் - நாளும்; ஏ - அசை;*

**நித்தனந் தத்தின மென்றாடும் ஈசனும் நின்றுதுதி**
**சுத்தனந் தத்தினங் கையான்தென் கூடலந் தொன்னகர்வாழ்**
**அத்தனந் தத்தினர் தீர்த்தபிரானுகப் பாகமண்மேல்**
**பித்தனந் தத்தினம் பீத்தடை வாரலர் பித்தர்களே** 80

*நித்தம் - நிருத்தம்; நம் தத்தினம் - தம் தத்தினமென்ற இலயத்துடன்; ஆடும் - புரியும்; ஈசனும் - சிவனும்; நின்று - துதி - எதிர்நின்று தொழும்; சுத்த - தூய; நந்தத்தின் - சங்கினை ஏந்திய; அங்கையான் - அழகிய கரத்தான்; தென் கூடல் - தென்மதுரை என்னும்; தொல்நகர் - பழம்பதியின் கண்; வாழ் - வசிக்கும்; அத்தன் - தலைவன்; நம் - நம்முடைய; தத்து - அவமிருத்து; இனர் - துன்பங்கள்; தீர்த்த - நீக்கிய; பிரான் - இறைவன்; உகப்பாக - மகிழ்ச்சியடைய; மண்மேல் - பூமி மீது; பித்தம் நந்த - மயக்கம் கெட, தினம் - நாளும்; பித்தடைவார் - பைத்தியமடைபவர்; அலர் பித்தர்கள் - பைத்தியப் பிணியரன்று; ஏ-அசை;*

**பித்தரு மாதவம் பேணா தவருமுன் பேர்கொண்டுநா**
**கத்தரு மாதர்தம் போகமுற் றாரெனிற் காஞ்சனவா**
**சத்தரு மாதனிக் கூடலண் ணாவெனச் சாற்றியமெய்ப்**
**பத்தரு மாதவற் கெட்டாப் பதவி படைப்பவரே** 81

பித்தரும் - மன நோயாளிகளும்; மாதவம் பேணாதவரும் - பெருந்தவத்தை விரும்பாதவர்களும்; உன் பேர் கொண்டு - உன்னுடைய பெயரைக் கொண்டு; நாகத்தரும் - நாவாற் கரைபவர்களும; மாதர்தம் போகம் உற்றார் எனில் - பெண்களின் இன்பம் அடைந்தார்கள் என்றால்; காஞ்சன வாசத்தரும் - பொன் உலக வாசிகளும்; மா - அழகிய; தனிக் கூடல்-ஒப்பற்ற மதுரை; அண்ணா-தலைவ; எனச் சாற்றிய- எனக் கூறிய; மெய்ப் பத்தரும் - அன்பரும்; ஆதவற்கு - சூரியனுக்கு; எட்டாப் பதவி - அடைய முடியாத உலகம்; படைப்பவரே - பெறறவராவார்கள்; ஏ - அசை.

**படையாளி யானகம் பத்தானைச் செற்ற பராக்கிரம**
**விடையாளி யானை நிகர்வீர கோதண்ட வித்தகநூல்**
**இடையாளி யாமளைக் கின்பருள் கூடற் கிறைவ மலர்த்**
**தொடையாளி யாழமொழி நாதா வென்றோதச் சுகந்தருமே 82**

படையாளியான-சதுரங்கப் படைகளை உடையவனான, கம்பத்தானை - பத்துத் தலையன் ராவணனை: செற்ற - வதைத்த; பராக்கிரம - வலிமையுள்ள; விடை-எருது; யாளி- சிங்கம்; யானை - களிறு; நிகர் - ஒத்த; வீர 'கோதண்ட வித்தக - மேன்மையான கோதண்டம் என்ற வில்லுடைய சதுரப் பாட்டினள்; நூல் இடையாள்-நூல் அனைய மெல்லிய மருங்கு கொண்ட; இயாமளைக்கு - சியாமளையாம் பார்வதிக்கு; இன்பருள் - (சொக்கருடன் மணம் புரிவித்து) மகிழ்வு தந்தருளிய; கூடற்கு இறைவ - மதுரைக்குத் தலைவ; மலர்த் தொடையாளி - மலர்மாலையினள்; யாழ் மொழி - வீணை இசை போன்ற சொற்பயில் திருமகள்; நாதா - கணவா; என்று ஓத - எனச் செப்ப; சுகம் தருமே - நன்மை யருள்வானே;

**தருத்தலை வானவர் போற்றுந் தென்கூடற் றலைவமலர்த்**
**திருத்தலை வானவ மாமணி யேநிரு தேசரறச்**
**செருத்தலை வானவ வாளிதொட் டேவிய சேவகஎன்**
**கருத்தலை வான வழியடை யாவணங் காத்தருளே 83**

தருத்தலை - கற்பகத் தருவின் பெருமைசேர்; வானவர் - தேவர்கள்; போற்றும் - துதிக்கும்; தென்கூடல் தலைவ -

*தென் மதுரைக்கு இறைவ; மலர்த்திருத் தலைவா-மலர்மகள் இலக்குமியின் கணவா; நவ மாமணியே - பெரிய நவரத்தினங் கள்; நிருதேசர் அற - அரக்கர் தலைவர்கள் அழிய; செருத் தலை - போர்க்களத்தில்; வான் - மகத்துவம் சேர்; நவ - புதிய; வாளிதொட்டு - அம்புகள் தொடுத்து; ஏவிய - செலுத் திய; சேவக - வீர; எண் கருத்து - மனமும் நினைப்பும்; அலை வான வழி - சலனமுள்ள நெறியில்; அடையாவணம்-சேராத வாறு; காத்தருள் - காத்து அருள் புரிக; ஏ - அசை,*

**வணங்காத் தலைமுடி மன்னனைச் செற்றை வரையுமஞ்சா**
**வணங்காத் தலைப்புவி மான்றுயர் தீர்த்தருண் மாலைமழை**
**வணங்காத் தலையுறுங்கூடற்பெம்மானைமண் ணுண்ணுதற்கா**
**வணங்காத் தலைச்செய்த மாயனைப் பாடுதும்**
**வம்மின்களே** 84

*வணங்காத்தலை முடிமன்னனை - எவரையும் பணியாத சிரமுடைய மகுடம் புனைந்த வேந்தன் துரியோதனனை; செற்று - அழித்து; ஐவரையும் - பஞ்சபாண்டவர்களையும்; அஞ்சாவணம் - அச்சமடையாதவாறு; காத்து - காப்பாற்றி; அலைப்புவிமான் - கடல்சூழ் பூமிப்பெண்; துயர் - இன்னல் கள்; தீர்த்தருள் - நீக்கியருளிய; மாலை - திருமாலை; மழை வணம் காத்தலை உறும் - மாரியின் தன்மையைப் பாதுகாத் தல் பொருந்திய; கூடற்பெம்மானை - கூடல் நகருக்கு இறை வன்; மண் உண்ணுதற்கு - மண்ணை உண்பதற்காக; ஆவ ணம்-தெருவில்; காத்தலைச் செய்த-காத்திருந்த; மாயனை - கிருட்டினனை; பாடுதும் - பாடுவோம்; வம்மின்கள் - வாருங் கள்; ஏ - அசை; (இப்பாடல் யமகம்)*

**வம்பர விந்த மயில்வாழும் கூடல் மணிவரைவாய்**
**அம்பர விந்த மணியோங்க வேந்தியோ ராய்மலர்பூங்**
**கொம்பர விந்த மவிர்சேர நம்பன் குளக்கணினால்**
**இம்பர விந்த மதனுங்கண் டேங்க இருக்கின்றதே** 85

*வம்பு - மணங்கமழ்; அரவிந்தம் - தாமரை மலர்களும்; மயில் வாழும் - மயிற் பறவைகளும் உறையும்; கூடல் - மதுரை; மணிவரைவாய் - அழகிய மலையின்கண்; அம்பர -*

அழகு பரவிய; விந்தமணி ஓங்க - மாணிக்க ரத்தின மேன்மை பெற்ற; ஏநதியோராய் - தாங்கியவர்களாக; மலர்ப் பூங் கொம்பு - விரிநதிட்ட பூங்கொம்பு அனையவள்; அரவிந்தம் அவிர்சேர - செமபின் ஒளி அமைய; நம்பன் - நம்பற்குரிய சிவன்; குளக்கணினால் - நெற்றிக்கண்ணால்; இம்பர் - இவ் வுலகில்; அவிந்த - அழிநத; மதனும் - மன்மதனும்; கண்டு ஏங்க - பார்த்து இரங்குமாறு; இருக்கின்றது - விளங்குகின் றது; ஏ - அசை;

**இருப்புக் கடலையட் டீய்ந்தாளு நேரறும் ஏந்திழைக்காய்க்**
**கருப்புக் கடலை யடைத்திலங்காபுரிக் காதகரைச்**
**செருப்புக் கடலை யடையச்செய் கூடற் றிருவவில்வேள்**
**நெருபபுக் கடலை யளித்தா ரெவரிந்த நீணிலத்தே** 86

இருப்புக் கடலை - இரும்பாலாய முழுப் பருப்பை; அட்டு - வேக வைத்து; ஈந்தாளும் - அளித்தவளாம் அநசூஸ்யையும்; நேர் அறும் - ஒப்பில்லாத; ஏந்திழைக்காய் - பெண்ணாம் சீதா தேவிக்காக; கருப்புக் கடலை - கரிய சமுத்திரத்தை; அடைத்து - தேக்கி; இலங்காபுரி - இலங்கை நகரத்து; காத கரை - வஞ்ச அரக்கர்களை; செருப்புக்கு - போரிட்டுச் சென்று; அடலை அடையச் செய் - சாதனை அடையுமாறு செய்யும்; கூடல் திருவ - மதுரைச் செல்வ; வில் வேள் - (கரும்பு) விற்கொண்ட மன்மதன்; நெருப்புக்கு - அக்கினிக்கு; அடலை - வலிமையை; இந்த நீள்நிலத்தே - இந்த நீண்ட உலகிலே; அளித்தார் - கொடுத்தவர்; எவர் - யார்?;

**நிலவேங்கை யானன நேரிழை யாயினி நின்பொருட்டால்**
**உலவேங்கை யாத வமுதமுங் கானத் தொருமகட்காய்க்**
**குலவேங்கை யானவ னாதியர் போற்றுந்தென் கூடற்பிரான்**
**வலவேங்கை யானையைக் காத்தான் தழைகொண்டு**
**வந்தனமே** 87

நிலவு - சந்திரன்; ஏங்கு - ஏக்கமடையும்; ஐ - அழகிய; ஆனன - முகம் உடைய; நேரிழையாய் - பெண்ணே (தலை வியே); இனி நின் பொருட்டால் - இனிமேல் உனக்காக; உல

*வேம் - கூசிக் குறைவுபட மாட்டோம்; கையாத அமுதமும் - கசப்பற்றதாகும் அமிழ்தச் சுவை; கானத்து - காட்டில்; ஒரு மகட்காய் குலவேங்கையானவன் - ஒரு பெண்ணுக்காகப் பொருந்திய வேங்கை மரமான முருகன்; ஆதியர் - முதலியவர்கள்; போற்றும் - துதிக்கும்; தென்கூடற் பிரான் - அழகிய மதுரை இறைவன்; வல - மிக; வேம் - வெதும்பும்; கையானையை - துதிக்கை உடைய களிற்றினை; காத்தான் - காப்பாற்றியவன்; தழை - (அடையாள இலட்சினையாம்) துளசிதளத்தை; கொண்டு வந்தனம் - பெற்றுக்கொண்டு வந்தோம் ஏ - அசை; அகத்துறை.*

**வந்தனஞ் செய்ய வளையார மீனுந்தென் மாமதுரை**
**வந்தனஞ் செய்ய வளையார மார்பிடை வைத்தவ வான்**
**வந்தனஞ் செய்ய வளையார முதுண்ட வாவிரத**
**வந்தனஞ் செய்ய வளையா ரறிந்துன் மலர்க்கழலே** 88

*வந்த நஞ்செய் - நன்செய் நிலத்துத் தோன்றிய; அ - அந்த; வளை - சங்குகள்; ஆரம் ஈனும் - முத்துக்களைப் பெற்றளிக்கும்; தென்மாமதுரை - எழில்சேர் பெரிய மதுரைப்பதி: வந்தனம் - வந்துள்ளோம்; செய்யவளை - திருமகளை; ஆர மார்பிடை - மாலைகளணிந்த மார்பில்; வைத்தவ - வைத்தருளியவா; வான் - தேவலோகத்தினர்; வந்தனம் செய்ய - வணங்கித் துதிக்க; அளை ஆரமுதுண்டவா[1] - தயிரும், சோறும் அருந்தியவனே; விரத வந்தனம் செய்ய - (உன்னைக் குறித்து) நோன்புக் கயிறு கட்டுதலைச் செய்வதற்கு; அறிந்துன் மலர்க்கழலே - தெரிந்து உன்னுடைய மென்மையான பாதங்களை; வளையார் - குனிந்து வணங்கமாட்டார்கள்; பந்தனம்-வந்தனமாயிற்று. (இது வ-ப பேதம்)*

**கழலைத் தனத்தைக் கனகக் குடமென்றுங் காதலித்து**
**மழலைத் தனிமொழி யென்னுஞ்சொல் வீர்முல்லை மாவனத்தன்**
**அழலைத் தகைந்துண்ட கூடற் பிரானை அடிபணியீர்**
**விழலைத் தகுநல னென்பாரிற் காதலுண் மேவினரே** 89

*கழலைத் தனத்தை - கழற்சிக்காய் ஒத்த முலைகளை; கனகக் குடம் என்றும் - தங்கக் குடம் எனவும்; காதலித்து -*

அன்பு செய்து; மழலைத் தனிமொழி என்றும் - ஒப்பற்ற வாய்ச் சொல் இளமை மொழி எனவும்; சொல்வீர் - உரைப்பீர்; முல்லை மா வனத்தன் - முல்லை மலரணிந்த பேரழகன் (முல்லை நிலத்துப் பேரழகன் எனவும் கொள்க); அழலை - நெருப்பை; தகைந்து உண்ட - பரவாது தடுத்து அயின்ற; கூடற் பிரானை - மதுரை இறைவனை; அடிபணியீர் - (குறித்து) திருவடிகளில் வணங்க மாட்டீர்கள்; விழலை - வீணானவற்றை; தகுநலன் என்பாரில் - மிக்க நலமானது என்பவர்பால்; காதல் - அன்பு, நேயம்; உள் மேவினரே - மனத்திற் பொருந்தியவர்களே;

மேவரும் பாலை யனமொழி யாள்முலை மெல்வயிறு
பூவரும் பாலை யனநடை யார்மயற் போக்குமெனுந்
தாவரும் பாலை யனன்மெழு காகித் தளர்ந்தனள்கா
தேவரும் பாலை யனன் கேத்தும் கூடற் சிகாமணியே 90

மேவரும் - மேன்மை கொண்ட; பாலை - பாலினை; அன - ஒத்த; மொழியாள் - உரையினள்; முலை - தனங்கள்; மெல்வயிறு - மென்மையான வயிறு; பூ அரும்பால் - மலரும் அரும்புகள் ஒத்தனவாம்; ஐ - அழகிய; அன நடையார் - அன்னம் போன்ற நடையுள்ளவர்கள்; மயற் போக்கும் - மயக்கத்தை நீக்கும்; எனும் - என்ற; தாவரும் - கேடு உறும்; பாலை - பாலை நிலத்து; அனல்-தீயில்; மெழுகாகி - மெழுகு போல ஆகி; தளர்ந்தனள் - மெலிவுற்றனள்; தேவர் - வானோர்கள்; உம்பால் - உம்மிடம்; ஐய - தலைவ; நன்கு ஏத்தும் - நன்றாகத் துதிக்கும். கூடற் சிகாமணியே - கூடல் நகரத்துச் சிரோரத்தினமே; கா - காப்பாற்று;

காமணி யானை யென்றில்லாரை நோக்கிக் கசிந்துநின்று
தாமணி யானை யெண் பாப்பாடு வீர்பசுந் தண்டுளவத்
தேமணி யானைநந் தென்கூடல் நாதனைச் சேலையெனும்
பூமணி யானையெந் நாளினும் போற்றிப் புகழுமினே 91

கா - கற்பகச் சோலையே; மணி - சிந்தாமணியே; யானை - ஐராவதமே; என்று - என; இல்லாரை - கொடுப்பதற்கு இல்லாதவர்களை; நோக்கி - பார்த்து; கசிந்து நின்று-

இரங்கி இருந்து; தாமணியானை - தங்களருகிலிருப்பவனை. எண்பாப் பாடுவீர் - எண்ணற்ற பாக்களைப் பாடுபவர்களே; பசும்தண் துளவத் தேம் அணியானை - குளிர்ந்த பச்சைத் தேன்துழாய் மாலை யணிந்தவனை; தென்கூடல் நாதனை - தென் மதுரைக்கிறைவனை; சேலை எனும் பூ - அசோகு என்ற புஷ்பம் போன்ற; மணியானை - எழிலானை; எந்நாளினும் - எத்தினத்தும்; போற்றி - துதித்து; புகழுமின் - சொல்லுங்கள்; ஏ - அசை;

புகுமதி யாதனை போக்கிஎன் ஆவி புரப்பதற்கு
தகுமதி யாதனை சாற்றகில் லாய்மதன் சாயகத்தால்
பகுமதி யாதவர்க் கெட்டாப் பரம பவித்திரன்சீர்
மிகுமதி யாதனன் கூடல்வெற் பேறி விழுகுவனே 92

புகுமதி - நினைவிற் புகுந்த; யாதனை - துன்பங்களை. போக்கி - நீக்கி; என் ஆவி புரப்பதற்கு - என் உயிரைக் காப்பதற்கு; தகுமதியாது - உரிய புத்தி எது; அனை சாற்றகில்லாய் - அன்னையே சொல்லாதிருக்கின்றாய்; மதன் சாயகத்தால் - மன்மத பாணத்தால்; பகு - பிளக்கப்படும்; மதியாதவர்க்கு - கருதாதவர்களுக்கு; எட்டா - அணுகவியலாத; பரம பவித்திரன் - மிகத் தூய்மையானவன்; சீர்மிகு மதி - புகழ் மிக்க; யாதவன்-யதுகுலத்தான் (ஆயன்); கூடல் வெற்பேறி - மதுரை வரைமீது ஏறி; விழுகுவனே - விழுவேன்; (அகத் துறை)

விழுகுவ டாமெனத் தென்னிலங் கேசன் விழுந்து மண்மேல்
கழுகுவந் துண்ணக் கணையேவுங் கார்முகன் கஞ்சவயல்
முழுகுவ ராலுகள் கூடற்பிரான்அடி முன்னிமன
மெழுகுவ மானம் வெயின்முன மாகுவர் வித்தகரே 93

விழு - பெரும்; குவடாம் என - மலைபோன்ற; தென் இலங்கேசன் - தென் இலங்கைத் தலைவன் இராவணன்; விழுந்து மண்மேல் - நிலத்தில் இறந்து கிடந்து; கழுகு வந்து உண்ண - கழுகுப் பறவைகள் சாப்பிட; கணை ஏவும் - அம்புகளைச் செலுத்தும்; கார்முகன் - வில்லினைக் கொண்டவன்; கஞ்சவயல் - தாமரை மலர்களுள்ள கழனிகளில்; முழுகுவரால்

உகள் - ஆழ்ந்து வரால் மீன்கள் தாவும்! கூடற் பிரான் - மதுரை இறைவன்; அடிமுன்னி - திருவடிகளை நினைந்து; வெயில் முனம - சூரிய வெம்மையின் முன்; மனமெழுகு உவமானம் ஆகுவர் - மெழுகு உருகுதலுக்கு ஒப்பாக ஆவர்; வித்தகரே - அறிஞர்களே;

தகரத்தி நாடொறுஞ் செய்துவை வேளினை தாழ்ந்திறைஞ்சிப்
புகரத்தி நாம முகனைஎன் போற்றிப் புரிதிரந்தோ
நிகத்தி நாரி இவள்கொண்ட நோயினி நீக்கியிடும்
பகரத்தி நாபுரி சென்றான் தென்கூடற் பரஞ்சுடரே 94

தகர் அத்தி நாடொறும் செய்துவை வேளினை - முருகனை; தாழ்ந்து இறைஞ்சி - குனிந்து வணங்கி; புகர் - புள்ளிகளை உடைய; அத்தி நாம - யானையின் பேருள்ள; முகனை - முகமுடைய விநாயகனை; என-என்னோ; போற்றிப் புரிதிர் - தொழுதல் செய்தீர்; அந்தோ - ஐயோ; அத்திநாரி நிகர் - சிவன் வடிவிற் பாதியாகக் கொண்ட உமையவளை ஒத்த; இவள் - இப்பெண் (தலைவி); கொண்ட நோய் (நும்பாற் கொண்ட) வேட்கையாம் பிணியை; இனி - இனியேனும்; நீக்கியிடும் - போக்கி அருளுவீர்; பகர் - கூறப் பெறும்; அத்தினாபுரி - (பாண்டவர் தூதனாக) அத்தினாபுரம் சென்றவனாம்; தென் கூடல் - தென் மதுரை; பரஞ்சுடரே - பரஞ்சோதியே,

சுடுங்கா னகத்திற் றொழுந்தா மரையைச் சுடர்மதியை
அடுங்கா னகத்தி யொடுஞ்சென்ற கூடற் கணியழகன்
விடுங்கா னகத்திற் செழுங்குல்லை யாரடி மேவுமன்பன்
நடுங்கா னகத்திடை யஞ்சான் கொடிய நமன்தனக்கே 95

சுடும் - எரிக்கும்; கானகத்தில் - காட்டில்; தொழும் - துதித்தற்குரிய; தாமரையை - பங்கயத்தை. சுடர் மதியை - ஒளி நிலாவை; அடும் - வெல்லும்; கால் நகத்தி - திருவடியையும், நகங்களையும் உடைய சீதை; ஒடும் சென்ற - உடன் சென்ற; கூடற்கு அணி அழகன் - மதுரைக்கு எழில் தரும் சௌந்தரன்; விடும் கானகத்தில் - சோலையில் உள்ள;

செழும் - செழித்த; துல்லையார் - துழாய் மாலையார்; அடி மேவும் - திருவடிகளைச் சாரும்; அன்பன் - பக்தன்; கொடிய நமன் தனக்கே - குரூரமான யமனுக்கே; நடுங்கான் - பதறான்; அகத்திடை - மனத்தில்; அஞ்சான் - பயங்கொள்ளான்;

**நமனா யுதந்தரு வானிவர் பாலடை யார்நவைதான்**
**சமனா யுதயம் புரிவா னிகரச் சகம்புரக்கும்**
**அமனா யுகந்துயில் கூருந்தென் கூடற்கணியழகா**
**தமனா யுதமைந் துடையாயென் றோதும் தபோதனனே.** 96

நமன் ஆய் உதம் தருவான் - நம்மவனாகிக் கேட்டவை தருவான்; இவர்பால் அடையார் - இவரிடம் அடையாதவர்கள்; நவைதான் - குற்றந்தான்; சமனா - விருப்பு வெறுப்பின்றி ஒன்றாக; உதயம் புரிவான் - தோற்றம் புரிவான்; நிகர - ஒப்ப; சகம் புரக்கும் - உலகை அளிக்கும்; அமனாய் - சூரியனாகி; யுகந்துயில் கூரும் - யுகமளவு காலம் உறக்கம் மிகும் (அறிதுயில்); கூடற்கு - மதுரைக்கு; தமனா - தம்மவனே; ஆயுதம் - படைகள்; ஐந்துடையாய் - ஐந்து கொண்டவனே (பஞ்சாயுத); என்றோதும் போதனனே - என்று கூறும் தவச் செல்வனே;

**தனதானி யாதி பொருளாற் கலங்கியுட் டாமதஞ்சேர்**
**மனதானி யாய வரம்பறி யாருனை வாழ்த்தகிலார்**
**வினதானி யாம னிகர் சுதவாக விபாசகிரீ**
**சனதானி யாசை ஒழித்தருள் கூடற் றயாநிதியே** 97

தன தானியாதி பொருளால்-செல்வம், தானியங்கள் முதலிய பொருட்களால்; கலங்கி - குழம்பி; உள் - அகத்தே; தாமதம் சேர் - தாமச குணம்சேரும்; மனதால்-சிந்தையால்; நியாய வரம்பு அறியார் - நீதியின் எல்லையை உணராதவர்கள்; உனை - உன்னை; வாழ்த்தகிலார் - போற்றுகின்றாரில்லை; நியாமன் நிகர் - சிவனை ஒத்த; வினதா சுத வாக - விநதை மகன் கருடனை வாகனமாகக் கொண்டவா; விபாச - பற்றறுப்பவ; கிரீசனது - கிரீசன் என்பவனது; ஆனி -

கேடும்; ஆசை - விருப்பும்; ஒழித்தருள்-நீக்கியருளும்; கூடல்-மதுரை; தயாநிதியே - கிருபாநிதியே;

**நிதியா ரகத்திடை நின்றெதிர் நோக்கித்தம் நேர்மைவிட்டுத்**
**துதியா ரகத்திடை யாரெவர் நேரினும் தூமதிசேர்**
**முதியா ரகத்தியன் ஆதியர் போற்று முகுந்தர்பத**
**நதியா ரகத்தியல் தீர்ப்பார் தென்கூடல் நகரன்பரே** 98

நிதியார் அகத்திடை - செல்வந்தர்கள் வீட்டில்; நின்று - இருந்து; எதிர்நோக்கி - எதிர்பார்த்து; தம்-தங்கள்; நேர்மை விட்டு - செம்மை நிலையைக் கைவிட்டு; துதியாரகத்திடை - போற்றாதவர் உள்ளத்தில்; யார் எவர் நேரினும் - யார் எவராக இருப்பினும்; தூமதிசேர் - தூய அறிவுள்ள; முதியார் - பெரியவராம்; அகத்தியன் ஆதியர் - அகத்தியர் முதலியோர்; போற்றும் - துதிக்கும்; முகுந்தர் - திருமால்; பதம் நதியார் - திருவடிகளில் கங்கா நதியுடையவர்; அகத்து - உளத்தில் உள்ள அகங்காரத்து; இயல் - தன்மையை; தீர்ப்பார் - போக்குவார்; தென் கூடல்நகர் அன்பரே - மதுரை நகர்பால் அன்புள்ள மாலவரே;

**அன்றிருப் பாவை யுருக்கிய வாறென் அகங்குழையத்**
**தென்திருப் பாவைத் தமிழ்மாலை வேய்ந்தது தேவர்கடென்**
**குன்றிருப் பாவையங் காத்தாயென் றேத்துந் தண்கூடற்பிரான்**
**பொன்றிருப் பாவையங் கையாற் றொடுமலர்ப்**
**பொன்னடியே** 99

அன்று - பண்டு; இருப்பாவை - இரும்பானவைகளை; உருக்கியவாறு - உருக்கியபடி; என் அகம் குழைய - என் இரும்பாம் மனம் கசிய; தென்-அழகிய; திருப்பாவைத் தமிழ் மாலை - திருப்பாவை என்னும் தமிழ் ஆரம்; வேய்ந்தது - புனைந்தது; தேவர்கள் - வானோர்கள்; தென்குன்று - தென் மலையே; இருப்பா - குடியிருப்பாக; வையங்காத்தாய் - உலகினைப் புரந்தாய்; என்றேத்தும்-எனத் துதிக்கும்; தண்கூடற் பிரான் - மதுரை இறைவன்; பொன் திருப்பாவை - பொன்னெனும் திருமகள்; அங்கையால் - அழகிய கரங்களால்;

*தொடும் - வருடும்; மலர்ப் பொன்னடியே - தாமரை மலராம் பொற்றிருவடிகளே;*

**அடியவ ராக வருவாரைக் காக்கும் அருள்சுரக்கும்**
**மடியவ ராக வனல்தீர்க்கும் மங்கள வாழ்வருளும்**
**நெடியவ ராக வடிவான கூடல் நிமலன்றிரி**
**புடியவ ராக வழிமாற்று வான்மலர்ப் பொன்னடியே** 100

*அடியவராக - பக்தர்களாக; வருவாரை - வருபவர்களை; காக்கும் - புரக்கும்; அருள் சுரக்கும் - அருளைப் பொழியும்; அராக அனல் - ஆசைத் தீயை; மடிய-அழியும்படி; தீர்க்கும் - நீக்கும்; மங்கள வாழ்வருளும் - சுப வாழ்க்கையை அளித் தருளும்; நெடிய - நீண்ட பெரிய; வராக வடிவான - பன்றி உருவான; கூடல் - மதுரை; நிமலன் - பரிசுத்தன்; திரிபுடிய வராக - ஞானமுடையவர்களாக; மலர்ப் பொன்னடியே - மலரனைய பொற்றிருவடிக்கே; வழிமாற்றுவான் - நெறியை மாற்றி அருளுவான்;*

**அடியவ ராக அடலாழி அங்கரத் தாயவிர்பொன்**
**முடியவ ராக வண்கூடலெந் தாய்முது நான்மறைக்கு**
**நெடியவ ராகவென் றோதிஎந் நாளும் நினைப்பவர்தாட்**
**பொடியவ ராக வனன்மாய்த்து நல்குமப் பொன்னுலகே.** 101

*அடியவர் - பக்தர்கள்; ராக - மோகத்தை; அடல் - அழிக்கும்; ஆழி - சக்கராயுதம்; அங்கரத்தாய் - அழகிய கையிற் கொண்டவ; அவிர் - ஒளி செய்; பொன் முடியவராக - பொற் கிரீடம் புனைந்தவராக; வண்கூடல் எந்தாய் - வளமான கூடற் பதிக்குத் தலைவ; முது நான்மறைக்கு - பழைய நான்கு வேதங்களுக்கும்; நெடிய - உயர்ந்தவ; வராக - வராகாவ தார; என்று ஓதி - எனக் கூறி; எந்நாளும் - எத்தினமும்; நினைப்பவர் - சிந்திப்பவர்களின்; தாட்பொடியவர் - பாதத் துகளாயவர்; ஆக அனல் - நெஞ்சத் தீயை; மாய்த்து - அழித்து; நல்கும் அப் பொன் உலகே - அந்தப் பரமபதம் அளிப்பவ;*

## வாழ்த்து

ஆழ்வார்கள் வாழி அவர்தமிழ் வாழி அவர்பதங்கள்
தாழ்வார்கள் வாழியெம் மாருதி வாழியித் தாரணியில்
வாழ்வார்கள் வாழிநல் வேதாந்த தேசிகர் வாழிஅறம்
சூழ்வார்கள் வாழிதென் கூடலும் சுந்தரத் தோளனுமே.

ஆழ்வார்கள் வாழி - திருமாலடியார்கள் வாழ்க; அவர் தமிழ் வாழி - அவ்வாழ்வார்களருளிய தமிழாம் திவ்வியப் பிரபந்தம் வாழ்க; அவர் பதங்கள் - அவர்களுடைய திருவடிகள்; தாழ்வார்கள் - வணங்குபவர்கள்; வாழி - வாழ்க; எம்மாருதி வாழி - எங்கள் அனுமன் வாழ்க; இத்தாரணியில்-இந்தப் பூமியில்; வாழ்வார்கள் - வசிப்பவர்கள்; வாழி - வாழ்க; நல் வேதாந்த தேசிகர் வாழி - நல்லவராம் கவிதார்க்கிக சிம்ஹம் நிகமாந்த தேசிக ஸ்வாமி வாழ்க; அறம் சூழ்வார்கள் - புண்ணியம் புரிபவர்கள்; தென்கூடலும் - தென்மதுரை; சுந்தரத் தோளனும் - அழகிய புயத்திறைவனும்; வாழி - வாழ்க; ஏ - அசை.

---

மதுரகவி திருக்கூடல் திரிபந்தாதி முற்றும்.

---

# மேதினி புகழ் மெய்காட்டும் பொட்டல்

மதுரை மாநகரத்தைத் தலைநகராகக் கொண்டு வல்லப தேவன் என்ற பாண்டிய மன்னன் பாண்டிய மண்டலத்தை ஆண்டு வந்தான். இவன் ஒரு பரம பக்தன், "பரம்பொருள் எது?", என்று தன்னிச்சையாக இவன் அறிய விரும்பினான். பலரிடமும் இது குறித்துப் பேசினான். பாண்டிய மன்னனுக்கு உரிய பதில் கிடைக்கவில்லை பொற்கிழி ஒன்றைக் கட்டுவித்து, "பரம்பொருளின் உண்மைத் தத்துவத்தை விளக்குகின்றவர்களுக்கு, இந்தப் பொற்கிழி போய்ச் சேரும்" என்று நாடு முழுவதும் பறை அறைவித்தான் பாண்டிய மன்னன். பொற்கிழி இருந்த இடத்திற்குப் புலவர்கள் பலரும் சென்று திரும்பினர். அவர்களின் விளக்கமோ, பாடல்களோ அங்கு எடுபடவில்லை. பொற்கிழியும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

விஷ்ணுசித்தர் திருவில்லிபுத்தூரில் தோன்றிய பரம பக்தர். இவரைச் சில பக்தர்கள் மதுரைக்கு அழைத்து வந்தனர். பொற்கிழிக்கு அருகில் சித்தர் வந்தார். பாண்டியன் கொண்டாட, வேண்டிய வேதங்களை ஓதி விரைந்து சென்று பொற்கிழியைப் பெற்றார். "நாராயணனே பரம்பொருள்" என்ற அரிய தத்துவத்தை அனைவரும் வியக்கப் பாடினார். பொற்கிழி வளைந்து வந்தது. வணங்கி அதனைப் பெற்றார். அரசனும், அறிஞர் பெருமக்களும் விஷ்ணுசித்தரைப் பாராட்டிப் புகழ்ந்தனர்.

பட்டர்பிரான் என்றும் பெரிய ஆழ்வார் என்றும் பட்டத்தைச் சித்தருக்குக் கூடலம்பதி மக்கள் சிறப்புகளுடன் வழங்கிப் பாராட்டினர். பட்டத்து யானை மீது ஏற்றி கூடல் நகரத்து வீதிகளில் விஷ்ணுசித்தரை அழைத்து வந்தனர். பாண்டிய மன்னனே (வல்லப தேவனே) முன்நின்று இந்த ஊர்வலத்தை நடத்திச் சிறப்புச் செய்தான் அப்போது அகிலம் போற்றும் நாராயணன் தேவியருடன் கருடனில் வந்து காட்சி தந்தார். விஷ்ணுசித்தர் கண்ணீர் மல்க ஆண்டவனை அனைவருடனும் தொழுது நின்றார். நாராயணனின் அழகிய திருமேனிக்கு ஊறு நேருமோ என்று ஆழ்வார் அஞ்சினார். அஞ்சிய ஆழ்வார் ஆண்டவனுக்கு ஊறு அகலப் பல்லாண்டு பாடினார்.

அந்தப் பல்லாண்டுக் கவிதைகள் பவித்ரமானவை. பட்டர்பிரான் பாடிய பல்லாண்டுக் கவிதைகளை நாமும் பாடி மகிழ்வோம். திவ்வியப் பிரபந்தத்தில் இந்தப் பன்னிரண்டு பாடல்களும் தேனினும் இனிதாகத் தித்திக்கின்றன.

பொற்கிழி பெற்றது, நாராயணன் தேவியருடன் காட்சி தந்தது, ஆகிய நிகழ்ச்சிகள் எல்லாம் மதுரை மாநகரத்தின் மையப் பகுதியில் நடந்தன. இந்த இடம் மேங் காட்டுப் பொட்டல் என்று, இன்று அழைக்கப்படுகிறது. பரத்துவத்தைப் பட்டர் பிரான் நிர்ணயம் செய்த இந்த இடத்தை "மெய் காட்டும் பொட்டல்" என்று அன்று, ஆன்றோர்கள் அழைத்தனர்.

ஜான்சி ராணி பூங்கா இங்கு இன்று இருக்கிறது; நேதாஜி சுபாஷ் சந்திர போஸ், இந்திரா காந்தி சிலைகள் இங்கு உள்ளன. ஒய்.எம்.சி.ஏ. இருக்கிறது. பல நகைக் கடைகள் உள்ளன, மதுரை நகரத்தின் தாகத்தை தீர்க்கப் பெரிய நீர்த் தொட்டிகள் இங்கு இருக்கின்றன. பல பொதுக்கூட்டங்கள் இங்கு அழகாக நடக்கின்றன. ஆனால் பெரியாழ்வார் பெருமையோ, அவரது பொற்கிழி வென்ற வரலாறு காட்டும் கல்வெட்டுகள் ஏதும் இங்குக் காணப்படவில்லை. மெய்காட்டும் பொட்டல்" என்ற பெயரும் இன்று இங்கு இல்லை.

மதுரை நகராட்சி இந்த இடத்தை இனி, "மெய் காட்டும் பொட்டல்" என்று அழைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். உடன் ஒரு பெயர்ப் பலகையையும் இங்கு வைக்க மதுரை மாநகர் ஆட்சி முன்வர வேண்டும்.

தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினர் அல்லது இந்து சமய ஆட்சித் துறையினர் முன்வந்து, அரசு ஆதரவுடன் பட்டர் பெருமான் பெருமைகளையும். மெய் காட்டும் பொட்டலின் சிறப்பையும் விளக்கும் வண்ணம் கல்வெட்டில் செய்திகளைச் சொல்லி வரலாற்றுச் சிறப்புமிக்க இடம் இது, என்று போற்றிப் பாதுகாக்க வேண்டும். இல்லை எனில் இந்தச் சிறப்புகள் மறைந்துவிடும். பெரியாழ்வார் போற்றிப் புகழ்ந்த பல்லாண்டுப் பாடல்களை இனி நாம் காண்போம்.

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூர் என்றொருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தான் என்றுரைத்தோம் கீழ்மையினிற் சேரும்
விழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று
ஈண்டிய சங்கம் எடுத்தூத—வேண்டிய
வேதங்கள் ஓதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

1

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண் ணாஉன் செவ்வடி
செவ்விதிருக் காப்பு.

2

அடியோ மோடும்நின் னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறை யும்சுடர்
ஆழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும்அப் பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே.

3

வாழாட் பட்டுநின் றீருள்ளீ ரேல்வந்து
மண்ணும் மணமும் கொண்மின்
கூழாட் பட்டுநின் றீர்கள் எங்கள்
குழுவினில் புகுத லொட்டோம்

ஏழாட் காலும் பழிப்பிலோம் நாங்கள்
இராக்கதர் வாழ் இலங்கை
பாழா ளாகப் படைபொரு தானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

4

ஏடு நிலத்தில் இடுவதன்முன் னம்வந்து
எங்கள் குழாம் புகுந்து
கூடும் மனமுடை யீர்கள் வரம்பொழி
வந்தொல்லைக் கூடுமினோ
நாடும் நகரமும் நன்கறி யுநமோ
நாராய ணாயவென்று
பாடும் மனமுடைப் பத்தருள் ளீர்வந்து
பல்லாண்டு கூறுமினே !

5

அண்டக் குலத்துக் கதிபதி ஆகி
அசுரர் இராக்கதரை
இண்டைக் குலத்தை எடுத்துக் களைந்த
இருடிகே சன்தனக்கு
தொண்டக் குலத்தி லுள்ளீர்வந் தடிதொழுது
ஆயிரம் நாமம் சொல்லி
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு
பல்லாயிரத் தாண்டென்மினே.

6

எந்தை தந்தை தந்தைதம் மூத்தப்பன்
ஏழ்படி கால்தொடங்கி
வந்து வழிவழி ஆட்செய்கின் றோம்திரு
வோணத் திருவிழவில்
அந்தியம் போதில் அரியுரு வாகி
அரியை அழித்தவனை
பந்தனை தீரப்பல் லாண்டுபல் லாயிரத்
தாண்டென்று பாடுதுமே.

7

தீயிற் பொலிகின்ற செஞ்சுட ராழி
திகழ்திருச் சக்கரத்தின்
கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று
குடிகுடியாட் செய்கின்றோம்
மாயப் பொருபடை வாணனை ஆயிரந்
தோளும் பொழிகுருதி
பாயச் சுழற்றிய ஆழிவல் லானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

8

நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும்
அத்தாணிச் சேவகமும்
கையடைக் காயும் கழுத்துக்குப் பூணொடு
காதுக்குக் குண்டலமும்
மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்தென்னை
வெள்ளுயிர் ஆக்கவல்ல
பையுடை நாகப் பகைக்கொடி யானுக்குப்
பல்லாண்டு கூறுவனே.

உடுத்துக் களைந்தநின் பீதக
உடுத்துக் கலத்ததுண்டு
தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்தன
சூடும்இத் தொண்டர்களோம்
விடுத்த திசைக்கரு மந்திருத் தித்திரு
வோணத் திருவிழவில்
படுத்த பைந் நாகணைப் பள்ளிகொண் டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

10

எந்நாள் எம்பெரு மான்உன் தனக்கடி
யோம்என் றெழுத்துப்பட்ட
அந்நா ளேஅடி யோங்கள் அடிக்குடில்
வீடுபெற் றுய்ந்ததுகாண்

செங்கான் தோற்றித் திருமது ரையுட்
சிலைகுனித்து ஐந்தலைப்
பைங்நா கத்தலைப் பாய்ந்தவ னேஉன்னைய
பல்லாண்டு கூறுதுமே.

11

அல்வழக் கொன்றும்இல் லாஅணி கோட்டியர்
கோன்அபி மானதுங்கள்
செல்வனைப் போலத் திருமாலே நானும்
உனக்குப் பழவடியேன்
நல்வகை யால்நமோ நாரா யணாவென்று
நாமம் பலபரவி
பல்வகை யாலும் பவித்திர னேஉன்னைப்
பல்லாண்டு கூறுவனே.

12

பல்லாண் டென்று பவித்திர னைப்பர
மேட்டியை சார்ங்க மென்னும்
வில்லாண் டான்தன்னை வில்லிபுத் தூர்விட்டு
சித்தன் விரும்பியசொல்
நல்லாண் டென்று நவின்றுரைப் பார்நமோ
நாரா ணாயவென்று
பல்லா ண்டும்பர மாத்மனைச் சூழ்ந்திருக்
தேத்துவர் பல்லாண்டே,

ஆழ்வார்கள் பாடல்கள் அனைத்தும் பக்திப் பரவசமூட்டும் பனுவல்கள். ஆழ்வார்கள் பாடல்கள் அனைத்தும் வேத சாரம் என்று அறிஞர்கள் விளம்புவர். இவர்களின் பாடல்களில் ஆழ்ந்து அறியத்தக்க சொல் நயம், பொருள் நயம் காணலாம். பன்னிரண்டு ஆழ்வார்களும் தமிழ் மொழிக்குச் செய்த பணி இணையற்றது.

பாவகத் தால்தன் திருவவ தாரம் பதினொன்றென்றிப்
பூவகத் தாரறி யாதவண் ணம்தன்னை யேபுகழ்ந்து
நாவகத் தாற்கவி யாயிரம் பாடி நயந்தளித்த
கோவகத் தாற்கன்றி என்புறத் தார்செய்குற் றேவல்களே

என்று இவர்கள் பெருமையைக் கம்பர் தனது சடகோபர் அந்தாதியில் போற்றிப் புகழ்ந்துரைக்கின்றார். பத்து அவதார லீலைகள் ஆழ்வார்களின் பாடல்களில் அழகுற எடுத்துச் சொல்லப்பட்டுள்ளன.

ஆழ்வார்கள் அனைவரும் உயர்ந்தவர்களே. இவர்களில் நம்மாழ்வார் தனித்து விளங்குகின்றார். "மயர்வற மதிநலம் அருளினன் எவனவன் அயர்வறு அமரர்கள் அதிபதி யவனவன் துயரறு சுடரடி தொழு தெழன் மனனே" என்ற நம்மாழ்வார் பாடல் எங்கும் சிறப்புறப் பேசப்படுகின்ற ஒன்றாகும். இவருடைய சீடர் மதுரகவி யாழ்வார் என்பவராவார். "கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்" என்று தொடங்கி 11 பாடல்களை மட்டும் இயற்றி உள்ளார்.

மதுரை மாநகரத்திற்கும் தமிழ்ச் சங்கத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. முதல், இடை, கடை ஆகிய மூன்று சங்கங்கள் இங்குத்தோன்றி முறைபாகத் தமிழை வளர்த்தன. "அண்ட கோளத்தார் அணுவாகி," என்ற பாடலை ஆழ்வார் சங்கத்திற்கு அனுப்பினார். பாடலுக்கு ஒப்புதலும், பாராட்டும் சங்கத்தார் மூலம் கிடைத்தது. இந்தக் கவிதை ஆழ்வார்திருநகரி ஏட்டிலிருந்து கிடைத்த ஒன்றாகும். இதன் பொருள் நயம், சொல் நயம் விளக்கி மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர் திரு. நாராயண அய்யங்கார் ஒரு அரிய ஆய்வுரையை வழங்கி உள்ளார். ஆழ்வார்கள் பாடல்கள் தெய்வத் தன்மை பொருந்தியது மட்டுமல்ல. தமிழுக்குப் பெருமையும், புகழும் சேர்ப்பன் என்பதில் ஐயமில்லை.

எல்லாப் பொருளும் இதன்பாலுள. இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை—என்பதும் நாலாயிர திவ்விய பிரபந்தத்திற்குப் பொருந்தும். மதுரைச் சங்கத்திற்கு ஆழ்வார் அனுப்பிய பாடலைக் கண்டு இன்புறுவோம்!

**அண்ட கோளத் தாரணு வாகிப்**
**பிண்டம் பூத்த பேரெழில் ஒருமை**
**ஈருயிர் மருங்கி னாருயிர் தொகுத்து**
**நித்திலத் தன்ன வெண்மணற் பரப்பில்**
**வேரும் வித்து மின்றித் தானே**
**தன்னிலை அறியாத் தொன்மிகு பெருமா**

மூவழி முப்பழம் முறைமுறை தருதலின்
ஒன்றுண்டு ஒன்சுவ தருவது மற்றது
கல்லி னெழுந்து கடலி னழுந்தி
யறுகாற் குறவ னீரற விளைக்கும்
செறுபொழிற் குப்பை தருகட் டொன்றுவித்
தறுகொட் டாமா விளைக்கு நாடன்
அவனே தலையிலி அவன்மகள் முலையிலி
தானு மீனாள் ஈனவும் படாஅள்
எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்
அவளிவ ளுவளென அறிதல்
துவளறு காட்சிப் புலவரது கடனே !



# மதுரகவியாரின் மதுரமான கவிதைகள்

வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர்—ஏறுஎங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவியார் எம்மை
ஆழ்வார் அவரே அரண்.

—நாதமுனிகள்

1

கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணி யபெரு மாயஎன் னப்பனில்
நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
அண்ணிக் கும்அமு தூறுமென் நாவுக்கே.

2

நாவி னால்நவிற் றின்பம் எய்தினேன்
மேவி னேனவன் பொன்னடி மெய்ம்மையே
தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி
பாவி னின்னிசை பாடித் திரிவனே.

3

திரிதந் தாகிலும் தேவ பிரானுடைக்
கரிய கோலத் திருவுருக் காண்பன்நான்
பெரிய வண்குரு கூர்நகர் நம் பிக்காள்
உரிய னாய்அடி யேன்பெற்ற நன்மையே.

4

நன்மையால் மிக்க நான்மறை யாளர்கள்
புன்மை யாகக் கருதுவர் ஆதலின்
அன்னை யாய்அத்த னாய்என்னை ஆண்டிடும்
தன்மை யான்சட கோபனென் நம்பியே.

5

நம்பி னேன்பிறர் நன்பொருள் தன்னையும்
நம்பி னேன்மட வாரையும் முன்னெலாம்
செம்பொன் மாடத் திருக்குரு கூர்நம்பிக்
கன்பனாய் அடியேன் சதிர்த்தேன் இன்றே.

6

இன்று தொட்டு எழுமையும் எம்பிரான்
நின்று தன்புக ழேத்த அருளினான்
குன்ற மாடத் திருக்குரு கூர்நம்பி
என்றும் என்னை இகழ்விலன் காண்மினே.

7

கண்டு கொண்டென்னைக் காரிமா றப்பிரான்
பண்டை வல்வினை மாற்றி அருளினான்
எண்தி சையும் அறிய இயம்புகேன்
ஒண்த மிழ்ச்சட கோபன் அருளையே.

8

அருள்கொண் டாடும் அடியவர் இன்புற
அருளி னான்அவ் அருமறை யின்பொருள்
அருள் கொண் டாயிரம் இன்தமிழ் பாடினான்
அருள் கண் டீர்இவ் உலகினில் மிக்கதே.

9

மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருளை
நிற்கப் பாடியென் நெஞ்சுள் நிறுத்தினான்
தக்க சீர்ச்சட கோபனென் நம்பிக்குஆட்
புக்க காதல் அடிமைப் பயனன்றே.

10

பயன்அன் றாகிலும் பாங்கல ராகிலும்
செயல்நன் றாகத் திருத்தாள் பணிகொள்வான்
குயில்நின் றால்பொழில் சூழ்குரு கூர்நம்பி
முயல்கின் றேன்உன்றன் மெய்கழற் கன்பையே.

11

அன்பன் தன்னை அடைந்தவர் கட்கெல்லாம்
அன்பன் தென்குரு கூர்நகர் நம்பிக்கு
அன்ப னாய்மது ரகவி சொன்னசொல்
நம்பு வார்பதி வைகுந்தம் காண்மினே!



# THE BEAUTIFUL AND ANCIENT MADURAI KUDALAZAKAR TEMPLE

Madurai is one of the ancient cities in Tamil Nadu. It is the cradle of Tamil culture and literature. The city is a small square one consisting of Adi Streets, Avani Moola Streets, Masi Streets and Veli streets around the temple of goddess Meenakshi.

Apart from Meenakshi temple there is a shrine for Lord Sundareswara and Kariamanikka perumal now merged into a single Temple. The various temple complex were built by Pandiyas, Naiks and others ruled later. A fort is also built adding some near by villages and other places close to the city.

Irundayur, where Irundavalamudaiar is housed in a temple which is the great Kudalazakar perumal temple. This famous temple and the streets around the temple were very close to the Madurai city formed a separate one, mentioned in Paripadal and Silapadigaram with reference to the God here Irundayur Amarndha Selvan.

A Sangam poet by name Irundayur Kotram Pulavan and Irundayur Karungozhi Mosiar have come from this place The Lord here is called Irundayur Thevar, the presiding deity in the temple is in a siting pose. He is also known as Irundavalamudaiar, as there were beautiful gardens with flowers and trees around the temple. They were irigated by the water from the famous river Krithamal. Like Srirangam both Vaigai and Krithamal, rivers formed a nice and fine garland in and around the Temples in Madurai city. Krithamal sinked and Vaigai has no water except sand.

The said Temple of Madurai is a unique model only in two or three places in the entire country, where the Lord Narayana is found in three postures with the Vimana. The Lord in Madurai is in the sitting posture. The Lord is in reclining posture is known as Ksheerapthinathan and in the third floor, the Lord is in the standing position and he is known as Suryanarayanan.

We can see similar Astanga Vimanam in Kanchi Vaikunthanatha temple and in Thirukostiyur Sowmiya Narayana Temple The Temple is an important one for all the Vaishnavites as it was here that the introductory portion of the Divyaprabandam, the great Periyalwar of Srivilliputtur otherwise called Vishnu Sithar, the great Saint at the direction of the Lord came to Madurai.

He won a religious purse. with the help of Which he has tuilf the tall tower of Srivilliputhur. The Prize was presented in the Pandiya Court.

During Vijayanagaram period and later, the Temple had many additions and alterations. The Pandiyas who are believed to have built it first and devoted attentions like Cholas in Temples with tall towers, and later added very big compound walls.

In the river Kiruthamal, it is said that the first Avathara of Lord Vishnu as Matsya (fish) took place in this river. The Lord Kudalazagar was paised through their songs by like Thirumangai and Thirumazhisai Alwars, and later poets like Pillai perumal Iyangar and others sang the glory of Lord here.

The temple has got a tank in which temple Festivals took place earlier, but now in and around the tanks there are so may Commercial establishments and as such the Temple Festival is not taking place now a days here.

The Kudalazagar Temple is connected with Nammalvar also the greatest Alwars. His disciple Madurakavi is said to have won a victory over Sangam Poets of Madurai. The said Poems

start with Andakolathar Anuvaki etc. The Sangam poets admitted it as divine poetry.

The Saint Vishnu Sithar was taken all round the Streets of Madurai on the royal elephant. The Procession was led by the king Sri Vallaba Pandian. It is further said that the Lord appeared in the sky on Garuda with Sri Devi and Bhudevi. The Alwar and others overwelcomed by this great gesture of the Lord, The Alwar Sang twelve verses in praise of the Lord which are considere'd the core or the entire Prabandam.

The Place, where the Alwar established Vaishnavism as a true (mei)religiom even now is there end now calld as Mengattu Pottal instead of "**Meikattum Pottal**". This place now otherwise is called Jansy Rani Park also.

The Lord in the upper tire of the Astanga Vimanam on the said Temple is known as '**Andara vanathu Emberuman**' as the God appeared in the sky. In praise of the great event a road in Munisali of the city is also named as Andara vanam Street.

Madurai is the cradle of Tamil literature in which three Sangams have born for the growth of the Tamil literature. If the Sangam poets aprove a poem of a poet, he will be recognised by the Tamil World,

Anda Kolathar Anuvaki is the poem sent by Madurakavi to sangam. This has been accepted and acknowledged by Sangam poets. Thus, poems of Prabandam and the great ness of Alwars are accepted by the great poets of Sangam.

—R. G.

# மதுரகவி
# திருமாலிருஞ்சோலை
# யமக அந்தாதி

உரை :

மு. கோ. ராமன்

# மதுரகவி
# திருமாலிருஞ்சோலை யமக அந்தாதி

### காப்பு

பெருவடி வானவன் மாலிருஞ் சோலைப் பிரானடிமேல்
கருவடி மாலை யமகஅந் தாதி கழறுதற்கு
மருவடி தாமப் புயராம பத்தி வளர்சிறிய
திருவடி மாமலர்ச் சேவடி போற்றுதும் சிந்தைவைத்தே.

பெருவடிவானவன் - மிகுந்த அழகுடையோன்; மாலிருஞ் சோலைப் பிரான் - திருமாலிருஞ்சோலைத் தலைவன்; அடி மேல் - திருவடிகளின் மீது; கருவடி - பிறப்பை அழிக்கும்; மாலை - பாமாலை; யமக அந்தாதி - யமகத் தொடையில் அந்தம் ஆதியாக வரும் பாடல்கள்; கழறுதற்கு - கூறுவதற்கு; மருவடிதாமப்புய - வாசனை கமழும் பூமாலையுடைய தோள் களை உடைய; ராம பத்தி-ஸ்ரீராமன்பாலுள்ள அன்பு; வளர்- பெருகும்; சிறிய திருவடி - ஆஞ்சநேயர்; மா - அழகிய; மலர்ச் சேவடி - மலரனைய சிவந்த திருப்பாதங்களை; சிந்தை வைத்தே - மனத்தில் கொண்டு; போற்றுதும்-தொழுவோம்;

வந்த சொல் திரும்பவும் வெவ்வேறு பொருளில் கவிதை யில் வருவது யமகம் என்று கூறப்படும்.

முருகார் மலர்ப்பொழில் மாலிருஞ்சோலை முழுமுதல்மேல்
வருகாதல் முந்துந் தமிழ்க்கர ணாக வரும்வளம்சால்
இருகா விரியின் இடைத்துயில் மால்கழல் ஏத்தும்எங்கள்
குருகா புரியிற் புளிக்கீழ் விளங்கும் குருபரனே. 2

முருகுஆர் - எழில் பொருந்திய; மலர்ப் பொழில் - பூஞ் சோலை; மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைப் பதி யின்; முழுமுதல் மேல் - ஆதிமுதல்வன் மீது; வருகாதல் முந்

தும் - உற்ற பக்தி முன்வரும்; தமிழ்க்கு - தமிழ்ப் பாமாலையாம் யமக அந்தாதிக்கு; அரணாக - காப்பாக; வளம்சால் - செழுமை பொருந்திய; இரு காவிரியின் இடை - காவிரி - கொள்ளிட நதிகட்கிடையே உள்ள திருவரங்கத்தில்; துயில் - பள்ளிகொண்டிருக்கும்; மால் - திருமால் (அரங்கன்); கழல்- திருவடிகளை; ஏத்தும் - துதிக்கும்; எங்கள் - எம்முடைய; குருகாபுரியில் - திருக்குருகைப் பதியில்; புளிக் கீழ்-திருப்புளிய மரத்தடியில்; விளங்கும் - காட்சி தரும்; குருபரனே - நம்மாழ்வாராம் ஆசாரியனே; வரும் - முன்வருவார்; குருபரனே அரணாக வரும் என இயைக்க.

## நூல்

மதியா தவர்தவழ் மாலிருஞ்சோலை மலைஅழகா
மதியா தவர்மனை வாசல்செல் லாமழை வண்ணஎண்ணு
மதியா தவர்தம் வரோதய சீதர மாதவதா
மதியா தவினை மாற்றஇப் போதென்முன் வந்தருளே 3

மதி - சந்திரனும்; ஆதவர் - சூரியனும்; தவழ் - ஊர்ந்து செல்லும்; மாலிருஞ்சோலை மலை - திருமாலிருஞ்சோலை மலையில் உள்ள; அழகா - சுந்தரராஜப் பெருமாளே; மதியாதவர் - கருதாதவர்கள்; மனைவாசல் - வீட்டின் முன்; செல்லா - போகாத; மழைவண்ண - மேக நிறத்தாய்; எண்ணும் - நினைக்கும்; மதி - புத்தியுள்ள; யாதவர்தம் - ஆயர்களுடைய; வரோதய - வரத்தினால் தோன்றிய; சீதர - இலக்குமிப் பிராட்டியை மார்பில் தரித்தவ; மாதவ-மாதவன் என்ற திருப்பேர் கொண்டவ; தாமதியாது - காலம தாழ்த்தாமல்; அவ்வினை மாற்ற - பாவங்களை நீக்க; என்முன் - எனக்கெதிரே; இப்போது வந்து - இவ்வேளையில் வந்து; அருளே - அருள் புரிக.

வந்தனை யாகம நூல்வழி போற்றிசெய் வார்கள்தம்முன்
வந்தனை யாக வளித்தாய்தென் சோலை மலையவன்க
வந்தனை யாகவத் தட்டாங் அடியன் மருங்குறும்பா
வந்தனை யாகர மத்தோட மாற்றுக மால்வலையே 4

ஆகம நூல் வழி - ஆகம சாத்திர நெறியில்; வந்தனை போற்றி செய்வார்கள் - துதித்து வணங்குவார்கள்; தம்முன் - தங்கள் எதிரே; வந்தனையாக - சேவை சாதித்தவனாக; அளித்தாய் - அருள் செய்தாய்; தென்சோலை மலைய - அழகிய சோலை மலை அழக; வன்கவந்தனை - வலிய கவந்தாசுரனை; ஆகவத்து - போர்க்களத்தில்; அட்டாய் - கொன்றாய்; அடியன் மருங்குறும் - தாசன்பால் அடைந்துள்ள; பாவந்தனை - தீய வினைகளை; மால்வலை - மயக்க வலையினின்றும்; ஆகரம் அற்று - இருப்பிடம் இன்றி; ஓட - அழிய; மாற்றுக - நீக்கியருள்க.

வலையஞ் சுமந்ததிண் வாகாதென்சோலை மலையவிண்கா
வலையஞ் சுமந்தனி யாதனத் தானரன் மற்றும்நின்ஏ
வலையஞ் சுமந்தர வாணர்க்கும் ஈசவென் மாமனக்கு
வலையஞ்சு மந்தகன்முன்னடை யாமுன மாற்றுகவே 5

வலையஞ்சுமந்த - தோள் வளைகள் பூண்ட; திண்வாகா - வலிய புயத்தின்; தென்சோலை மலைய - அழகிய சோலை மலைவாச; விண் காவலை - வானுலகைப் புரத்தலை; அம் - அழகிய; சுமந்த - ஏற்ற; தனியாதனத்தான் - ஒப்பற்ற (மலர்) இருக்கையான் (பிரமன்); அரன் - சிவன்; மற்றும் - பிற; நின் ஏவலை - உன் ஆணையை; அஞ்சும்-பயந்தேற்கும்; அந்தரவாணர்க்கும் - தேவர்களுக்கும்; ஈச - இறைவ; என் - எளியேன்; மாமன - பெரிய மனத்து; குவலை - குற்றத்தை விரைவில்; அஞ்சு - கொடிய; அந்தகன் முன் - யமனெதிரே; அடையா முனம் - சேர்வதற்கு முன்பாக; மாற்றுக - நீக்குக;

மாலைய னாகமன் வானவர் போற்றும் வரதன்திரு
மாலைய னாக மளாவுந்தென் சோலை மலையன்வன
மாலைய னாக மருவார் மலர்மகள் மாட்டுமறா
மாலைய னாக மளித்தான் கழறுணை மற்றில்லையே 6

மால் ஐயன் - பெருமைசேர் பிரமன்; நாகமன் - வெள்ளி மலைக்கிறைவன் சிவன்; வானவர் - தேவர்கள்; போற்றும் - துதிக்கும்; வரதன் - வரமளிப்பவன்; திருமால் ஐயன் - விஷ்ணுவாம் அழகன்; ஆகமளாவும்-வானைத்தொடும்; தென்சோலை

மலையன் - தென்னகத்துச் சோலைமலையான்; வனமாலை யனாக - துளசி மாலைக்குரியவனாக; மருவார் - மணங்கமழ்; மலர்மகள்மாட்டு - தாமரைச்செல்வி இலக்குமியிடம்; மறா - நீங்காத; மாலையன்-வேட்கை உடையவன்; ஆகமளித்தான்- மார்பை உறைவிடமாக அருளியவன்; கழல் - திருவடிகள்; துணை - ஆதரவாகும்; மற்றில்லை - பிற அன்று;

இலங்கா னகர்க்கிறை யின்னுயிர் மாய்த்தருள் எந்தையைவான்
இலங்கா னகத்தவ ரேத்துந் தன் மாமலைக் கீசனைநம்
இலங்கா னகத்திடை யென்னா விருந்தவ மெய்தியுமெண்
இலங்கா னகத்திணை யில்லாப்புன் தேவரை ஏத்தினமே 7

இலங்காநகர்க்கிறையின் - இலங்கையதிபன் இராவண னின்; உயிர்மாய்த்து அருள் - பிராணனை அழித்தருளிய; எந்தையை-எம் அப்பனை;வானிலங்கா-தேவலோகத்து விளங் கும்; நகத்தவர் - பாங்குடைய தேவர்; ஏத்தும் - துதிக்கும்; தென் மாமலைக்கு ஈசனை - அழகர் மலைக்கிறைவனை; நம் இலம் - நமது வீடு; கானகத்திடை - வனத்தில்; என்னா - என்னும்: இருந்தவம் - மாதபசு; எய்தியும் - புரிந்தும்; எண் ணிலம் - சிந்தித்தோம் இல்லை; கால் நகத்து - கால் விரலி லுள்ள நகத்துக்குக்கூட; இணை இல்லா - ஒப்பில்லாத; புன் தேவரை - அற்பக் கடவுளர்களை; ஏத்தினம் - தொழுதோம்; ஏ - அசை;

தினகர னாதபம் தீர்க்கும்தென் சோலைச் சிலம்பனெழுத்
தினகர னாதப் பொருள்அலங் காரன் திகழ்தருமத்
தினகர னாதன் செருச்சேனை மாளச் செய்வளைஊ
தினகர னாதரஞ் செய்யான் கொடுமனச் சித்தரையே 8

தினகரன் - சூரியனின்; ஆதபம் - வெம்மை; தீர்க்கும் - போக்கும்; தென் - அழகிய; சோலைச் சிலம்பன் - சோலை மலையன்; எழுத்தின் - அட்சரங்களில்; அகரநாத - அகர ஒலியின்; பொருள் அலங்காரன் - விளக்கமான அழகன்; திகழ் தரு - விளங்கு; அத்தி நகர - அத்தினாபுரி; நாதன் - மன்னன் துரியோதனனின்; செருச் சேனைமாள - போரில் படைகள் அழிய; செய்வளை ஊதின - சங்கநாதம் முழக்கிய; கரன் -

திருக்கரமுடைய கண்ணன்; கொடுமனச் சித்தரையே - கொடிய மனக் கருத்தினரை; ஆதரம் செய்யான் - அன்பருள மாட்டான்.

**தரையம் பரந்திசை கீழ்மே லுலகங்கள் தந்திடுநா**
**தரையம் பரந்திகழ் பொன்னா னவரைச் சரோருகமா**
**தரையம் பரம்புரை நோக்கலங் காரரைச் சங்கணிஅத்**
**தரையம் பரந்துயில் தாடாளரைத்துதி சாற்றுமினே** 9

தரை - பூமி; அம்பரம் - வானுலகம்; திசை - திக்குகள்; கீழ்மேல் - பாதாளம்,ஆகாசம்; உலகங்கள் - லோகஙகள்; தந்திடு - அளித்திடும்; நாதரை - தலைவரை; அம்பரந்திகழ் பொன்னானவரை - பீதாம்பரதாரியை; சரோருக மாதரை - தாமரைச் செல்வியை: அம்பு அரம்புரை - கணையும் அரமும் ஒத்த; நோக்கு அலங்காரரை - அழகிய விழிகளுடையவரை; சங்கு அணி - பாஞ்சசன்னியம் என்ற சங்கு தரித்த; அத்தரை - தலைவரை; அம்பரந்துயில் - திருப்பாற்கடலில் பள்ளிகொண்டருளும்; தாடாளரை - செய்கை உள்ளவரை; துதி சாற்றுமின் - தோத்திரம் புகலுங்கள்; ஏ - அசை;

**சாற்றலங் காரனைத் தென்மலை நாதனைத் தன்திருத்தாட்**
**சாற்றலங் காரத் தலமாகி எங்குந் தழைத்தவனைச்**
**சாற்றலங் காரன மைக்கு ழலார்தந் தனிக்கருப்பஞ்**
**சாற்றலங் காரமொழிக்கு நைந்தாநலம் சார்வதென்றே** 10

சாற்று - விழாப்பூணும்; அலங்காரனை - அழகர் பிரானை; தென்மலை நாதனை - அழகிய சோலைமலைத் தலைவனை; தன்திருத்தாட் சாற்று - தன் திருவடி பதியும் இடம்; அலங்காரத் தலமாகி - அழகிய திருப்பதியாகி; எங்கும் - எவ்விடத்தும்; தழைத்தவனை - வாழ்ந்திருப்பவனை; சாற்றலம் - கூறவில்லை; காரன-மேகம் ஒத்த; மைக்குழலார் தம் - கருங்கூந்தலுடைய மகளிர்தம்முடைய: தனிக் கருப்பஞ் சாற்று - ஒப்பற்ற கரும்பின் ரசம் ஒத்த; அலங்கார மொழிக்கு-சிங்கார உரைக்கு; நைந்தாம்-தளர்ந்தோம்; நலம் சார்வது-நன்மை அடைவது; என்றே - எப்போது;

சார்வாக ராகம நூலார் கடங்கள் தகாநெறியே
சார்வாக ராக வழியே திரிதரல் தான்வரைந்து
சார்வாக ராகவ மாலலங் காரமெய்த் தாரகதே
சார்வாக ராக வனமணி யாயெனத் தாழுமினே 11

சார்வாகர் - உலகாயத்தினர் (நாத்திகர்); ஆகம நூலார்கள் தங்கள் - ஆகம சாத்திர நெறியினருடைய; தகா நெறியே - தகுதியற்ற மார்க்கமே; சார்வாக - புகலாக; ராக வழியே - மோக மார்க்கத்தில்; திரிதரல் தான் - அலைவது தான்; வரைந்து - நீக்கி; சார்வாக - ஆசை மிகவாக; ராகவ - ஸ்ரீராம; மால் அலங்கார - பெருமைசேர் அழக; மெய்த் தாரக - சத்தியத்தை நிலைநாட்டுபவ; தேசார் - ஒளிபொருந்திய; வாக - புயங்களுடையவ; வனமணியாய் - துளசி மணி மாலை பூண்டவ; என - என்று; தாழுமினே - பணிவீர் களாக;

தாவர சங்கம மானா யரக்கர் தனியிலங்கைத்
தாவர சங்கமண் ணாகவெய் தாய்வளம் சார்தருநந்
தாவர சங்க மணிக்கரத் தாய்தென் றடத்துறைநா
தாவர சங்கம் நின்பால் விரும்புமித் தாக்கணங்கே 12

தாவர சங்கமமானாய் - ஊர்வன, நிலையாக நிற்பன, ஆய உயிர்களானவ; அரக்கர் - இராக்கதர்; தனி இலங்கை - ஒப்பற்ற இலங்கை நகர்; தா அரசு அங்கம் - பகை மன்னன் இராவணன் உடல்; மண்ணாக-இறந்து மண்ணில் விழுமாறு; எய்தாய் - அம்பு எய்திக் கொன்றாய்; வளம் சார்தரும் - செழுமை மிக்க; நந்தா வர - குறைவற்ற வரம் தருவோய்; சங்கம்-பாஞ்சசன்னியம் என்ற சங்கு தரித்த; மணிக்கரத்தாய் - எழிற் கையினை உடையவ; தென்தடத்துறை - சோலைமலையில் விளங்கும்; நாதா - தலைவா; வரசங்கம் - மேன்மையான கூடலை; நின்பால் - உன்னிடம்; இத்தாக்கணங்கு - இந்தத் திருவனையாள்; விரும்பும் - ஆசைப்படும்;

**கணப்பனை யாண்டமுக் கண்ணா னறிவருங் கண்ணனைச்**
**செங்**
**கணப்பனை யாதியை மாலலங் காரனைக் கண்டுகண்டிக்**
**கணப்பனை யார்ந்தவிப் புட்குரல் காட்டுங்கொல்**
**கண்ணிணைவண்**
**கணப்பனை யாய்தெளிந் தோதுக நீயுளங் காதலித்தே** 13

*கணப்பனை ஆண்ட-கண்ணப்ப நாயனாரை ஆண்டருளிய; முக்கண்ணான்-திரியம்பகன், சிவன்; அறிவரும்-அறிதற்கரிய; கண்ணனை - கிருட்டினனை; செங்கண் அப்பனை - சிவந்த மலர்விழித் தலைவனை; ஆதியை - முதல்வனை; மால் அலங் காரனை - பெருமைசேர் அழகர் பெருமானை; கண்டுகண்டு - நோக்கி நோக்கி; இக்கண் - இவ்விடத்து; பனையார்ந்த - பனைமரத்துச் சார்ந்த; இப்புள் - இப்பறவை; குரல் காட்டுங் கொல் - தன் ஒலியைக் காட்டுமோ (கூவுமோ); கண் இணை - இரு விழிகளும்; வண்கணப் பனையாய் - வைரம் போன்ற ஒளியுடையவளே; நீ உளங் காதலித்தே - நீ மனத்து அன்பு கொண்டு; தெளிந்து ஓதுக - அறிந்து உரைப்பாயாக;*

**காதக னஞ்செய் தரவணிந் தோனைக் கடுப்பவிலங்**
**காதக னஞ்செ யனுமனைக் காத்தருள் காகுத்தமங்**
**காதக னஞ்செய்நன் மால லங்காரஅக் காமன்எனும்**
**காதக னஞ்செய் தடராது காக்கக் கடனுனக்கே** 14

*காதக நஞ்சு எய்து - கொலைத் தன்மையுள்ள விடமுடைய; அரவணிந்தோனை - பாம்புகளை மாலையாகப் பூண்ட சிவனை; கடுப்ப - ஒப்ப; இலங்காதகனம் செய்-இலங்கையை எரி ஊட்டிய; அனுமனை - மாருதியை; காத்தருள் - ரட்சித்தருளும்; காகுத்த - ஸ்ரீராம; மங்காத - குறைவு படாத; கனம் செய் - மேகம் தவழும்; நன்மால் அலங்கார - நல்ல சோலைமலை அழகா; அக்காமன் எனும் - அந்த மன்மதன் என்னும்; காதகன் - கொலைபாதகன்; அஞ்சு எய்து - ஐங்கணைகளாம் மலரம்புகளை ஏவி; அடராது - போரிடாது; காக்கக் கடன் உனக்கே - காப்பது உன் கடமையாம்;*

கடமலை யார மருப்பொசித் தாரருட் கண்ணர்முளைக்
கடமலை யாரறல் நேர்குழல் நாயகர் கார்தவழ் வேங்
கடமலை யாரணந் தென்சோலை மாமலைக் கள்வரன்பர்
கடமலை யாரந் நமன்தூத ராகிய காதகரே 15

*கடமலையார - மதவேழத்தின்பாற் பொருந்திய (குவலயா பீடம்); மருப்பு - தந்தங்களை; ஒசித்தார் - முறித்தவர்; அருட்கண்ணர் - அருள் சுரக்கும் விழியினர்; முளைக்கடம் அலை யார் அறல் - வரிசை பொருந்திய கருமணல்; நேர் - ஒத்த; குழல் நாயகர் - சுருண்ட முடியுடைய தலைவர்; கார் தவழ் - மேகம் தவழும்; வேங்கடமலை - திருப்பதியில் விளங்கும்; ஆரணம் - வேத வடிவன்; தென்சோலை மாமலைக் கள்வர் - அழகிய சோலை மலையில் உள்ள கள்ளழகர்; அன்பர் - பக்தர்களின்; கடம் - உடலை; மலையார் - எதிர்க்கார்; அ - அந்த; நமன் தூதராகிய காதகரே - யம தூதராம் கொலையாளிகளே;*

காத மணங்கமழ் பூந்தேன் விருந்திட்டுக் காமனரு
காத மணம்புரி தென்சோலை மாமலைக் கண்ணகுழைக்
காத மணம்பனல் கால்வெளி யாகிய கத்தவறங்
காத மணங்க ணுலகங்கொண் டோதலென் கட்டுரையே 16

*காதம் மணங்கமழ் - ஒரு காத தூரம் வரை வாசனை வீசும்; பூந்தேன்-மலர்களின் தேன்; விருந்திட்டு-புதுமை செய்யும்; காமன் - சோலைகள் விளங்கும்; அருகாத - குறையாத; மணம்புரி - மகிழ்வளிக்கும்; தென் - அழகிய; சோலை மாமலை - மேன்மை பொருந்திய சோலை மலை; கண்ண - இடத்தவ (கிருஷ்ணன் எனவும் கொள்க); குழைக்காத - குண்டலமணிந்த செவியினனே; மண் - நிலம்; அம்பு - நீர்; அனல்- தீ; கால் - காற்று; வெளி - ஆகாசம்; ஆகிய - ஆன; கத்த - காரண; அறங்காது - அறம் புரியாது; அமண் - புறச் சமயர்; அங்கண் உலகம் கொண்டு - பரந்த உலகில்; ஓதல் என் - கூறுவதென்ன; கட்டுரையே - கூறுகவே.*

**கட்டிருந் தாதவிழ் தென்சோலை மாமலைக் கண்ணர்விண்மு**
**கட்டிருந் தாதரித் தேத்திய வானவர்க் காகநன்மைக்**
**கட்டிருந் தாதவர்க் காய்ந்தருள் வார்கழற் கன்பகண்ப**
**கட்டிருந் தாதக் கொடும்பாச நும்மிரு கையினையே** 17

*கட்டிருந்தாதவிழ்-பெரிய பூவிதழில் சிந்தும் தேன்; தென் சோலை மாமலைக் கண்ணர்-அழகிய சோலை மலையிடத்த; விண் முகட்டு இருந்து - வான்மேட்டில் இருந்து; ஆதரித்து - அன்பு செய்து; ஏத்திய - தொழுத; வானவர்க்காக - தேவர் களுக்காக; நன்மைக்கண் - நல்லவற்றில்; திருந்தாதவர்க்கு - அறிவற்றவர்களை; காய்ந்து-சினந்து; அருள்வார்-இருப்பவர் கள்; கழற்கு - திருவடிகளுக்கு; அன்ப - நேய; கண்பகட்டி ருந்து-எருமைக் கடாவிலிருந்து; ஆதக் கொடும் பாசம்-விருப் புறும் கொடிய பாசம்; நும்மிரு கையினையே - உம் இரு கரங் களை;*

**கையானை யாரன்பரை மூன்று கண்ணனைக் காது துதிக்**
**கையானை யாரணந் தந்தானைத் தந்தருள் கண்ணனைநங்**
**கையானை யாரங் கடந்தானை ஏத்துனர் காமவெம்ப**
**கையானை யாரங்க வேள்விப் பயனையுங் கைப்பவரே** 18

*கையானை ஆர் அன்பரை - பொருந்திய பக்தர்களை வெறுக்காதவனை; மூன்று கண்ணனை - மூவிழிச் சிவனை (திரியம்பகன்); காது-கொல்லும்; துதிக்கையானை - தும்பிக் கையுடைய விநாயகனை; ஆரணந்தந்தானை - வேதங்களை யளித்த பிரமனை; தந்தருள் கண்ணனை - நாபிக் கமலத்தில் படைத்தருளிய சோலைமலை அழகனை; நங்கை - ராதை யாம் மங்கைக்கு; யானை - குவலயா பீடத்தின்; ஆரங்கள் - தந்தத்தின் முத்துக்களை; தந்தானை - அளித்தவனை; ஏத்து னர் - துதிப்பவர்கள்; காம வெம்பகையால் - மகளிர் வேட்கை என்னும் பகைக் குணத்தால்; நையார் - வருத்தமடையார் கள்; ஆர் அங்க வேள்விப் பயனையும் - நிறைந்த பாகுபாடு கள் கொண்ட யாகங்களின் பலன்களையும்; கைப்பவரே - வெறுப்பவரே;*

**கைப்ப வனந்தன் கலையும் அறிவும் கருத்துமுட்டி**
**கைப்ப வனந்த லடையா ளிஃதுக கேசனையும்**
**கைப்ப வனந்தரஞ் சேர்சோலை மாமலைக் கண்ணன்சட்ப**
**கைப்பவ னந்த வருள்வான்றன் மேற்கொண்ட கண்மயக்கே 19**

*அனந்தன் கலையும் அறிவும் - ஆதிசேடன் கல்வியும் ஞானமும்; கருத்தும் - சிந்தையும்; உள் திகைப்ப - மனத்தில் மயக்கமுற; அனந்தல் அடையாள் - உறக்கம் கொள்ளாள்; இஃது - இது; ககேசனையும்-கருடனையும்; கைப்ப - அலைக்கும்; அனந்தரம் சேர் - வானைத் தழுவும்; சோலைமாமலைக் கண்ணன் - திருமாலிருஞ்சோலை இருப்பிடமாயவன்; சட்பகை - காமம், குரோதம், லோபம், மோகம், மதம் மாச்சரியம் என்ற ஆறு விதப் பகைகளின்; பவன-வீடு; நந்த - கெட; அருள்வான் - அனுக்கிரகம் செய்பவன்; தன்மேற் கொண்ட - தன் மீதுற்ற; கண்மயக்கே - விழிகளின்பாற்பட்ட மயக்கால்; கைப்ப - வெறுப்புற;*

**கண்ணனை யாரமு தாவானை வாசக் கமலமலர்க்**
**கண்ணனை யாரணங் காணரி யானையெண் காமருறுங்**
**கண்ணனை யாரந் தருசோலை மாமலைக் கள்வனையே**
**கண்ணலை யாரவ ரேயெம்மை யாளுங் கடவுளரே 20**

*கண்ணனை - கரியவனை (கிருஷ்ணனை); ஆரமுது ஆவானை - பொருந்திய அமிழ்தம்ஆனவனை; வாச - மணம் சேர்; கமலமலர்க் கண்ணனை - தாமரை போன்ற விழியினனை; ஆரணம் - வேதங்களால்; காணரியானை - பார்க்க இயலாதவனை; எண் காமர் உறும் - கருதத் தக்க அழகுள்ள; கள்நனை ஆரம்தரு - தேன் சொட்டும் மலர்ப் பொழில்களுள்ள; சோலை - சோலை மாமலை-திருமாலிருஞ்சோலை மலை; கள்வனையே-மனங்கவர் கள்வனையே; கண் அலையார் அவரே - விழிகளிலிருந்து மாற்றாதவர்களே; எம்மை ஆளும் - எங்களை ஆட்கொள்ளும்; கடவுளரே-தெய்வங்களாவார்கள்;*

கடனாக மாதி முதலே யெனவருங் கண்ணனைவேங்
கடனாக மாலை யணிநகில் வண்ணக் கடிதடம்பொற்
கடனாக மானு மிளங்கோ வியர்தங் கருத்தனையெங்
கடனான மானவர்க் கெட்டாப் பரனைக் கருதுநெஞ்சே 21

கடநாகம் - மதமுள்ள யானை (கசேந்திரன்); ஆதி முதலே - ஆதிமூலமே; என - என்றழைக்க; வரும் - விரைந் தருள வரும்; கண்ணனை - கிருஷ்ணனை; வேங்கடனாக - வேங்கட மலை; மாலை - திருமாலை; அணிநகில் - அழகிய முலைகளும்; வண்ணக் கடிதடம் - அழகிய நிதம்பமும்; (முறையே) பொற்கடம் - பொன்குடம்; நாகம் - பாம்பு: மானும் - ஒத்த; இளங்கோவியர்தம் - கோபிகைக் கன்னியர் களுடைய; கருத்தனை - உள்ளத் திருப்பவனை; எங் கடன் ஆன - எங்கள் முறைமையினர்; மானவர்க்கு - மனிதர் களுக்கு; எட்டா - அடைய முடியாத; பரனை - தலைவனை (கடவுளை); கருது நெஞ்சே - மனமே, நினைப்பாயாக.

கரும்பணி யம்பர மாங்கடல் சூழுல கத்தருநா
கரும்பணி யம்பர மாலிருஞ் சோலையைக கண்டவர்க்குக்
கரும்பணி யம்ப ரரந்தைசெய் யார்பவக் கற்களுந்து
கரும்பணி யம்பர மங்கையர் காதலுங் கைத்திடுமே 22

கரும்பணி - கரும்பாம்புகள் கூடிய; அம்பரமாம் கடல் சூழ் - திசை எங்கும் கடல் சூழ்ந்த; உலகத்தரும் - மனிதர் களும்; நாகரும் - தேவர்களும்; பணி - வணங்கும்; அம்பர - வானளாவும்; மாலிருஞ்சோலையை - திருமாலிருஞ் சோலையை; கண்டவர்க்கு - தரிசித்தவர்களுக்கு; கரும்பணி அம்பர் - கரும்பு வில்லிற் பூட்டிய மலரம்புகளை உடைய மன் மதன்; அரந்தை செய்யார் - துன்பம் புரியமாட்டான்; பவக் கற்கள் உந்து - பிறவியாம் மலைகளை வெளித் தரும்; கரும் - கொடிய; பணி அம் - அழகிய ஆபரணங்கள் அணிந்த; பர மங்கையர் - அன்னிய மடந்தையர்; காதலும் - இன்பமும் (காமமும்); கைத்திடுமே - கசந்திடும்;

கைக்கடங் காமணி வாள்விழி நூபுரக் காலவிர்கொங்
கைக்கடங் காமர் மொழியாள் மதனன் கணைக்குவின்ப
கைக்கடங் காமனம் காதலித் தாடனைக் காத்தருள்வா
கைக்கடங் காமரஞ் சேர்சோலை மாமலைக் காவலனே 23

*கைக்கடம்-கடகக் கரம்; கா-வலிய; மணி-அழகிய; வாள் விழி - கூரிய நோக்கம்; நூபுரக்கால் - சிலம்பணிந்த அடிகளும்; அவிர் - கச்சினைக் கிழிக்கும்; கொங்கைக் கடம் - கும்ப முலைகளும்; காமர் மொழியாள் - இனிய மொழிகளுமுடையாள்; மதனன் கணைக்கு - மன்மதன் பாணங்களுக்கு; இன்பகைக்கு - இனிய பகைக்கு; அடங்கா - கீழ்ப்படியாத; மனம் காதலித்தாள்தனை - உள்ளத்தில் காதல் கொண்டவளை; காத்தருள் - இரட்சித்தருளுக; வாகைதனைக் கடம் காமரஞ்சேர் - வாகை மரங்களும், கடம்ப மரங்களும் பொழிலிற் சேர்ந்த; சோலை மாமலை - திருமாலிருஞ்சோலை மலை; காவலனே - தலைவனே !*

வலம்புரி மாலை வரைத்தோண் மன்மாளும் வகையெதிர்ந்து
வலம்புரி மாலை வரையாண்ட சோலை மலையுறையும்
வலம்புரி மாலை வரையூது நாதனை வாழ்த்திலம்கே
வலம்புரி மாலை வரையாமெவ் வாறினி வாழ்வதுவே 24

*வலம்புரி - கனம் செய்யும்; மாலை - ஆரம்; வரைத் தோள்மன் - மலையனைய புயங்களில் பொருந்த; மாளும் வகை - ஆவி துறக்கும்படி; எதிர்ந்து - போரிட்டு; வலம்புரி மால் - வெற்றிதரும் திருமால்; ஐவரை - பஞ்சபாண்டவர்களை; ஆண்ட - ஆட்கொண்ட; சோலைமலை உறையும் - திருமாலிருஞ்சோலையில் கோயில் கொள்ளும்; வலம்புரி - பாஞ்சசன்னியம் என்ற சங்கினை; மாலைவரை - ஊது நாதனை - ஒலித்த இறைவனை; வாழ்த்திலம் - போற்றவில்லை; கேவலம்புரி - துன்பம் செய்யும்; மாலை வரை - இரவு வரை; யாம் - நாம்; எவ்வாறினி வாழ்வது - உய்வது எங்ஙனம்; ஏ - அசை.*

**வாரண மாய மகமாயை சூழ்வரு மாலொருகை**
**வாரண மாயவன் மாலிருஞ்சோலை மலையழகன்**
**வாரண மாய முதலையை மாய்த்தவன் வந்தெதிர்மே**
**வாரண மாயவை நேமிதொட் டான்கழல் வாழ்விக்குமே** 25

*வாரண மாய - கடல் போன்ற; மக மாயை - பெரு மயக்கம்; சூழ்வரும் - சுற்றி வரும்; ஆல் - அசை; ஒரு கை வாரணம் ஆயவன் - ஒரு கரத்தில் சங்கு தரித்தவன்; மாலிருஞ் சோலைமலை அழகன் - திருமாலிருஞ்சோலை மலையின னாம் சுந்தரராஜன்; வாரணம் - யானை; ஆய - ஆராய்ந்து விளிக்க; முதலையை - கசேந்திரனைப் பற்றிய கராவை; மாய்த்தவன் - கொன்றவன்; வந்து எதிர் மேவார் - எதிர் வந் தடையாதவர்களுக்கு; ரணமாய - போராய; வைநேமி - கூரிய சக்கராயுதம்; தொட்டான் - கரத்தேந்தியவன்; கழல் - திருவடிகள்; வாழ்விக்கும் - உய்வையளிக்கும்;*

**வாசவ னத்தனஞ் செய்வோன் மதியொளி மன்னியவெண்**
**வாசவ னத்தனல் வானவர்க் கீச்சுரன் மன்னியபொன்**
**வாசவ னத்தனம் மாலலங் காரன் மலர்வளம்சேர்**
**வாசவ னத்தன லுண்டான் அவன்என் மனத்துளனே** 26

*வாசவ நத்தனம் செய்வோன் - விரைவாக நர்த்தனம் செய்பவன்; மதிஒளி-சந்திர கிரகணம்; மன்னிய-பொருந்திய; வாசவன் - இந்திரனுடைய; அத்தன் - தலைவன்; நல்வான வர்க்கு - நலம்புரி தேவர்களுக்கு; ஈச்சுரன் - இறைவன்; மன் னிய - விளங்கிய; பொன்-திருமகள்; வாச - மார்பில் வசிக்கும்; வனத்தன்-அழகன்; அம்மால் அலங்காரன்-(யாரையும்) மயக் கும் சிறப்புடையவன்; மலர்வளம் சேர் வாச - பூக்களின் செழு மையும் மணமும் உள்ள; வாசவனத்து-காட்டில்; அனல் உண் டான் - தீயை உண்டவன்; அவன் - அத்திருமால்; என் மனத் துளனே - என் சிந்தையில் (எப்போதும்) உள்ளான்;*

**மனமாய மான வழிபோதல் மாற்றி மதியவர்நே**
**மனமாய மான வழியே நடந்துயர் மாதவவா**
**மனமாய மானவ மாலிருஞ்சோலைய வென்னவுட்க**
**மனமாய மானவர்க் கெட்டாப் பதவிகை வந்திடுமே** 27

மனம் - சிந்தை; மாயமான - தீமையான; வழிபோதல் - மார்க்கத்தில் செல்வதை; மாற்றி-ஒழித்து; மதியவர் - ஞானிகள்; நேமனமாய் - நியமித்ததாய; வழியே - நெறியிலேயே; நடந்து - ஒழுகி; உயர் - மேலான; மாதவ வாமன மாயமானவ - மாதவனே, வாமனனே, கிருஷ்ணன் என்ற பெருமையுடைய; மாலிருஞ்சோலைய - திருமாலிருஞ்சோலை வெற்ப; என்ன உட்க - என நினைக்க; மனமாய - கருத்துடைய; மானவர்க்கு - மனிதருக்கு; எட்டாப் பதவி - அடைய முடியாத நிலை; கைவந்திடும் - கைகூடும்;

**வந்தவ ராக வனமடை யார்வயின் மாமனத்து**
**வந்த வராக வனமணி மாலை மனோகரநி**
**வந்தவராக வனமலர்ச் சோலை மலையகண்சி**
**வந்தவ ராக வனமனை மாற்றுக வந்தமைந்தே** 28

வந்த - தன்பாலுற்ற; அராக - அவாவின்; வனம் - வழி; அடையார் வயின் - செல்லாதவர்பால்; மாமனத்து உவந்தவராக - பெருமைசேர் மனம் மகிழ்ந்தவராய்; வனமணி மாலை- துளசி மணியாரம் புனைந்த; மனோகரம் நிவந்தவ - எழில் சுமந்தவ; ராக வன மலர்ச் சோலை மலைய-சிவந்த நிறைந்த மலர்களுடைய திருமாலிருஞ்சோலை வெற்ப; கண் சிவந்தவ - செங்கண்ணுடைய; ராகவ - இராம; நமனை - யமனை; மாற்றுக - வராமற் செய்வாய்; வந்தமைந்தே - வந்திருந்தே;

**அமையா தவாவிடை மாறாத நெஞ்சனை யாண்டருள்வான்**
**அமையா தவாவிடை மாமலை மேவியவா வெவர்க்கும்**
**அமையா தவாவிடை மாதர்த மோகவ மோகசுகா**
**அமையா தவாவிடை மாதவற் காத்தருள் அற்புதனே** 29

அமையாது அவாவிடை மாறாத நெஞ்சனை - அடங்காத ஆசையிடையே நீங்காத மனமுடைய எளியேனை: ஆண்டருள் - ஆட்கொள்ளும்; வான் அமை - ஆகாசத்திற் பொருந்திய; ஆதவா - சூரியனே; விடை மாமலை - இடபமலை என்னும் சோலைமலையில்; மேவியவா - விளங்குபவனே; எவர்க்கும் - யாருக்கும்; அமையாதவா - ஒப்பற்றவனே; இடைமாதர்தம் மோகவ மோக சுகா-கோபியர்களின்

(ஆய்ச்சியர்களின்)விரும்பும் வேட்கை இன்ப; அமை யாதவா- ஆயர்குவத்தவ; விடை மாதவற் காத்தருள் - பரமசிவனை (இரத்தலினின்று) ரட்சித்தருளிய; அற்புதனே - அழகனே;

அற்பரவைக்க ணலையாது காத்தருள் வாய்மயிற்சாய்
அற்பரவைக்க ணலர்மங்கைநாத அரவெனும்பாய்
அற்பரவைக்க ணவிராழி யாயென் அழககுழல்
அற்பரவைக்கன்றுதூதுசென் றான்புக ழம்புயனே 30

அற்பர் அவைக்கண் - கீழ் மக்கள் கூட்டத்தில்; அலையாது - பொருள் வேண்டித் திரியாது; காத்தருள்வாய் - காப்பாற்றி அருள்க; மயிற்சாயற் பரவைக்கண் - மயிலனைய அழகும் விரிந்தகன்ற விழிகளுமுடைய; அலர்மங்கை - மலர்மகளாம் திருவின்; நாத - கணவ; அரவு எனும் பாயற் - பாம்பணையில்; பரவைக்கண் - பாற்கடலில்; அவிர் - ஒளிசெய்; ஆழியாய் - சக்கரமுடையோனே; என் அழக குழல் - எளியேன் கூந்தலழகப் பெருமானே; அற்பரவைக்கு - புல்லராம் துரியோதனாதியர் சபைக்கு; அன்று - பண்டு; தூது சென்றான்-பாண்டவர் தூதனாகச சென்றான்; புகழ் அம்புயனே - சீர்த்திமிக்க எழிற் தோள்களுடையவனே;

அம்பா லடையர விற்றுயில் வோன்முன் அசோதைதரும்
அம்பா லடையமு துண டான் அழகன் அவிர்தருமோர்
அம்பா லடையலர்ச் செற்றா னடியடை யாதவர்புல்
அம்பா லடையன் னமனால் நரகம் அழுந்துவரே. 31

அம்பால் அடை அரவில் - பாற்கடலில் ஆதிசேடன் மீது; துயில்வோன் - யோக நித்திரை புரிபவன்; முன் - பண்டு; அசோதைதரு - யசோதை அளிக்கும்; அம்-அழகிய; பாலடையமுது உண்டான்-பாற்சோறு புசித்தான்; அழகன்-சௌந்தரராஜன்; அவிர் தரும் ஓர் அம்பால்-ஒளி செய்யும் ஒரே கணையால்; அடையலர்ச் செற்றான் - பகைவர்களை வதைத்தவன்; அடி அடையாதவர் - திருவடிகளிற் சாராதவர்கள்; புலம்பால் அடையன் - அறிவிடைச் சேரான்; நமனால் - யமனால்; நரகம் அழுந்துவரே - பாப லோகத்தில் மூழ்குவார்களே;

**துவரைக்கும் நங்க ளடியார்க்குஞ் சோலை சுரும்பெனுமு**
**துவரைக்கும் நம்பனை மாலலங்காரனைத் தோன்றரும்பொ**
**துவரைக்கும் தன்னன னாவானை வாசத் துளவனையி**
**துவரைக்குநம் நண்புறச் சொல்லா திருந்ததென்**
**சொன்னெஞ்சமே** 32

*துவரைக்கும் - துவாரகைப் பதிக்கும்; நங்கள் அடியார்க்கும் - நம் தாசர்களுக்கும்; சோலைச்சுரும்பெனும் முதுவரைக்கும் - சோலை மலை என்னும் பழமையான வெற்புக்கும்; நம்பனை - இறைவனை; மால் அலங்காரனை - அழகர் பெருமாளை; தோன்றரும் - அரிய பெருமையிற் சிறந்த; பொதுவர் ஐக்கும் - ஆயர் குலத்தரசனுக்கு மட்டும்; தன்னனன் ஆவானை - தன் போன்றாவானை; வாசத்துளவனை - மணங்கமழ் துளசி மாலையினனை; இதுவரைக்கும் - இப்பொழுது வரை; நண்புற - நேயம் அடைய; சொல்லாதிருந்ததென் சொல் - கூறாதிருந்தது ஏன் என்று கூறுக; நெஞ்சமே - மனமே;*

**சமையமை யாதறச் சார்பொழு காது தருக்கியறு**
**சமையமை யார்ந்து கவிபாடி ஈனரைச் சார்ந்திதுவே**
**சமையமை யாவெனச் சாற்றுவி ராவிக்குத் தான்வருமோ**
**சமையமை யார்பொழில் மாமலையாயுன் சரணென்மினே** 33

*சமை அமையாது - சேர்தல் பொருந்தாமல்; அறச்சார்பு ஒழுகாது - தருமத்தில் சேர்ந்தியங்காது; தருக்கி - ஆணவம் கொண்டு; அறுசமையம் - ஆறு சமயங்களில்; மை ஆர்ந்து - குற்றங்களில் படிந்து; கவி பாடி - பாக்கள் இசைத்து; ஈனரைச் சார்ந்து-இழிந்தவர்களை அடைந்து; இதுவே சமையம் ஐயா என - இதுவே தருணம் தலைவ என்று; சாற்றுவீர் - கூறுவீர்கள்; ஆவிக்குத்தான் வரும் மோசம் - பிராணனுக்கு ஆபத்து வந்து சேரும்; மையம்மை ஆர் - நடுவே மேகம் தவழ்; பொழில் மாமலையாய் - சோலை மாமலை அழகா; உன் சரண் என்மினே - உன்பால் அடைக்கலம் எனப் புகலுவீரே;*

**சரத்தினஞ் சாம லெதிர்ந்தாரை வீட்டுஞ் சராசனர் தே**
**சரத்தினஞ் சார்தரு மாராம வெற்பெனுந் தாரகவா**
**சரத்தினஞ் சாதிமுதலே யெனவளித் தாரரிவர**
**சரத்தினஞ் சாற்றல் தவிர்த்தான் புராரி சரண்புகுந்தே** 34

*சரத்தின் - அம்புகளால்; அஞ்சாமல் - பயமின்றி; எதிர்ந் தாரை - பகைவர்களை; வீட்டும் - வீழ்த்தும்; சராசனர் - வில்லினைக் கொண்டவர்; தேச ரத்தினம் சார்தரும் - ஒளி சேர் நவமணிகள் சார்ந்த; ஆராம வெற்பெனும் - சோலை மலை என்னும்; தாரக வாசர் - 'ராம' என்ற மந்திரத்துள் இருப்பவர்; அத்தி - யானை; நஞ்சு - நைந்து (வருந்தி); ஆதி முதலே என - ஆதிமூலமே என்றழைக்க; அளித்தார் - புரந் தார்; அரி ஆசரத்தின் - திருமால் வழிபாட்டால்; நஞ்சாற் றல் - விஷத்தின் கொடுமை; தவிர்த்தான் - நீக்கினன்; புராரி சரண் புகுந்தே - புரம் எரித்த சிவன் அடைக்கலம் புக்கு;*

**தவராக வாமலர்த் தென்சோலை மாமலைத் தாரகவா**
**தவராக வாமணித் தாமா வியூகவ தாரசுவே**
**தவராக வாமன என்றோதி வஞ்சகத் தன்மை எண்ணா**
**தவராக வாமறச் சஞ்சலந் தீரத் தயவுசெய்தே** 35

*தவராகவா - அழகு மிகுந்த இராகவனே; மலர்த் தென் - அழகிய மலர்கள் உள்ள; சோலை மாமலை - பெரிய சோலை மலையில்; தாரக - காக்கும் கடவுளாம் கண்ண; ஆதவ ராகவா - சூரியகுல இராமனே; மணித் தாமா - நவரத்தின மாலை பூண்டவா; வியூகவதார - மனித னாக அவதரித்தவ; சுவேத வராக - பாத்ம கற்ப முடிவில் ஜலத்தில் ஆழ்ந்த பூமியை எடுக்க வெண் பன்றியாக வந்தவ; வாமன - மகாபலியிடம் மூவடி மண் வேண்டிக் குறுகிய வடி வில் வந்தவ; என்று ஓதி - என்று கூறி; வஞ்சகத் தன்மை-(எளி யேனின்) கபடத் தன்மையை; எண்ணாதவராக - கருதாத வனே; மற - தீய; சஞ்சலந் தீர தயவு செய்தே-கிருபையோடு கலக்கந் தீர; வா - வந்தருள்;*

செய்ய வனங்ககம் சேரும்தென் கூடற் சிலம்பமர்வோன்
செய்ய வனங்கண்மைக் கண்ணார் நடம்பயில் தென்னரங்கச்
செய்ய வனங்கள் பெருமாளைச் சிந்தனை செய்துதுதி
செய்ய வனங்கன்அம் பெய்யானம் முத்தியும் சித்திக்குமே 36

செய்யவன் - சூரியன்; அங்கு - அங்கே; அகம் சேரும் - தாழ்ந்து உள்ளே செல்லும்; தென்கூடற் சிலம்பமர்வோன் - அழகிய கூடல் மலையில் வீற்றிருப்பவன்; செய்ய வனம் கண் - சிறப்பான பொழிலிடத்து; மைக் கண்ணார் நடம்பயில் - மை தீற்றிய விழியினர் நிருத்தம் பழகும்; தென் அரங்கச் செய்யவன் - எழிலார் திருவரங்கத்து அழகனாம்; நங்கள் பெருமாளை - நம் திருமாலை; சிந்தனை செய்து துதிசெய்ய - மனத்தில் நினைந்து போற்றவும்; அனங்கன் - மன்மதன்; அம்பெய்யான் - மலர்க் கணைகளை ஏவமாட்டான்; அம்முத்தியும் - அந்த மோட்சமும்; சித்திக்கும் - கைகூடும்; ஏ-அசை;

சித்தலங் காரத் தெரிசனத் தேவருஞ் சேவைசெய் கா
சித்தலங் காரமர் பன்மலை சென்று தினமவண் வ
சித்தலங் காரப் பயன்தரு மென்னல்வி சித்திர நே
சித்தலங் காரனை பெண்ணாம லெண்ணித் திரிநெஞ்சமே 37

நேசித்து - நண்புடன் (பக்தியுடன்); அலங்காரனை - அழகர் பெருமாளை; எண்ணாமல் - நினையாமல்; எண்ணி - வேறுபல நினைந்து; திரி நெஞ்சமே - அலையும் மனமே; சித்து அலங்காரத் தெரிசனத் தேவரும் - மாயவித்தைச் சிறப்பால் காட்சி தரு வானவர்களும்; சேவை செய் - தொண்டாற்றும்; காசித்தலம் - ஸ்ரீ காசி நகரம்; காரமர் பன்மலை - மேகம் தவழும் மலைகளும்; சென்று - போய்; தினம்-நாளும்; அவண் வசித்து - அங்கு உறைந்து; அலங்காரப் பயன் தரும் என்னல் - கலைஞானத்தின் பயனை அளிக்கும் என்பது; விசித்திரம் - வேடிக்கையாகும்.

திரியா ரளியம் பகந்தரு மாயச் செயன்மயங்கி
திரியா ரளியிற் சிறப்பார் பிறர்க்கிதஞ் செய்வர் கராத்
திரியா ரளிப்பவ ரென்னவந் தாண்டவர் சென்னிகர் மா
திரியா ரளிமலர்த் தென்சோலை மாமலைச் சேவகரே 38

திரியார் - மகளிர்; அளி - அம்பனைய; அம்பகந்தரு - விழிகள் அளிக்கும்; மாயச் செயல் - வஞ்சகச் செயல்களில்; மயங்கி - கலங்கி; திரியார் - அலையார்கள்; அளியிற் சிறப்பார் - அன்பில் மேன்மை எய்துவார்; பிறர்க்கு இதம் செய்வர் - மற்றவர்களுக்கு நன்மை புரிவார்; கராத்திரியார் - கையுடைய மலையாம் கசேந்திரனை; அளிப்பவர் என்ன - காப்பாற்றுபவர் எனும்படி; வந்து - விரைந்து வந்து; ஆண்டவர் - ஆட்கொண்டவர்; செல்நிகர் மாதிரியார் - மேகம் ஒத்த நிறமும் பயனும் போன்றவர்; அளிமலர்த் தென்சோலை மாமலை - தேன்மலர் கூடிய அழகிய திருமாலிருஞ்சோலை மலை; சேவகரே - வீரம்மிக்க அழகர் பெருமாளே;

**சேவையங் காத்தலை யானயன் தேவர் தினமுநின்றன்**
**சேவையங் காத்தலை யாவறி யாரெனிற் றென்மலைமஞ்**
**சேவையங் காத்தலை யாளுடை யாய்மலர்ச் செல்வியர**
**சேவையங் காத்தலை யானநின் சீரெவர் செப்புவரே** 39

சேவை அங்காத் தலையான் - இடபத்தை வாகனமாக உடைய சிவன்; அயன் - பிரமன்; தேவர் - வானவர்கள்; தினமும் - நாளும்; நின்றன் - உன்றன்: சேவை - தரிசனத்தை; அங்காத்தல் - வாய் திறந்து காத்திருத்தல்; ஐயா - தலைவா; அறியார் எனில் - அறியாதவர்களாயின்; தென்மலை - அழகிய வெற்பாம், சோலைமலை; மஞ்சு ஏவையும் காத்தலை - மேகம் எல்லாவற்றையும் புரத்தலை; ஆளுடையாய் - புரிபவனே; மலர்ச் செல்வி அரசே - மலர்மகள் திருவின்நாயக; வையங்காத்தலையான - பூமியைப் புரத்தலான; நின்சீர் - உன் புகழ்; எவர் செப்புவரே - யாரே கூறுவார்;

**புவனங் கடந்தவன் கோபால ராடல் புரிந்தவனெண்**
**புவனங் கடந்தவன் கோங்கில வங்கம் புரியவிழ் வம்**
**புவனங் கடந்தவழ் மாலிருஞ் சோலைப் புயலினைநம்**
**புவனங் கடந்தவன் பொல்லா மறலி புகும்பொழுதே** 40

புவனம்கள் தந்தவன் - உலகங்களை அளித்தவன்; கோபாலர் ஆடல் புரிந்தவன் - ஆயர்களுடன் விளையாடல் செய்தவன்; எண்புவனங் கடந்தவன் - எண்ணற்ற உலகங்களைக்

*சடந்தவன்; கோங்கு இலவங்கம் - கோங்கும் கிராம்பும்; புரியவிழ் வம்பு - மணம் விரிதல் புரியும்; வனங்கள் - சோலைகள்; நவழ் - விளங்குகின்ற; மாலிருஞ்சோலைப் புயலை - திருமாலிருஞ்சோலை மேகமனையானை; நம்புவன் - விசுவாசிப்பேன்; அங்கு - அங்கே; அடந்த - பொருத; வன்பொல்லா - மிகக் கொடிய; மறலி - யமன்; புகும்பொழுதே - வரும் போதிலே;*

**தேசிக மாதவன் போற்றலங் காரன் செழுந்துகிலாந்**
**தேசிக மாதவன் செங்கனி வாய்மலர்ச்செல்விஎனும்**
**தேசிக மாதவள் சேர்தரு மார்பன் செழுமணிஒண்**
**தேசிக மாதவ னேர்முடி யான்கழல் சேவிப்பனே** 41

*தேசிக மாதவன் போற்று அலங்காரன் - வேதாந்த தேசிகப் பெருந்தவன் துதிக்கும் அழகன்; செழுந்துகிலாம் தேசிக மாதவன் - பீதாம்பர ஆடை புனைந்த அழகான மாதவப் பெயரான்; செங்கனி வாய் - கொவ்வைக் கனியனைய வாயுடைய; மலர்ச் செல்வி - மலர்மகள்; எனும் - என்று கூறும்; தேசிக மாதவள் - பொன் எனும் மங்கை; சேர்தரு - மார்பில் உறையும்; மாயவன் - கருநிற மால்; செழுமணி ஒள் தேசிகம் - சிறந்த மணிகளின் ஒளி; ஆதவன் - சூரியன்; நேர் - ஒத்த; மணிமுடியான் - மணிமகுடம் புனைந்தவன்; கழல் - திருவடிகளை; சேவிப்பன் - வணங்குவன்; ஏ - அசை;*

**பனைத்தா ரணியும் பலற்கிளை யோனைப் பராவருநம்**
**பனைத்தா ரணிகர மேற்றானைப் பங்கயப் பந்துரநாப்**
**பனைத்தா ரணிபொழில் மாலலங் காரனைப் பத்தர்கள்நண்**
**பனைத்தா ரகப்பொரு ளாவானைப் பாடுநும் பண்புறவே** 42

*பனைத்தார் அணியும் பலற்கு -பனம்பூ மாலை சூடிய பலராமனுக்கு; இளையோனை -தம்பியை; பராவரும் நம்பனை- வணங்கற்குரிய தலைவனை; தாரணி கரம் ஏற்றானை - பூமிதேவியை மணந்தவனை; பங்கயப் பந்துஉர-தாமரை மலரில் அழகுற வீற்றிருக்கும்; நாபனை - பத்மநாபனை; தார் அணி பொழில் - மலர் எழில் கூட்டும் சோலையின்; மால் அலங்காரனை - அழகர் பெருமாளை; பத்தர்கள் நண்பனை - அடி*

*யார்களுக்கு நேயனை; தாரகப் பொருள் ஆவானை - பிரணவத்தின் பொருள் ஆயவனை; பண்புறவே பாடுதும் - தக்கவிதம் துதிப்போம்.*

**புறவா சகலத் துலையேறி னான்குலம் போந்தமுல்லைப்**
**புறவா சகல புவனமு மெண்ணெய் புரைய உள்ளம்**
**புறவாச கந்தப் பொழின்மலை யாயெனப் போற்றகிலீர்**
**புறவா சகத்தைப் புகல்வீர் பயன்என புவியினரே** 43

*புறவு - புறாப் பறவையின்; ஆசு அகல - துன்பம் நீங்க; துலை ஏறினான் - தராசில் ஏறிய சிபி மன்னவன்; குலம் போந்த - வமிசத்தில் வந்த; முலலைப் புறவா - முல்லை நிலந்தவா; சகல புவனமும்-அனைத்துலகமும்; எண்ணெய் புரைய- எண்ணெய் ஒப்ப; உள்ளம் புறம் - உள்ளும் வெளியும்; வாச கந்த - நறுமணம் சேர்; பொழில் மலையா என - சோலை மலையனே என்று; போற்றகிலீர் - போற்றுதல் (துதித்தல்) புரியீர்; புற வாசகத்தைப் புகல்வீர் - வேறு வீண் சொற்களைக் கூறுகின்றீர்; புவியினரே பயன் என் - மனிதர்களே இதனால் யாது பலன்;*

**வியப்பா வலந்தர விண்ணோர்க் கருள்பொழில் வெற்பவென்னா**
**வியப்பா வலந்தரும் விற்கரத் தாய்மதி விற்பனகா**
**வியப்பா வலர்தம் பெருமா தினகரன் விண்கனல்பு**
**வியப்பா வலம்புரி ஐவர்தம் காமம் விலக்குவையே** 44

*வியப்பா - அதிசயமாக; வல் - வலிய; அந்தர விண்ணோர்க்கு - தேவர்களுக்கு; அருள்-அனுக்கிரகம்புரி; பொழில் வெற்ப - சோலை மலைய; என் ஆவி அப்பா - என் பிராணநாதா; வலம் தரும் - நன்மை புரியும்; விற்கரத்தாய் - தனுவைக் கைக்கொண்டவ; மதி விற்பன - அறிஞர்கள்; காவியப் பாவலர்தம் - காவியம்புனை கவிஞர்களின்; பெருமா - தலைவா; தினகரன் - சூரியன்; விண் - வான்; கனல் - தீ; புவி - மண்; அப்புஆ - நீராயவ; அலம்புரி - துன்பம் செய்யும்; ஐவர் தம் காமம் - பஞ்சேந்திரியங்களின் வேட்கை; விலக்குவையே- தவிர்த்தருளுக;*

குவளைக்கு மாகங் குலாய்வரு கங்குற்குங் கொண்டலுக்கும்
குவளைக்கு மாழிக்கு நேரலங் கார வெண்கூறுறுசங்
குவளைக்கு மாரவிக் கொம்பனை யாளெழிற் கோதைகலைக்
குவளைக்கு மாதரங் கொண்டாயிஃ தென்னமெய்க்
கோலங்களே 45

குவளைக்கும் - பூமியை வளைக்கும்; மாகம் குலாய் வரு கங்குற்கும் - வான்வெளியில் தவழும் இருளுக்கும்; கொண்டலுக்கும் - மேகத்துக்கும்; குவளைக்கும் - நீலமலருக்கும்; ஆழிக்கும் - கடலுக்கும்; நேர் - ஒத்த; அலங்கார-அழக;வெண் கூறு உறு-வெண்மையான தன்மைகொண்ட; சங்குவளைக் குமார - வலப்புறம் வளைநத சங்கேந்திய இளைஞ; இக்கொம்பனை - யாள் - இக் கொடி போன்றவள்; எழில்கோதை- அழகிய கூந்தலினாள்; கலைக்கு வளைக்கும்-ஆடைக்கும் கை வளைக்கும்; ஆதரம் கொண்டாய் - ஆசை கொண்டனை; இஃதென்ன மெய்க் கோலங்களே - இது என்ன உணமையான வேடங்கள்;

கோலஞ் சிவந்தரு மீனாமை யாகிய கொற்றவவெங்
கோலஞ்சி வந்தவர்க் காத்தாய் தென்சோலைக்
குளிர்வரையாய்
கோலஞ் சிவந்த மலர்வாய் மலர்மகள் கொண்கமதன்
கோலஞ் சிவந்தகன் போலாக மார்பு குளித்தனவே 46

கோலம் சிவம் தரும் - உயர்வான வேஷம் அளிக்கும்; மீன் ஆமையாகிய - மச்சம் கூர்மட் ஆய; கொற்றவ - வேந்தனே; வெங்கோல் அஞ்சி - கொடுங்கோலுக்குப் பயந்து; வந்தவர்க் காத்தாய் -அடைக்கலமாக வந்தவர்களை ரட்சித்தாய்: தென் சோலை குளிர்வரையாய் - அழகிய குளிர்ந்த சோலை மலையவ; கோலம் சிவந்த - சிவப்பான வடிவுடைய; மலர் வாய் - கொவ்வை மலரனைய வாயுடைய; மலர்மகள் - தாமரைச் செல்வி திருவின்; கொண்க - நாயக; மதன் - காமன்; கோல் அஞ்சி - பஞ்சபாணங்களும்; அந்தகன் போலாக - யமன் போல; மார்பு குளித்தன -நெஞ்சில் தைத்தன; ஏ - அசை;

தனையா தரஞ்செயு மன்பர்க்கு வேண்டுவ தந்தருள்வே
தனையா தரங்கந்துயி லலங்கார தசரதன்றன்
தனையா தரந்தகை மாறாத தன்னியங் தனியநின்றா
தனையா தரந்தை தவிர்த்தாளு வாய்கூதி தந்தளித்தே 47

தனை - தன்னை; ஆதரஞ் செயும் -அன்பு செய்யும்; அன்பர்க்கு - தொண்டர்களுக்கு; வேண்டுவ தந்தருள - அவர்கள் கேட்பதை அளித்தருளும்; வேதன் ஐயா- பிரமன் தந்தையே; தரங்கம் துயில் - அலைகடலில் அறிதுயில் புரியும்; அலங்கார- அழகா; தசரதன்தன் - தசரத மன்னன்; தனையா - திரு மகனே (தாசரதி); தரம்தகை மாறாத - வலிமையும் தன்மை யும் எப்போதும் மாறுபடாத; தனனியநலிய - தனி முதலே; நின்றாதன் - உன் அடியான்: நையாது-வருந்தாமல்; அரந்தை தவிர்த்து - துன்பம் நீக்கி; ஆளுவாய் - ஆண்டருள்வாய்; கதி தந்தளித்தே - அடைக்கலம் கொடுத்து அருள் செய்தே;

**தந்த வரைக்கருண் மாலலங் காரரைத் தந்தநெறி**
**தந்த வரைக்கழை வாயூதுங் கோவலர் தங்களிடைத்**
**தந்தவ வரைக்கலந் தாரைவெண் கங்கைச் சடைமுடியர்**
**தந்தவ வரைக்கரத் தேற்றொசித் தாரைத்**
**தலைக்கொள்வனே** 48

தந்தவரைக்கு - யானைக்கு; அருள் - காத்தருள் செய்த. மால் அலங்காரரை - அழகர் பெருமாளை; தமதம் நெறி - தங்கள் தங்கள் வழியை; தந்தவரை - அளித்தவரை; கழை - குழலை; வாயூதும் - வாயினால் ஊதி ஒலிக்கும; கோவலர - ஆயர்கள்; இடை - கூட்டத்தில்; தந்தவரை - பெற்றவரை; கலந்தாரை - சேர்ந்தவரை; வெண்கங்கை - வெண்மையான தூய கங்கா நதி; சடைமுடியர்தம் -சடாமுடி தரித்த சிவனார் தமது; தவரை - வில்லை; கரத்தேற்று - கையிலெடுத்து; ஒசித் தாரை - ஒடித்தவரை; தலைக்கொள்வனே - சிரத்து ஏற்றுக் கொள்ளுவேன்; ஏ - அசை;

**தலைவரை யானன னாதியர் போற்றுந் தகையெனுமு**
**தலைவரை யாண்டருள் மாலலங்காரன் டடந்தருங்காத்**
**தலைவரை யானளை வெண்தயிர் பாலிவை தான்கவர்ம**
**தலை வரையாது தருவான் விரும்புந், தனிப்பொருளே** 49

தலைவர் ஐயானன் ஆதியர் போற்றும் - சிவன் முதலி யோர் துதிக்கும் முதல்வன்; தகை எனும் முதல் - மேலானவர்களான; ஐவரை - பஞ்பாண்டவர்களை;

ஆண்டு அருள் - ஆட்கொண்டருளிய; மால் அலங்காரன் - அழகர் பெருமாள்; தடந்தருங் காத்தலை வரையான் - விசாலமான சோலை முற்படும் மலையான் (சோலை மலையான்); அளை - வெண்ணெய்; வெண் தயிர் - வெண்மையான தயிர்; பால் இவைதான் - பால் இவற்றையேதான்; கவர் - திருடும்; மதலை - சிறுபிள்ளை; வரையாது - எல்லையின்றி; தருவான் - அளிப்பான்; விரும்பும் தனிப் பொருள் - வேட்ட ஒப்பற்ற பொருள்; ஏ - அசை;

**தனித்தவ மாற்ற வனத்தேகி ஐவரைத் தானடக்கித்**
**தனித்தவ மாற்ற வகையறி யாது தளர்வொடுவி**
**தனித்தவ மாற்ற மெவனா மஞ்சன்மின் தகையொடுமெத்**
**தனித்தவ மாற்றல் தருஞ்சோலை மாமலைத் தாரகனே** 50

தனித்தவம் ஆற்ற - ஒப்பற்ற தவம் புரிய; வனத்தேகி - காடு சென்று; ஐவரை - பஞ்சேந்திரியங்களை; தான் அடக்கி - தானே அடங்கச் செய்து; தனித்து - தனியாக; அவம்மாற்ற - வீணானவை ஒழிக்க; வகைறியாது - வழி தெரியாமல்; தளர்வொடு - சோர்வுடன்; விதனித்து - வருந்தி; தவ - மிக; மாற்றம் - மாறுதலடைதல்; எவனாம் - என்ன ஆகும்; அஞ்சன்மின் - பயப்படாதீர்; தகையொடு - நல்ல தகுதியுடன்; எத்தனித்து - முயன்று; தவம் - புண்ணியமும்; ஆற்றல் - வலிமையும்; தரும் - அருளும்; சோலை மாமலை - மாலிருஞ்சோலைமலை; தாரகனே - கண்ணனே;

**தாரா தரங்கவி மாலிருஞ் சோலைத் தலைவகுல்லைத்**
**தாரா தரங்கப் புவியாதி யண்டச ராசரவா**
**தாரா தரங்கக் கரியளித் தாயெனத் தோன்றுதியா**
**தாரா தரங்கவ ரன்றேம நரகிடைச் சார்பவமே** 51

தாராதரம் - பல வகை நட்சத்திரங்கள்; கவி - வளைந்து சூழும்; மாலிருஞ்சோலைத் தலைவ - திருமாலிருஞ்சோலை நாயக; குல்லைத் தாரா - துளவ மாலை புனைந்தவ; தரங்கப் புவியாதி - கடல்சூழ் பூமி முதலாய; அண்ட சராசர - உலகங்களில் நிற்பன நடப்பனவற்றின்; ஆதாரா - மூலமே; தரங்கக் கரியளித்தாய் என - கலக்கமுற்ற யானையைக் காத்தவ

*என்று; தான் துதியாதார் - தம்மைத் துதியாதவர்; ஆதர் - அறிவற்றவர்; அங்கு - அங்கே; அவரன்றோ - அவர்களல்லவா; நரகிடை - நரகத்திடை; சார்பவரே - அடைபவராவார்கள்;*

**பவந்தனை மாற்றவுன் பாதர விந்தம் பணியும்விருப்**
**பவந்தனை மாலுளம் பற்றியோ ணீலப் பரவைநிகர்ப்**
**பவந்தனை மானப் பரிப்பாய் தென்சோலைப் பணிவரையாய்**
**பவந்தனை மாமறை தந்தானைத் தந்த பரம்பொருளே** 52

*பவந்தனை மாற்ற - பிறப்பை ஒழிக்க; உன் பாதாரவிந்தம் - உன் மலர்த் திருவடிகள்; பணியும் - வணங்கும்; விருப்பு - வேட்கையான; வந்தனை - துதித்தலை; மால் உளம் பற்றியோன் - பெருமைசேர் மனத்து இறுகப் பற்றியவள்; நீலப் பரவை நிகர் - நீலக் கடல் ஒத்த; பவந்தனை - பாவங்களை; மான - பெருந்தன்மையுடையாய்; பரிப்பாய் - காப்பாய்; தென் - அழகிய; சோலைப் பணிவரையாய்-குளிர்ந்த சோலை மலைய; பவந்தனை - முன்பே; மாமறை தந்தானை - வேதங்களளித்த பிரமனை; தந்த - பெற்றருளிய; பரம்பொருளே - ஆதிமூலமே;*

**பரவாத வாதர் பகருந்துன் மார்க்கப் பவமுலகிற்**
**பரவாத வாவுறும் பாடிய மீந்தருள் பண்ணும்பிரான்**
**பரவாத வாதிரு மாலிருஞ் சோலைப் பரகருணாம்**
**பரவாத வாநலம் பற்றி மெஞ்ஞானப் பலன்றரவே**

*பரவாத ஆதர் - மாயா வாதம் புரியும் அறிவிலிகள்; பகரும் - கூறும்; துன்மார்க்க - புன்னெறியாம்; பவம் - பாவங்கள்; உலகில் - பூமியில்; பரவாதவா - பரவாவிதம்; உறும் - உற்ற; பாடியம் - பிரம்ம சூத்திர வியாக்யானம்; ஈய்ந்தருள் - தந்தருளினை; பண்ணும் - செய்த; பிரான் - இராமாநுசர்; பரவு - வணங்கும்; ஆதவா - சூரியனே; திருமாலிருஞ் சோலைப்பர - சோலைமலை இறைவ; கருணாம்பர - தயாசாகர; தவாநலம் பற்றி - குறைவுபடாத நன்மை கைகூடி; மெய்ஞானப் பலன் தரவே - மெய்யறிவின் பலனை யருளவே; வா - வந்தருள்க;*

தரவா கனஞ்செய்ய தாமரை பூத்தலந் தானிகர்சு
தரவா கனம்பு ளரசாகு நாத தடம்பொழிற்பூ
தரவா கன ஞ்சிகி யானேறு வார்புகழ் தாரகசீ
தரவா கன முற வாங்கும்வில் வீர தனிவரமே 54

*தரவா - உற்ற தருணமாக; கனம் - பருத்த; செய்ய - சிவந்த (தாமரை); பூத்தலர்ந்தாள் - மலரனைய பூவுலகந் தான்; நிகர் - ஒத்த; சுதர வாகனம் - நல்ல தரமான வாகனம்; புளரசு ஆகும் - கருடனாகும்; நாத - இறைவ; தடம் பொழிற் பூதர - அகன்ற சோலை மலைய; ஆகு - பெருச் சாளி; அனம் - அன்னப் பறவை; சிகி - மயில்; ஆன் - எருது; ஏறுவார் - சவாரி செய்பவர்கள் (விநாயகன், பிரமன், முருகன், சிவன்); புகழ் - போற்றும்; தாரக - கண்ண; சீதர - திருவை மார்பில் தரித்தவ; கனம் உற - பெருமை அடையும் வண்ணம்; வாங்கும வில வீர - வில்லை 'வளைக்கும் வீரனே; தனி வரமே - ஒப்பற்ற சீர்மையனே; வா - வந்தருள்;*

வரவர வான வணையான்தென் சோலை மலைமு தன்மேல்
வரவர வாதரஞ் செய்மன மேபுன்மை வாய்தருதே
வரவர வாவின் படிதரு மீன வரமொருதா
வரவர வாவிஃ தெழுதாக கிளவி மறைவழக்கே 55

*வர அரவு ஆன அணையான் - மேன்மையான சேட சயனத்தான்; தென் சோலைமலை - அழகிய சோலை வெற்பின், முதல் - தலைவர்; மேல் வர வர - மேன்மை மிகுந்து வர; ஆதரஞ்செய் மனமே - நெஞ்சமே அன்பு செய்; புன்மை வாய் தரு - சிறுமை வாய்ந்த; தேவர் - வானவர்; அவர் அவாவின் - அவர்கள் விருப்பின்; படிதரும் - ஏற்றவை அளிக்கும்; ஈன வரம் ஒரு தா வர - புன்மை வரம் ஒருமிகக வரும்; வரவா - வரவாகும்; இஃது-இது; எழுதாக் கிளவி மறை வழக்கே - வரி வடிவம் பெறாச் சுருதி வழக்கமாகும்;*

மறைவாச னாதிதென் மாலிருஞ் சோலை மலையனெனல்
மறைவாச னாதிக மாற்றம் பொய்யாதும மாற்றம்எதிர்
மதைவாச னாதி ரவியத்தின் பண்பினை மாற்றுவரார்
மறைவாச னாதிவன் மாயா வசத்துரு வாதியரே 56

மறைவாசன் - வேதங்கள் உறைகின்ற; ஆதி தென் மாலிருஞ்சோலை மலையன் - மிகப் பழைய திருமாலிருஞ் சோலை வெற்பன்; எனல் - என்பது; மறைவாசன் - பிரம னின்; ஆதிகமாற்றம் - அதிக உரை; பொய்யாது - பொய்த் துப் போகாது; அம்மாற்றம் - அவ்வுரை; எதிர்மறை - மாற்று அலங்காரச் சொல்லாம்; வாசனா திரவியத்தின் பண்பினை - வாசனைப் பொருட்களின் குணங்களை; மாற்றுவர் ஆர் - யாரே மாற்ற முடியும்; மறை வாசனாதி - மறைந்துள்ள அஞ் ஞானம் முதலிய; வன் - வலிய; மாயாவசத்து - மாயைவயப் பட்ட; வாதியரே - வாதம் புரிபவர்களே;

துருவா சகத்துக் கதிபதி நீஎனச் சொற்றவன்மா
துருவா சகபரி பாலனன் சோலைச் சுரும்பமர்வோன்
துருவா சகன விருடிவந் தேத்தும் துவரையனந்
துருவா சகல வருவான் பரம சுகந்தரவே 57

துருவா - துருவனே; சகத்துக்கு - உலகிற்கு; அதிபதி நீ என - நீயே தலைவன் என்று; சொற்றவன் - கூறியவன்; மாதுரு வாசக பரிபாலனன் - தாயுரையைக் காத்தவன்; சோலைச் சுரும்பு - சோலைமலையில்; அமர்வோன் - வீற் றருளுவோன்; துருவாச - துர்வாசன் என்ற; கன இருடி - பெரிய மகரிஷி; வந்தேத்தும் - வந்து துதிக்கும்; துவரையன் - துவாரகை நகரான்; நந்துரு - வளர்ந்து வரும்; ஆசு அகல - குற்றம் நீங்க; பரம சுகந்தரவே - பேரின்பம் அருளவே; வரு வான் - முன் வருவான்; (நந்துறு என்பது எதுகைக்காக நந்துரு வாயிற்று)

சுகமா முனிக்கருள் செய்தா மரங்கள் துளைத்திடுமா
சுகமா முனியைத் தரித்தான் சனகன் சுதையெனுமஞ்
சுகமா முனின்றரு மாலலங் காரன் துதிபரம
சுகமா முனியிது வன்றோ சுருதியுஞ் சொல்வதுவே 58

சுகமாமுனிக்கு அருள் செய்து - சுகப்ரம்ம மகரிஷிக்கு அருள் பாலித்து; ஆ மரங்கள் - அவ்வேழு மராமரங்களை; துளைத்திடும் - ஊடுருவும்; ஆசுக - அம்பு தொடுத்த;

மாமுனியை - பொருவில்லை; தரித்தான் - தாங்கினான்; சனகன் சுதை எனும் - சனகன் மகள் சானகி என்ற; அஞ்சுக மாமுன் - கிளியாம் திருமுன்; நின்ற - நின்ற அரிய; மால் அலங்காரன் - அழகர் பெருமாளின்; துதி - தோத்திரம்; பரம சுகமாம் - பேரின்பமாகும்; உனி - நினைந்து; சுருதியும் - வேதங்களும்; இதுவன்றோ - இதையல்லவா; சொல்வது - கூறுகின்றன; ஏ - அசை;

**வேதனைத் தந்திரி வீணையி னூதுந்தென் வெற்பினன்சி**
**வேதனைத் தந்திரத் தட்டான்மெய் வீடுமண் மேலன்பினான்**
**வேதனைத் தந்திவ் வுலகளந் தான்வலி மேவிடங்கர்**
**வேதனைத் தந்தியைக் காத்தானெங் கெங்கும் வியாபகனே 59**

வேதனை - மூங்கில்களை; தந்திரி வீணையில் ஊதும் - யாழ் நரம்புகள் போல ஒலிக்கும்; தென்வெற்பினன் - அழகர் மலையான்; சிவேதனை - விதர்ப்பனை; தந்திரத்து - தந்திரமாக; அட்டான் - கொன்றான்; மெய் - உண்மையுள்ள; வீடுமன் மேல் - பீஷ்மாசாரியன் மீது; அன்பினான் - அன்பு கொண்டவன்; வேதனைத் தந்து - பிரமனைப் படைத்து; இவ்வுலகளந்தான் - அவன் படைத்த உலகை அடியாலளந்தான்; வலிமேவு - வலிமை வாய்ந்த; இடங்கர் - முதலையினால் ஏற்பட்ட; வேதனை - துன்பமுற்ற; தந்தியைக் காத்தான் - யானையை ரட்சித்தான்; எங்கெங்கும்-எவ்விடத்தும்; வியாபகன் - பரந்திருப்பவன்; ஏ - அசை;

**கனக மலைக்கு நிகர்சோலை மாமலைக் கற்பகங்கோ**
**கனக மலைக்கும் பதத்தான் கடல்வளை காசினிக்குங்**
**கனக மலைக்கு மடியார்க்கு நாயகன் கருடப்புட்பா**
**கனக மலைக்குமெய் பாவமுந் தீர்த்தெனைக் காத்திடுமே 60**

கனக மலைக்கு நிகர் - மேரு மலைக்கு ஒப்பான; சோலை மாமலைக் கற்பகம்-திருமாலிருஞ் சோலை மலையில் கற்பகத் தரு; கோகனகம் - தாமரை மலர்; மலைக்கும் - பொருதும்; பதத்தான் - திருவடியினன்; கடல்வளை காசினிக்கும் - கடல் சூழ் புவிக்கும்; கன - பெருமைசேர்; கமலைக்கும் - திருமகளுக்கும்; அடியார்க்கும் - தாசர்களுக்கும்; நாயகன் - தலை

வன்; கருடப்புள் - கருடப் பறவை மீது; பாகன் - சவாரி செய்பவன்; அகம் அலைக்கும் - உள்ளத்தைத் தடுமாறச் செய்யும்; எப்பாவமும் - எவ்விதப் பாவங்களையும்; தீர்த்து - போக்கி; எனைக் காத்திடும் - என்னைப் புரக்கும்;

**காத்தவ ராய னிகர்வாரைப் பாடியென் காசினிக்கங்**
**காத்தவ ராயர் மனைவளர்ந் தார்கட மால்கரியை**
**காத்தவ ராய தண்காமலை யாரலங் காரர்திரு**
**காத்தவ ராயம் புயத்தானை நாளும் கருதுநெஞ்சே** 61

காத்தவராயன் நிகர்வாரை - காத்தவராயன் என்ற சிறு தெய்வம் ஒத்தவர்களை; பாடிஎன் - புகழ்பாடி என்ன பயன்; காசினிக்கு அங்காத்தவர் - மண்ணை உண்ண வாய் திறந்த தவர்; ஆயர்மனை வளர்ந்தார் - இடையர் வீட்டில் வளர்ந்த வர்; கடம் - மதமுள்ள; மால் கரியை - கருநிற யானையை; காத்தவராய - காப்பாற்றியவராகிய; தண்காமலையார் - குளிர்ந்த சோலையிற் பொருந்திய; அலங்காரர் - அழகர்; திருகாத் தவராய் - சலனமற்ற தவத்தினராக; அம் புயத் தானை - அழகிய தோளனை; நாளும் - எப்பொழுதும்; கருது நெஞ்சே - மனமே நினைக;

**கரும்பணி வாய்விடக் காலிது வாமெனக் காமன்எய்யுங்**
**கரும்பணி வாளி தடுத்தாளு வாயிக் கனியைமின்னி**
**கரும்பணி வார்நகிற் காரிகை யாள்நெடு காத்தலைநா**
**கரும்பணி வாசங்கமழ் சோலை மாமலைக் காவலனே** 62

நாகரும் பணி - தேவர்களும் வணங்கும்; வாசங்கமழ் - மணம் வீசும்; சோலை மாமலைக் காவலனே - சோலை மலைத் தலைவனே; கரும்பணி-கருநாகம்; வாய்விடக் காலிது வாம் - வாயிலிருந்து வரும் விஷக் காற்று இது என்னும்படி; காமன் எய்யும் - மன்மதன் ஏவும்; கரும்பு அணி வாளி - கரும்பு வில் அம்புகளை; தடுத்து ஆளுவாய் - தடுத்தருளுவாய்; இக்கனியை - இந்தக் கன்னிப் பெண்ணை; மின் நிகரும் - மின்னலை ஒத்த; பணி - ஆபரணங்களணிந்த; வார்நகில் - கச்சணிந்த முலை; காரிகையாள் - பெண்; நெடுகாத்தலை - நீண்ட நேரம் காத்திருத்தலை;

வலவா வியாபக மானாய் விசயன் மணிநெடுந்தேர்,
வல்வா வியாச முனியாய் மறைகள் வகுத்தருள்நா
வலவா வியாரும் புகழ்ந்தேத்துஞ் சோலை மலைக்கொருகா
வலவா வியாழ நிகர்மா மறலி வரும்பொழுதே 63

வியாபகமானாய் - எங்கும் நிறைந்தவனானாய்; விசயன் - அருச்சுனன்; மணிநெடுந்தேர் வலவா - அழகிய மணிகளுடைய பெருந் தேரின் சாரதியே; வியாச முனியாய் - வியாச மகரிஷியாக; மறைகள் வகுத்தருள் - வேதங்களை நான்காகப் பகுத்தருள்; நாவலவா - நாவன்மையுடையவா; யாரும் புகழ்ந் தேத்தும் - எவரும் புகழ்ந்து துதிக்கும்; சோலைமலைக்கு - திருமாலிருஞ்சோலை வெறபுக்கு; ஒரு - ஒப்பற்ற; காவலவா - தலைவா; வியாழ நிகர்-பாம்பினை ஒத்த (வியாளம்- பாம்பு. இங்கு 'ள' 'ழ'வாகியது); மாமறலி - கொடிய யமன்; வரும் பொழுதே - வருங்கால்; வலவா - நலமருள வா;

வருந்தானை யங்கி மகட்கீய்ந்த சோலை மலையர்முன்னாள்
வருந்தானை யஞ்சலென் றாண்டவர் பாரத வண்சமர்வாய்
வருந்தானை யங்கமண் ணாக்கின ரன்பர்க்கு வானுதவு
வருந்தானை யஞ்ச முகைத்தார் வணங்கி வழிவிடவே 64

வரும்தானை - மேலும் மேலும் வளர்ந்து வரும் புடவை; அங்கி மகட்கு - அக்னிபுத்திரி திரௌபதிக்கு; ஈய்ந்த- அருளிய; சோலைமலையர் - சோலை வெற்பர்; முன்நாள் - பண்டு; வருந்து ஆனை - துன்புறும் யானையை; அஞ்சல் என்று - பயப்படாதே என; ஆண்டவர் - அருளியவர்; பாரத வண்சமர்வாய் - பாரதப் பெரும்போரில்; வருந்தானை அங்கம் - எதிர்வரும் படைகளின் எண்ணிக்கையை; மண்ணாக்கினர் - மண்ணிற் மடியச் செய்த; அன்பர்க்கு - அவர்களுக்கு, வானுதவு - மோட்சமருளும்; 'அருந்தானை - அருமையானவனை; அஞ்சம் உகைத்தார் - அன்ன ஊர்தியார் பிரமன்; வணங்கி வழிவிடவே-பணிந்து வழிச் செல்ல இடம் தருமாறு;

வழியளி யார நுகர்ந்திறு மாந்து மயங்கியுட்செவ்
வழியளி யாயிரம் பாடுந்தென் சோலை மலையர்செலும்
வழியளி யாரணி வன்கள வாற்கொண்ட மங்கையர்கோன்
வழியளி யாரந்த மங்கைதன் தோள்நல மாந்துவரே 65

வழி - நிறைந்து வழியும்; அளி - தேனை; ஆர நுகர்ந்து - மிகவும் பருகி; இறுமாந்து - மிக மகிழ்ந்து; மயங்கி உள் - மனம் மயக்கமுற்று; செவ்வழி - செவ்வழி எனும் நெய்தல் நிலத்துப் பண்ணினை; அளி ஆயிரம் - பல வண்டுகள்; பாடும் - இசைக்கும்; தென்சோலை மலையர் - அழகிய சோலை வெற்பர்; செலும் வழி - செல்கின்ற பாதையில்; அளியார் - தானே தராதவர்; அணி - ஆபரணங்களை; வன்களவால் கொண்ட - வலிய திருட்டைக் கைக்கொண்ட; மங்கையர்கோன் - திரு மங்கை மன்னன்; வழி - நெறியில்; அளியார் - அன்பு கொண்ட; அந்த மங்கைதன் - அந்தப் பெண்ணின்; தோள் நலம் - புயத்தின்பம்; மாந்துவரே - பருகுவரே;

மானா கமலை விடைமா மலையுறை மாதவபொன்
மானா கமலை யொருவாளி கொண்டு வில்வாங்கியபூ
மானா கமலை யிடர்தீர்த்த மாயவ வாசமலர்
மானா கமலை யினியா னுறாது மலைந்தருளே 66

மாநாக மலை - பெரிய சேடகிரி; விடை மாமலை - இடபாசலம்; உறை - வீற்றிருக்கும்; மாதவ - மாதவப் பெயராய்; பொன்மான் ஆகம் - மாயமான் மாரீசன் மார்பில்; மலை - எதிர்ந்தழிக்கும் விதம்; ஒரு வாளி கொண்டு - ஓரம்பால்; வில் வாங்கிய - வில்லை வளைத்த; பூமான் - புருஷோத்தமன்; நாகமலை இடர் - யானையை அலைக்கும் துயர்; தீர்த்த - போக்கிய; மாயவ - கிருட்டின; வாசமலர் மானாக - மணங் கமழ் மலர்மகள் போல; மலை இனி யான் உறாது - துன்பம் இனியும் நான் அடையாமல்; மலைந்தருளே - அருள்கவே;

**மலையலங் கார நகில்வா ணகையிடை வஞ்சியொண்க**
**மலையலங் கார மணிமார்பன் சோலை மலைப்பெருமான்**
**மலையலங் காண வதைத்தா னிருக்களன் மாமனமே**
**மலையலங் காமன் பகையுதை ஏற்றவன் வன்பகைக்கே** 67

*மலை அலங்கு ஆர நகில் - தவழும் ஆரம் புனைந்த முலை; வாள் நகை - ஒளிசேர் பற்கள்; இடை வஞ்சி - கொடியனைய இடுப்பு (உடைய); ஒண் கமலை - ஒளிசேர் திரு; அலங்கார - அணிசெய்; மணிமார்பன் - அழகிய மார்பினன்; சோலைமலைப் பெருமான் - சோலை வெற்புத் தலைவன்; மலையலம் - எதிர்த்தோமில்லை; காண வதைத்தான் - காணுமாறு வதம் புரிந்தவன்; இருக்க - ஒருபால் இருக்க; என் மாமனமே-எனது நெஞ்சமே; மலையல் - மயங்காதே; அம்காமன் பகை - அழகிய மன்மதனின் பகைவனாம் சிவபிரான்தன்; உதை ஏற்றவன் - காலால் உதையுண்டவன்; வன்பகைக்கே - கொடிய விரோதச் செயலுக்கு;*

**கைப்போ தகத்தையந் தீக்கட லாக்கிய கார்மதிப்ப**
**கைப்போதகத்தை யரன்போற்றும் சோலைக் கனவரையான்**
**கைப்போதகத்தை யளித்தானைக் காதலி யாதுமயற்**
**கைப்போதகத்தைய லர்காமம் வேட்டென் கவலைநெஞ்சே** 68

*கைப்பு ஓது அகத்தை - வருந்தும் மனத்தை; அம்தீக்கடல் ஆக்கிய - அழகிய அக்கினிக் கடலாக்கிய; கார் - கருமேகம்; மதிப்பகைப் போது அகத்தை - சந்திரன் பகைவனாம் சூரியனால் மலரும் மலரை அகங்கொண்டவனை; அரன் போற்றும் - சிவன் துதிக்கும்; சோலைக் கனவரையான் - மேகம் தவழ் சோலை மலையவனை; கைப் போதகத்தை - துதிக்கையுடைய யானையை; அளித்தானை - இரட்சித்தவனை; காதலியாது - அன்பு செய்யாது; மயற்கைப் போதக - மயக்கந்தரும் இனிமைசேர்; தையலர் காமம் - பெண்கள்பால் வேட்கை; வேட்டு - விரும்பி; என் கவலை நெஞ்சே - ஏன் துன்புறுகின்றனை மனமே;*

**கவலையப் பாகந் துளைத்திட மாயமைக் கண்ணியர்மோ**
**கவலையப் பார்ந்து பொருளாசை வேண்டுங் கருத்தினனா**
**கவலையப் பார்த்துங் கருணைசெய் யாததென் கண்ணவுத்துங்**
**கவலையப் பார்புகழ் தென்சோலை மாமலைக் கற்பகமே 69**

*கவலை அப்பு - துன்பமெனும் அம்பு; ஆகம் துளைத்திட- மார்பில் செலுத்த; மாய - வஞ்சனை சேர்; மைக் கண்ணியர்- கருங் கண்களையுடைய மகளிர்; மோக வலை அப்பு ஆர்ந்து - ஆசை வலையாம் நீருள் மூழ்கி; பொருள் ஆசை வேண்டும் கருத்தினனாக - அழியும் செல்வம் விரும்பும் எண்ணமுடைய வனாக; (பொருள் - புதல்வன் எனக் கொண்டு மக்களைப் பெற வேண்டும் என்ற எண்ணத்தினனாக எனவும் கொள்க) அலைய - திரிதலை; பார்த்தும் - கண்டும்; கருணை செய்யா தது என் - தயயை புரியாதது என்ன காரணம்; கண்ண - கண்ணபிரானே; உத்துங்க - மகத்துவ; வலையப் பார் புகழ் - உருண்டையான பூமியினர் போற்றும்; தென் சோலை மாமலை - அழகிய திருமாலிருஞ்சோலை மலை; கற்பகமே - வேண்டியவற்றை எல்லாம் தரும் கற்பக மரம் ஒத்தவனே;*

**கற்பக மாதருக் காமலை மாலலங் காரனைவர்**
**கற்பக மாதவ மெய்தாது காத்தருள் கண்ணபிரான்**
**கற்பக மாதருக் காவார்த் தெதிர்த்தவர்க் கட்டவன்பேர்**
**கற்பக மாதவன் றன்பாற்கற் றான்கதி காட்டிடுமே 70**

*கற்பக மா தருக் கா மலை - கல்லைப் பிளந்து வேர்விட்டு வளரும் பெருமரங்கள் கூடிய சோலைமலை; மால் அலங் காரன் - அழகர் பெருமாள்; ஐவர் - பாண்டவர் ஐவர்பால்; கற்பக மாது - கற்புடைய திரௌபதி; அவம் எய்தாது - துன் பம் அடையாமல்; காத்தருள் - காப்பாற்றி அருளிய; கண்ண பிரான் - கிருஷ்ணன்; கற்பக மாதர்க்கு - வானுலக தேவ மகளிருக்காக; ஆர்த்து - ஆரவாரம் செய்து; எதிர்த்தவர் - போரிட்டு எதிர்த்தவர்களை; அட்டவன் - கொன்றவன்; பேர் - பெருமை வாய்ந்த; கற்பக மாதவன் தன்பால் - சௌனக முனிவனிடம்; கற்றான் - படித்தவன்; கதி காட் டிடும் - மோட்சம் அருளும்;*

காட்டி லமர வரம்பை யன்னாய்நலங் காணுநினைக்
காட்டி லமரயிற் கண்ணேமின் மாலலங் காரற்கன்பு
காட்டி லமர வணிந்தழ லேந்திக் கனன்றசுடு
காட்டி லமரரன் றானுமொவ் வான்நின் கழற்றுகட்கே 71

*காட்டில் - வனத்தில்; அமர அரம்பை அன்னாய் - தேவ லோக ரம்பை போன்றவளே; நலம் காணும் - நன்மை காட்டும்; நினைக்காட்டில் - நின்னைவிட; அமர் அயிற் கண்ணே - பெருமை வாய்ந்த வேற் கண்ணே; மின் - ஒளி செய்யும்; மால் அலங்காரற்கு - அழகர் பெருமாளுக்கு; அன்பு காட்டிலம் - பக்தி புரியவில்லை; அரவணிந்து-பாம்புகளைப் பூண்டு; அழல் ஏந்தி - தீயைக் கரத்துத் தாங்கி; கனன்ற - எரியும்; சுடுகாட்டில் - மயானத்தில்; அமர் - இருக்கும்; அரன் தானும் - சிவனும்; ஒவ்வான் நின் கழல் துகட்கே - உன் கால் தூசிக்கு ஒப்பாகான்;*

கழலாதி வன்கழங் காடாட்குச் சங்கங் கலைநெகிழ்ந்து
கழலா திவர்நலங் காணாதிருத்தல் கருதினிற்கி
கழலா திவணெவர்க்காகுங்கண் டாய்மண் கடந்தமலர்க்
கழலா திவளருட் கண்ணா தென் சோலைக் கருமணியே 72

*கழல் ஆதி - அம்மானை முதலிய; வன்கழங்கு ஆடாட்கு - பந்து விளையாடாதவளுக்கு; சங்கம் கலை - வளைகளும் ஆடையும்; நெகிழ்ந்து - நழுவி; கழலாது - விழாமல்; இவர் நலம் - விரும்பும் சுகம்; காணாது இருத்தல் - அடையாமலிருப்பது; கருதி - நினைந்து; நிற்கு இகழலாது - நினக்கு நிந்தனையன்றி; இவண் எவர்க்காகும் - இங்கு வேறு யாருக்கு ஆகும்; கண்டாய் - காண்க; மண கடந்த-உலகினை அளித்த; மலர்க்கழலாது - மலர்த் திருவடி அகலாது; இவள் அருள் கண்ணா - இவளை அருளும் கண்ணனே; தென் சோலை - அழகிய திருமாலிருஞ்சோலை; கருமணியே - கரிய மாணிக்கமே;*

கருத்தா வனந்தரு சொன்மோனை முற்றெது கையுடனுங்
கருத்தா வனந்தங் கவிபாடி யாவதென் கஞ்சமலர்
கருத்தா வனந்தங்குந் தென்சோலை மாமலைக் காவலனே
கருத்தா வனந்தல் தவிர்த்தாளு வீர்கலை கற்றவரே 73

கருத்தா வனம் தரும் - சொற்பொருள் அழகு தரும்; சொல்மோனை முற்றெதுகை உடனும் - சொல் மோனை முற்றெதுகையோடு; கருத்தா - நினைந்து; அனந்தம் கவி பாடி-பல வகைக் கவிதைகளை இசைத்து, ஆவது என்-ஆகக் யது என்ன; கஞ்சமலர் - தாமரை மலர்; கருத்தா - பிரமனின; அனம தங்கு - அன்னம் அமர்ந்திருக்கும்; தென் சோலை மாமலை - திருமாலிருஞ்சோலை வரை; காவலனே - தலைவனே; கருத்தா - மதிப்புற; அனந்தல் தவிர்தது - மயக கம் போக்கி; ஆளுவீர் - ஆண்டருள்வீர்; கலை கற்றவரே - சகல கலைகளையும் பயின்றவரே;

**கற்றவ ராகன்வெண் கைமலை யானயிற் கந்தனொடுங்**
**கற்றவராக வளைத்தான்புல் லைவர்க் கடந்திடுமிக்**
**கற்றவ ராகமக் கண்ணார் புகழலங் காரன்மெய்ய**
**கற்றவராகங் களையொழிப் பானன்பர் கட்குவந்தே** 74

ஆகன் - ஆகுவாகனன் (விநாயகன்); வெண்கை மலை யான் - வெள்ளை யானை உடைய இந்திரன்; அயிற்கந்த னொடும் - வேல்முருகனுடனும்; கற்றவர் - பழகியவா; கல் தவராக வளைத்தான் - மேரு மலையாம் வில்லை வளைத்த வன்; புல் - புன்மையான (அற்பமான); ஐவர்க் கடந்திடும - பஞ்சேந்திரியங்கட்கப்பாற்பட்டும்; இக்கற்றவர் - தடையற்ற வர்; ஆகமக் கண்ணார் - ஞானத்திடைப்பட்டவர்; புகழ் - போற்றும்; அலங்காரன் - அழகன்; மெய் அகற்று - உடலி லிருந்து நீங்கும்; அவராகம் - இச்சை இன்மை ஒழிப்பான் - போக்குவான்: அன்பர்கட்கு - பக்தர்களுக்கு; உவந்தே - மகிழ்ந்தே;

**வந்தருந் தாலம் புரைவா யரவுறழ் வஞ்சகக்க**
**வந்தருந் தாலத் தமுதுணு மாறுவிண் வைத்தவஞ்சி**
**வந்தருந் தாலம் புகழ்சோலை மாமலை மாயவனு**
**வந்தருந் தால முயர்த்தோ னனுசனென் மாட்டுறுமே** 75

வந்து அருந்து-காற்றை உண்ணும்; ஆலம்புரை-விடம் இழை யும் வாயுடைய; அரவு உறழ் - பாம்பை ஒத்த; வஞ்சகக் கவந் தரும்-துரோகச் சிந்தையுள்ள உடற்குறையினரும்; தாலத்து-

அங்கையில்; அமுது உணுமாறு-அமிர்தம் பருகுமாறு; விண் வைத்தவன் - வானுலகில் வைத்தவன்; சிவம் தரும் - மங்கல மளிக்கும்; தாலம் புகழ் - பூமி புகழும்; சோலை மாமலை மாயவன் - அழகிய சோலைமலைத் திருமால்; உவந்து - மகிழ்ந்து; அரும் தாலம் உயர்த்தோன் - அரிய பனங்கொடி யைத் தூக்கிப் பிடித்த பலராமனின்; அனுசன் - இளவல்; என் மாட்டுறும் - என்பால் வரும்; ஏ - அசை;

மாதவ னாக மலைக்குந்தென் சோலை மலைக்குமன்னு
மாதவ னாக மலைக்கும் வெந்நோய்கெட வந்தவன்பூ
மாதவ னாகமன் வானவர்க் கீசன் வயங்குபிர
மாதவ னாக மளித்தானவன்தரும் வான்பதமே 76

மாதவ - மிகப் பெரிய; நாகமலைக்கும் - சேஷாசலத்துக் கும்; தென்சோலை மலைக்கும் - திருமாலிருஞ்சோலைக்கும்; மன்னும் - விளங்கும்; மாதவன் - மாதவன் என்ற பெயரான்; ஆகம் - உடலை; அலைக்கும் - வருத்தும்; வெந்நோய் கெட - வெம்மையான தாபம் அழிய; வந்தவன் - வந்தருளியவன்- பூமாது - மலர்மகளை; அவன் ஆகம் மன் - தன் மார்பிற் கொண்டவன்; வானவர்க்கு ஈசன் - தேவர்களுக்கு இறைவன்; வயங்கு பிரமாத - உபாதையால் மெலியும்; வன்நாகம் அளித் தான் - வலிய யானையைக் காத்தான்; அவன் - அப்படிப் பட்டவன்; தரும் வான்பதமே - மேலான பதவியைத் தருவான்;

பதஞ்சலி யாமல் நடித்தா னரவ பணாமுடிமேல்
பதஞ்சலி யாதியர் போற்றுந்தென் சோலைப் பருப்பதன்வான்
பதஞ்சலி யாவடை யென்றொறுத் தான்துணைப் பாகனைக்கற்
பதஞ்சலி யாற்றுவ தன்றோ கடன்உண்மைப் பத்தருக்கே 77

பதம் சலியாமல் - திருவடி இளைப்புறாமல்; அரவ பணா முடிமேல் - காளிங்கன் படத்து முடிமீது; நடித்தான்-நிருத்தம் செய்தான்; பதஞ்சலியாதியர் - பதஞ்சலி முனிவர் முதலியவர் கள்; போற்றும் - புகழும்; தென் - அழகிய; சோலைப்பருப் பதன் - சோலைமலையான்; வான்பதம் - சுவர்க்கம்; சலியா- அசைவின்றி; அடை என்று-சேர்க என; ஒறுத்தான் - பாரதப்

*போரில் கடிந்த அருச்சுனன்; துணைப் பாகனை - சகாயனாம் சாரதியை; கற்பது - அறிவது; அஞ்சலி ஆற்றுவது அன்றோ - வந்தனை புரிதல் அலலவா; உண்மைப் பததருக்கே கடன்- மெய்யன்பர்கள் கடமையாகும்;*

**பத்தான வன்முடிப் பாதகன் மாளப் படுத்தியசா**
**பத்தான வன்முடி யாராம வெற்பர் புகர்புயக்கம்**
**பத்தான வன்முனி ரந்தான்மண் சேவடிப் பங்கயமேற்**
**பத்தான வன்முடித் தாரே யவ்வான்கதி பார்ப்பவரே** 78

*பத்தான வன்முடிப் பாதகன்-பத்து வலிய தலைகளை உடைய இராவணன்; மாள - இறக்க; படுத்திய - செய்த; சாபத்தான வன் - வில்லை உடையவன்; முடியாராம வெற்பர் - சிகரங களுடைய சோலைமலையார்; பகர் புயக்கம பத்தானவன் முன் - தூணெனப் பகரும் தோட்களுடைய அசுரன் மாவலி முன்பு; இரந்தான்மண் - மூவடி மண் யாசித்தவன்; சேவடிப் பங்கய மேல் - செவ்விய மலர்த் திருவடி மீது, பத்தான - பற்றுதலான; வன்முடித்தாரே - நன்கு முடிநத மலர்மாலை யானவரே; அவ்வான்கதி - அந்தப் பெருமைசால மோட்சத்தை; பார்ப்பவரே - கண்டவராவர்;*

**பாரத்து வாசனை யாதியர் போற்றும் பரம்பரனைப்**
**பாரத்து வாசனை யாராம வெற்பெம் பரமனையிப்**
**பாரத்து வாசனை யாற்றீர் பழவினைப் பற்றுவியா**
**பாரத்து வாசனை யாயாதென் வஞ்சகப் பாவலரே** 79

*பாரத்து வாசனை ஆதியர் - பாரத்துவாச முனிவர் முதலியவர்கள்; போற்றும் - துதிக்கும்; பரம்பரனை - எதற்கும் முன் தோன்றியவனை; பாரத்து-மிக்க (கனமான); வாசனை- மணங்கமழ்; ஆராம வெற்பு - சோலைமலை; பெம்பரமனை- உயர்ந்த தெய்வத்தை; இப்பாரத்து - இந்தப் பூமியில்; வாசனை ஆற்றீர் - நம்பிக்கை கொள்ளீர்; பழவினைப் பற்று- பண்டைய வினைகளின் பந்தமாம்; வியாபாரத்து - தொழிலின்; வாசனை - அறிவீனம்; ஆயாதென் - தேர்ந்துணராதது என்னே; வஞ்சகப் பாவலரே - நிந்தைக் கவிஞர்களே;*

வலவா தனந்தட நேராச்சியர்கண் மனங்கவர்கோ
வலவா தனந்தண் மலராடன் மார்ப மலைதருங்கே
வலவா தனந்த லறமாய்த்துன் சேவடி வாழ்த்தினனு
வல்வா தனந்தளியா மலர்ச் சோலை மலைமருந்தே 80

வலவா - வல்லவனே; தனம் தடம் நேர் - மலை ஒத்த முலைகளுடைய; ஆய்ச்சியர் - கோபியர் (இடைச்சியர்); கண மனம் கவர் - விழிகளையும் உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும்; கோவல - கோவிந்த; ஆதனம் - இருக்கை (பீடம்); தண்மலராள் - குளிர் தாமரையாளை (இலக்குமி); தன் மார்ப - தன் மார்பகத்துக் கொண்டவ; மலைதரும் - போரிடும்; கேவல வாது அனந்தல் - அற்ப வழக்கும் மதமும்; அறமாய்த்து - முற்றும் அழித்து, உன் சேவடி வாழ்த்தின் - நின செம்மையான சரணங்களைத் துதிக்கின்; அனுவலவா - நெருங்கிவருபவனே; தனம் தளியா - ஆஸ்திமிகு ஆலயத் தானே; மலர்ச் சோலைமலை - பூக்கள் நிறை திருமாலிருஞ் சோலை வரையின்; மருந்தே - அமிழ்தமே;

மருவனந் தாதணி யாதவன் மேலுறு மாமலைமேன்
மருவனந் தாதணி யாதவன் பாதிரு மார்பவொண்கா
மருவனந் தாதணி யாதவர் வாழ்த்துன் மலர்ப்பதத்த
மருவனந் தாதணி யாதவத தாதரம் வைத்தருளே 81

மருவனம் தாது அணி - மணமும் எழிலும் மகரந்தமும் அலங்கரிக்கும்; ஆதவன் மேல் உறு - சூரியனுக்கும் மேலுயர்ந் துள்ள; மாமலை மேல் - சோலை மலைமீது; மருவ - உறைய; நந்தா - கேடுறாத; தணியாத - குறைவுபடாத; அன்பா - நேயனே; திருமார்ப - இலக்குமிஉறையும் மார்பினை உடை யாய்; ஒண் காமரு வனம் - ஒள்ளிய விரும்பத்தக்க சோலை யில்; தாது அணி - பூவிதழ்கள் அணியும்; யாதவர் - இடை யர்கள்; வாழ்த்து - போற்றும்; உன் மலர்ப் பதத்து - உன் னுடைய பூங்கழலிணையில்; அமருவன் - இருப்பேன்; நந்தா - நந்தகோபன் மகனே; தணியாது அவத்து - பயனற்று வீழா மல்; ஆதரம் வைத்து - அன்புகொண்டு; அருளே - அருள்புரி;

**வையம் பயிலன வாள்விழி வாரிச மங்கையர்கோ**
**வையம் பயிலருட் கண்வளர்வானை மருத்தெரிபூ**
**வையம் பயிலங்கி வானையுண்டானைநன் மாமனத்தே**
**வையம் பயிலுமவனாமங் தென்மலை வாழ்த்திலமே** 82

*வையம்பு - கூரான பாணம்; அயில் அன - வேல் ஒத்த; வாள் விழி - ஒளிசேர் கண்களுடைய; வாரிச மங்கையர் கோவை - தாமரை மங்கை (இலக்குமி) தலைவனை; அம் - திருப்பாற் கடலில்; பயில் அருட் கண்வளர்வானை - அருளோடு அறிதுயில் புரிபவனை; மருத்தெரி பூவை - வாசனை வீசும் மண்ணை; அம்பு அயில் அங்கி வானை உண்டானை - நீரையும் வெம்மையான நெருப்பையும் வானையும் உண்டவனை; நன் மாமனத்தே - நல்ல உள்ளத் திருந்தே; வையம் - புவியில்; பயிலும் அவன் நாமம - அவன் திருப்பேரைக் கூறோம்; தென்மலை - திருமாலிருஞ்சோலை மலையை; வாழ்த்திலமே - துதிக்கவில்லை;*

**வாமத் தராமலர்க் கையாய்தென்சோலை மலையுறைதே**
**வாமத் தராமதி வார்சடை யானயன் வாழ்த்தருஞ்சீர்**
**வாமத்த ராம மரகதச் சோதி வடிவழகா**
**வாமத்த ராமடி யேம்பெரும் பாவம் வலியறவே** 83

*வாம - ஒளிசேர்; தராமலர் - தாமரை மலரனைய; கையாய் - கரத்த; தென் சோலைமலைஉறை தேவா-அழகிய சோலை மலையில் இருக்கும கடவுளே; மத்து - ஊமத்தம்பூ; அரா - பாம்பு; மதி - பிறைச் சந்திரன்; வார்சடையான் - நீண்ட சடையுள்ள சிவன்; அயன் - பிரமன்; வாழ்த்தருஞ் சீர் வாமத்த - போற்றற்கரிய சிறப்புடைய செல்வ; ராம - ஸ்ரீராம; மரகதச் சோதி - பச்சைக் கல் ஒளியுள்ள; வடிவழகா - எழில் திருமேனியனே; மத்தராம் - பித்தராம்; அடியேம்-தாசர்களாம் எமது; பெரும்பாவம்-வலிய தீவினைகள்; வலியறவே - வன்மை அற்றுப் போக: வா - வந்தருள்;*

**வலியாத வாதிரு மாலிருஞ்சோலை மலையமன்மா**
**வலியாத வாவென மண்ணிரந் தாய்முன மற்றிவளா**
**வலியாத வாளி மலரால் விலக்கிமுன் வந்துமுறு**
**வலியாத வாம லுரைப்பாய் ஒருமொழி வாசகமே** 84

வலி யாதவா - வலிமை கொண்ட ஆயனே; திருமாலிருஞ் சோலை மலைய - சோலை மலையவனே; மன் மாவலி - வேந்தனாம் மாவலி; யாது அவாவென - விரும்பியது எது எனக் கேட்க; மண்ணிரந்தோய் முனம் - பண்டு மூவடி மண் யாசித்தவ; மற்று - அசை; இவள் - தலைவி; வாளி மலரால் - மலர்க் கணையால்; ஆவலியாது - புலம்பாது; விலக்கி - மாற்றி; முன்வந்து - எதிர்வந்து; முறுவலியா - புன்னகை புரிந்து; தவாமல் - வழுவாமல்; உரைப்பாய் ஒரு மொழி வாசகமே - ஒப்பற்ற நின் உரையால் ஒரு வார்த்தை கூறுக;

**சகமா கமன மெவரிடத் தாகுந் தனிமறைவா**
**சகமா கமமனு நூல்யார் முதலெனுந் தாவியகீ**
**சகமாக மன்னுந்தென் மாமலை யாய்எனல் சத்தியம்வஞ்**
**சகமாக மந்திரந் தானோதுஞ் சைவத் தவசிகளே** 85

சகம் - உலகம்; ஆகமனம் எவரிடத்தாகும் - யாரிடம் போய்ச் சேர்ந்துறையும்; தனி - ஒப்பற்ற; மறை வாசகம் - வேத வாக்கியங்கள்; ஆகம மனுநூல் - ஆகமம் மனு முதலிய தரும நூல்கள்; யார் முதல் எனும் - எவரை மூலப் பொருள் என்று கூறும்; தாவிய கீசகம் - தாவும் செயலுள்ள குரங்குகள்; மாக மன்னும் - வானில் விளங்கும்; தென் மாமலையாய் எனல் - சோலைமலை இறைவனே என்பது; சத்தியம் - உண்மை; வஞ்சகமாக - கபடமாக; மந்திரந்தான் ஓதும் - வேதம் ஓதும்; சைவத் தவசிகளே - சிவனைப் போற்றும் தவ முனிவர்களே;

**வசிக்கும் பதந்த மதமா மருப்பன்ன வாண்முலையூர்**
**வசிக்கும் பதந்தரு மற்றிவ ளாசுர மாயவத்த**
**வசிக்கும் பதந்தர வல்லா யழகு மலையகங்கை**
**வசிக்கும் பதந்தனை நட்டானம் மாலையும் மாற்றுவனே** 86

வசி - கூர்மையான; கும்ப தந்த மதமா மருப்பன்ன - குடம் போன்ற தந்தமுடைய மத வேழத்தின் கொம்பனைய; வாள்முலை - ஒளிசேர் தனமுடைய; ஊர்வசிக்கும் - ஊர்வசி என்ற தேவ நிருத்திய மகட்கும்; பதந்தரும் - பக்குவம் அருளும்; மற்றிவள் - பிறகு இப்பெண், ஆசுரம் - அசுரக் குணம்; மாய - ஒழிய;

அத்தவசிக்கும் - மிகப் பெரிய தவமுனிக்கும்; பதம் தரவல்லாய் - நற்பதமருள வல்ல; அழகுமலைய - தென் மலையவ; கங்கை வசிக்கும் பதந்தனை - கங்கை உறையும் திருவடிகளை; நட்டான் - விரும்பியவன்; அம்மாலையும்- அந்த மயக்கத்தையும்; மாற்றுவன் - இவன் நீக்குவான்;

**மானத் தனமலை யன்னத்தின் மென்னடை மாமகள்கோன்**
**மானத் தனமலை மாயோன் கவியொடு மன்னியவி**
**மானத் தனமலை வென்றா னழகன்வண் கந்தரச**
**மானத் தனமலைப் பெல்லா மொழித்து வலந்தருமே** 87

மானத் தனம்மலை - முலைகள் மலையை ஒப்ப; அன்னத்தின் மென்னடை - அன்னப் பறவை போன்ற மென்மையான நடையும் உடைய; மாமகள் கோன் - திருமகள் தலைவன்; மானத்தன - பெரிய பாஞ்ச ஜன்னியம் என்ற சங்கு உடைய; அமலை மாயோன் - இலக்குமிக்குரிய கிருஷ்ணன்; கவியொடு- குரங்குகளுடன்; மன்னிய-விளங்கிய; விமானத்தன - விமானம் போன்ற; மலைவென்றான் - மலைபோன்ற இராவணனை வென்றவன்; அழகன் - சுந்தரராஜன்; வண் - வலிய; கந்தரச மானத்தன - வான் ஒதத சுவை மணம்; மலைப்பெல்லாம - மயக்கம் எல்லாம்; ஒழிதது - அகற்றி; வலந்தரும - நன்மை யருளும்;

**தருமா தரம்பொன் முலைநல மாந்திநந் தாதவலநீ**
**தருமா தரத்துடன் வாழ்தலிற் சோலைத் தடமுறையுந்**
**தருமா தரங்க சயனாமுன் கோகுலந் தன்னிடைபோ**
**தருமா தரம்புவிக் கன்னாவென் றேத்துதல் சாலநன்றே** 88

தரும் மாதர் - ஆசை அளிக்கும்; அம்பொன் - அழகிய பொன் போன்ற; முலைநலம் மாந்தி - தன இன்பமனுபவித்து; நந்தாத - குறைவற்ற; வலம் தரும் - வெற்றி அளிக்கும்; ஆதரத்துடன் - நேயமுடன்; வாழ்தலில் - வாழ்வதினிலும்; சோலைத் தடம் உறையும் - சோலை மலையில் உறங்கும்; தருமா - அறவோனே; தரங்க சயனா - அலைகடலிற் பள்ளிகொண்டவா; முன் - பண்டு; கோகுலந்தன்னிடை - ஆயர்பாடியிடையே; ஆதரம் - அன்பு; போதரு - அளித்

தருளிய; புவி - உலகில்; கன்னா - கர்ணன்; என்றேத்துதல் - என்று துதிப்பது; சால - மிகவும்; நன்றே - நல்லதே;

**சாலப் படிவந் தனைமானு மங்கையர் தாம்பகர்வா**
**சாலப்படிவந் தனைபுரிந் தேத்தல் தகாதெனவி**
**சாலப் படிவந் தனையெனும் சோலைத் தயிலரைநீ**
**சாலப் படிவந் தனையடு மாற்றினிச் சஞ்சலமே** 89

சால - மிகுதியாக; படிவ தனை மானும் - சித்திரம் போன்ற உருவினை ஒத்த; மங்கையர் - மகளிர்; தாம் பகர் - தாங்கள் கூறும்; வாசலப்படி - வாக்குவன்மைக்கேற்ப; வந்தனை புரிந்து - வணக்கம செய்து; ஏத்தல் - துதித்தல்; தகாதென - தக்கதன்று என்று; விசாலப்படி வந்தனை - அகன்று பரந்த உலகில் தோன்றினை; எனும் - என்னுமாறு; சோலைத் தயிலரை - சோலைமலையழகரை; நீசாலப்படி - பெருமையுற நீ வணங்கு; வந்து அனையடு-தொழுவதை மேற்கொள்ளு; மாற்று இனிச் சஞ்சலமே - இனிமேல் அச்சத்தை ஒழி;

**சலமருந் தம்புத மன்னாய் கடவுட் டகையுறுநிர்ச்**
**சலமருந் தன்னவெந் தாரகமே வளசார் பொழிலஞ்**
**சலமருந் தண்குயில் போலுறை வாய்தினம் தாழ்ந்துனவா**
**சலமருந் தஞ்சமடைந் தேனை யாளத் தகுந்தகுமே** 90

சலமரும் அம்புதம் அன்னாய் - குளிர்ச்சி பொருந்திய கார்மேகம் போன்றவ; கடவுட்டகையுறு - தெய்வக் குணமுள்ள; நிர்ச்சல - சலனமற்ற; மருந்தன்ன - அமுதனைய; எம் தாரகமே - எங்கள் கண்மணியே; வளஞ்சார் பொழில் அசல- வளப்பம் மிக்க சோலைமலையில்; அருந்தண் குயில்போலுறைவாய் - அரிய குளிர்மையான கோகிலம்போல இருப்பவ; தினம் தாழ்ந்து - நாள்தோறும் பணிந்து; உனவாசல் அமரும் - உன் கோயில் வாசலில் இருந்து; தஞ்சமடைந்தேனை-சரணாகதி அடைந்த என்னை; ஆளத் தகும் தகுமே- ஆண்டருளல் மிகத் தக்கதாகும்;

**குந்தனத் தாடக மாமணி யாரங் குலவியவை**
**குந்தனத் தாடகை வீயவிற் கோட்டிய கோனுயர்மு**
**குந்தனத் தாடருங் கையா னழகனிக் கோமளமி**
**குந்தனத் தாட னிலையறிந் தால்வந்து கூடுவனே** 91

*குந்தனத்து - மணிகள் இழைத்த; ஆடக - பொன்னா லாய; மாமணி ஆரம் - பேரழகுள்ள மாலைகள்; குலவிய - விளங்கிய; வைகுந்தன் - பரமபதத்தன்; அத்தாடகை-அந்தத் தாடகையாமரக்கி; வீய - இறக்க; விற்கோட்டிய - வில் வளைத்த; கோன் - தலைவன் இராமன்; உயர்முகுந்தன் - மேன்மையான முகுந்தப் பெயரான்; நத்து ஆடு - சங்கு விளங் கும்; அருங்கையான் - அரிய கரத்தான்; அழகன் - சுந்தரன்; இக் கோமளம் மிகுந்தனத்தாள் - இந்த இளமை மிகுங் கொங்கையாளின்; நிலையறிந்தால் - தன்மை உணர்ந்தால்; வந்து கூடுவன் - வந்து அணைவான்; ஏ - அசை;*

**கூடத் தருக்கடல் வாரணம் காத்தவர் குன்றமகட்**
**கூடத் தருக்கம் புயத்தோர்க்கு மிந்திரற் கும்மெவர்க்குங்**
**கூடத் தருக்கமர் கோலப் பிரான்முழுக் கோன்தெரிந்துங்**
**கூடத் தருக்கம் புரிவதென் னோநர குட்படவே** 92

*கூடத் தருக்கு அடல் - மிக்க மதத்துடன் போரிட்ட, வாரணம் காத்தவர்-கசேந்திரனைக் காப்பாற்றியவர்; குன்ற மகட்கு ஊடு-மலைமகள் பார்வதிபால் ஊடல்புரி; அத்தர்க்கு- தலைவர் சிவனுக்கு; அம்புயத்தோர்க்கும் - மலரவன் பிரம னுக்கும்; இந்திரர்க்கும் - இந்திரனுக்கும்; எவர்க்கும் - மற் றெவர்க்கும்; கூட - மிகுதியாக; தருக்கமர் - மேன்மையுள்ள; கோலப் பிரான் - சுந்தரராஜன்; முழுக்கோன் - முழுமையான தலைவன்; தெரிந்தும்கூட - இஃதறிந்திருந்தும்; நரகுட்பட - நரகில் உட்படுமாறு; தருக்கம் புரிவதென்னோ - வழக்கு (வாதம்) செய்வதேனோ;*

**படனாக மானகம் பத்தான் வலிமை படருமெம**
**படனாக மாநில மெல்லாம் பகரும் பவவுருக்க**
**படனாக மாய வொருவாளி ஏவும் பரமன்முக**
**படனாக மாண்ட வன்தன்விடு சோலைப் பருப்பதமே** 93

நாக மான கம்பத்தான் - மலை போன்ற பத்துத் தலையன் இராவணன்; பட - இறந்துபட; வலிமை படரும் - சக்தி மிகுந்த; எமபடனாக - யம தூதன் என; மாநிலம் எல்லாம் - உலகெலாம்; பகரும் - கூறும்; பவ உரு - தெய்வ வடிவ; கபட நாடகமாய் - வேடதாரி நாடகம் போல; ஒரு வாளி ஏவும் பரமன் - ஒப்பற்ற கணை செலுத்திய பரம்பொருள்; முகபட நாகம் - நெற்றிப் பட்டம் அணிந்த யானையை; ஆண்டவன் தன் - ஆட்கொண்டருளியவனுடைய; வீடு - இருப்பிடம்; சோலைப் பருப்பதமே - சோலை மலையே;

பருந்தின மாகஞ் சுழலயிற் கஞ்சன் பகைப்புலவன்
பருந்தின மாகய மட்டான் அழகன் பதத்துறுமன்
பருந்தின மாசென் றுணராத வாவிப் பரிகுவரும்
பருந்தின மாகத் தரம்பையர் போக பவத்தினையே 94

பருந்து இனம் - கழுகுக் கூட்டங்கள்; மாகஞ்சுழல் - வானிற் சுழன்று வட்டமிடும்; அயிற் கஞ்சன் - வேலை உடைய கம்சனின்; பகைப்புல வன்பு அருந்தின - விரோதிகளிடத்தில் வலிமை சான்ற; மாகயம்-பெரிய யானை (குவலயாபீடத்தை) அட்டான் - கொன்றான்; அழகன் - சுந்தரன்; பதத்து உறும் - திருவடிகளைச் சாரும்; அன்பரும் - பக்தரும்; தினம்-நாளும்; மாசென்று உணராது - தூய்மையற்றதென அறியாது; அவாவிப் பருகுவர் - ஆசையுடனன்பு கொள்வர்; உம்பரும் - வானோரும்; தினம் மாகத் தரம்பையர் - நாளும் தேவ மகளிர்; போக - சுக; பவத்தினையே - மேன்மையையே;

பலபத் திரமலர்ப் பூஞ்சோலைப் பாற்கரன் பாலுறுமெய்ப்
பலபத் திரனுக் கிளையோன் பதத்திற் பளகில்சிற்றம்
பலபத் திரனென மாறதை வன்பொடு பற்றியசு
பலபத் திரசமில் லாதவர் பாதகப் பாமரரே 95

பலபத்திர மலர்ப் பூஞ்சோலை - கனி, தழை, பூக்கள் நிறைந்த சோலையில்; பாற்கரன் - ஒளி வீசும் அழகன்; மெய் - உண்மை; பலபத்திரனுக்கு இளையோன் - பலராமன் தம்பியின்; பதத்தில் - திருவடிகளில்; பளகில் - குற்றமற்ற; சிற்றம்பல பத்திரன் - தில்லைஇறைவன்; என-என்று;

மாறாத அன்பொடு - நீங்காத பக்தியுடன்; பற்றிய - பொருந்திய; சுபல பத்தி ரசம் இல்லாதவர் - நற்பயன் தரும் அன்பின் சாற்றைச் சுவைக்காதவர்கள்; பாதகப் பாமரரே - அறிவற்ற வஞ்சகராவர்;

**மரப்பாவை யாக்க மடைந்தது போன்ம்வரி வண்டினங்கா**
**மரப்பாவை யார்க்கும் மலையழ காவன வாரிசத்தா**
**மரப்பாவை யாழி வளையாய் அரக்கரை மாய்த்திடுகா**
**மரப்பாவை யாவுன் திருச்சேவை யெற்குமுன் வாய்த்ததுவே 96**

மரப்பாவை - மரத்தாலாய பொம்மை; ஆக்கம் அடைந்தது போன்ம் - எழுச்சி கொண்டது போலும்; வரிவண்டினம் - புள்ளிகளை உடைய வண்டுகளின் கூட்டம்; காமரப் பாவை - காமரப் பண் இசையை; ஆர்க்கும் - ஒலிக்கும்; மலை அழகா - சோலை மலை அழகனே; வாரிசத்தாம் - தாமரை மலரில் உள்ள; அரப்பாவை - தெய்வ மகள் இலக்குமி; ஆழி - சக்கரம்; வளையாய் - சங்கு தரித்தவ; அரக்கரை மாய்ந்திடு - அரக்கர்களை அழித்திடும்; காமர் - விரும்பத் தக்க; அப்பா - தந்தையே; (ஐயா தலைவனே) உன் திருச்சேவை - உன் திவ்ய தரிசனம்; எற்குமுன் - எளியேன் முன்னர்; வாய்த்தது - ij; ஏ - அசை;

**ததியன்ன மண்டர் மனைவா யருந்துந் தலைவனருந்**
**ததியன்ன மன்ன மகட்காடை தந்த தயாளன்மகோ**
**ததியன்ன மன்னைத் தருமலங் காரன் தளர்தருமித்**
**ததியன்ன மன்கை யிடத்தடை யாதெனைத் தாங்குவையே 97**

ததியன்னம் - தயிர்ச்சாதம்; அண்டர்மனைவாய் - ஆயர் வீடுகளில்; அருந்துந் தலைவன் - உண்ணும் ஐயன்; அருந்ததியன்னமன்ன - கற்பிற் சிறந்த அருந்ததியும் அன்னமும் போன்ற; மகட்கு - திரௌபதிக்கு; ஆடை தந்த தயாளன் - கௌரவர்கள் சபையில் துகிலுரியும்போது மானம் காக்க வஸ்திரங்கள் அளித்த கருணையாளன்; மகோததியன்ன - கடலனைய; மன்னை - தொண்டினை; தரும் - அளிக்கும்; அலங்காரன் - அழகன்; தளர்தரும்-மெலிவுறும்; இத்ததியன்-

இவ்வதிகப் பிரசங்கி; நமன் கையிடத்து - யமனிடம்; அடையாது - சாராமல்; எனை - எளியேனை; தாங்குவையே - காத்தருள்வாயே;

தாத்திரி யம்பனன் மாருதம் வானத் தரைமகிழ்தோ
தாத்திரி யம்பரந் தாமரைச் சோலைத் தருவினைநந்
தாத்திரி யம்பகற் கெட்டானை யேத்தல் தவிர்ந்துபழு
தாத்திரி யம்பர த்தாரத்தை யேயுளத் தாதரித்தே 98

தாத்திரி - மண்; அம்பு - நீர்; அனல் - தீ; மாருதம் - வாயு; வான் - ஆகாயம்; அத்தரைமகிழ் - அப்பூமி இன்புறும்; தோதாத்திரி - வானமாமலையில்; அம்பரந்தாமரை - அழகிய வைகுந்தவாசனை; சோலைத் தருவினை - சோலைமலைக் கற்பகத்தை; நந்தாத்து - நடனத்து; திரிஅம்பகற்கு - முக்கண்ணனுக்கு; எட்டானை - அடைய முடியாதவனை; ஏத்தல் தவிர்ந்து - துதித்து வணங்கலைக் கைவிட்டு; பழுதாத்திரி - பயனற்று அலையும்; அம்பரதாரத்தையே - அழகிய பிறன் மனையாட்டியரையே; உளத்தாதரித்தே - மனத்திலன்பு கொண்டே கெட்டழிவாய்;

தரியா வலக்க ணுலகுற மன்னுறாத் தாங்கியவ
தரியா வலங்கைத் தனுவா லரக்கன் தலைகள்மண்டோ
தரியா வலங்கொள வட்டான் கமலந் தனிலுறைசுந்
தரியா வலகந் தருஞ்சோலை மாமலைத் தாயகனே 99

தரியா அலக்கண் - தாங்கவியலாத துன்பம்; உலகுற - மக்கள் அடைய; மன்னுருத் தாங்கி - க்ஷத்திரிய வடிவந் தாங்கி (மனித வடிவு கொண்டு); அவதரியா - அவதாரம் செய்து; வலங் கைத்தனுவால் - வலிமையுள்ள கைவில்லால்; அரக்கன் தலைகள் - இராவணன் சிரங்கள்; மண்டோதரி - இராவணன் மனைவி வண்டோதரி; ஆவலங் கொள - வாய் விட்டலற; அட்டான் - வீழ்த்தினான்; கமலந்தனில் உறை - தாமரை மலரில் வீற்றிருக்கும்; சுந்தரி - இலக்குமிக்கு; ஆவல் - விருப்பம் (இன்பம்); அகம்தரும் - உள்ளத்தளிக்கும்; சோலை மாமலைத் தாயகனே - திருமாலிருஞ்சோலை வள்ளலே;

தாயத் தவரை நிகரைவர் தங்களைத் தாக்குசமு
தாயத் தவரை யருளழ காவெகு சாத்திரவி
தாயத் தவரைத் தனிக்குடையாய்நலந் தங்கியவெந்
தாயத் தவரைக் கணநினை யார்சென்மந் தானவமே 100

*தாயத்தவரை - பங்காளிகளை; நிகர் - ஒத்த; ஐவர் தங்களை - பஞ்ச பாண்டவர்களை; தாக்கு - எதிர்த்துப் போரிட்ட; சமுதாயத்தவரை - கூட்டத்தினரையும்; அருள் - சொர்க்கம் அளித்தருள்; அழகா - சுந்தர; வெகுசாத்திர விதாயத்த - பல சாத்திரங்களின் முடிவானவ; வரை தனிக் குடையாய் - கோவர்த்தன கிரியை ஒப்பற்ற குடையாகக் கொண்டவ; நலம் தங்கிய எந்தாய் - நன்மையே தரிக்கும் எம் தந்தையே; அத்த - தலைவ; அரைக் கணம் - அரை நொடிப் பொழுதேனும்; நினையார் - சிந்திக்காதவர்; சென்மந்தான் - பிறவிதான்; அவமே - வீணாகுமே;*

தானவ னாகம் வகிர்ந்தான் கரவிற் றளர்தருமுத்
தானவ னாக மளித்தான்வெண் டுத்தித் தடந்தலைவி
தானவ னாகத் தமர்ந்தான் அழகன் தமர்கள்தமைத்
தானவ னாக நினைப்பா மெனிவின்பந் தான்வருமே 101

*தானவன் - இரணியனாமசுரன்; ஆகம் - மார்பு; வகிர்ந்தான் - பிளந்தவன்; கரவிற் தளர்தரும் உத்தானவன் நாகம் அளித்தான் - முதலையால் மெலிவுற்று யுத்தம் செய்த யானையைக் காத்தான்; வெண் துத்தித் தடந்தலை விதானவன் நாகத்து அமர்ந்தான் - வெண் புள்ளிகளுடைய அகன்ற படமுடைய விரிந்த வலிய ஆதிசேடன் மீது இருந்தான்; அழகன் - அழகர் பெருமாள்; தமர்கள் தமை - தம்மவர்களை; தான் அவனாக - தானே அவன் என; நினைப்பாம் எனில் - கருதுவோமானால்; இன்பந்தான் வருமே - மகிழ்வு தானே வந்தடையும்;*

வருங்கவி வான்குரு வாழ்த்துவ ரிந்திரன் மற்றுளதே
வருங்கவி வார்வந்து முத்தியும் சித்தியும் மன்னுறுநால்
வருங்கவி வாணர் புகழ்ந்தேதநும் மரத்திடைநி
வருங்கவி வாவு மலையா னடியை மதித்தவர்க்கே 102

நால்வரும் கவிவாணர் - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நான்கு வகையாக வரும் கவிஞர் பெருமக்கள்; புகழ்ந்து - சிறப்பித்துப் போற்றும்; மரத்திடை - பொழிலின் மரங்களில்; நிவரும் - உயரத்தேறும்; கவி - வானரங்கள்; வாவும் - தாவும்; மலையானடியை-சோலைமலைச் சுந்தரன் திருவடிகளை; மதித்தவர்க்கே - நினைந்து போற்றியவர்களுக்கே; கவிவரும் - கவிதை புனையும் ஆற்றல் வரும்; வான்குரு - பிரகஸ்பதி; வாழ்த்துவர் - ஆசீர்வாதம் கூறுவர்; இந்திரன் மற்றுள தேவரும் - இந்திரன் முதலாய தேவதைகளும்; வந்து கவிவார் - முன்வந்து தலைவணங்குவார்; முத்தியும் - பிறப்பின்மையும்; சித்தியும் - மோட்சமும்; மன்னுறும் - கைகூடும்;

## வாழ்த்து

பூமாதும் வெண்மலர்ப் பொன்னிற மேவம் புயமுறையும்
நாமாதும் நன்மை நவில்மா ருதியுநன் னீளையெனும்
தூமாதும் நங்க ளடியாரும் வண்ணத் துடியிடைப்பொன்
மாமாதுஞ் சோலை மலையலங் காரனும் வாழியவே. 103

பூமாதும் - பூமி தேவியும்; வெண்மலர்ப் பொன்னிறம் மேவ - வெண்மையான மலராம் அழகிய பொன்னிறமுள்ள; அம்புயம் உறையும் - வெண் தாமரையில் இருக்கும்; நாமாதும் - சரஸ்வதியும்; நன்மை நவில் - நல்லவையே கூறும்; மாருதியும் - அனுமனும்; நல்நீளை எனும் - நல்ல நீளாதேவி எனும்; தூமாதும் - பரிசுத்த மங்கையும்; நங்கள் அடியாரும் - எங்கள் தாசர்களும்; வண்ண - அழகிய; துடியிடை - துடி போன்ற மெல்லிய இடை கொண்ட; பொன்மாதும் - இலக்குமி தேவியும்; சோலைமலை - திருமாலிருஞ்சோலைமலை; அலங்காரனும் - அழகர் பெருமானும்; வாழிய - வாழ்க. ஏ - அசை.

மதுரகவி திருமாலிருஞ்சோலை யமக அந்தாதி முற்றும்.

12-12-1912

# THE ALAGARKOIL TEMPLE

## NEAR MADURAI

The temple of Narayana, who is known as "Alagar swami" (the beautiful God) stands at the southern end of the hill known as Alagarmalai. Round about the temple in bygone days, was a considerable fortified town and the remains of the palace of Tirumalai Nayak which still stand to show that it was a favourite place of residence of the rulers of Madurai.

The spot is most picturesque. Running out southwards from the foot of the hill and surrounding not only the temple but also the ruins of the old town and palace. there is a high rectangular fort wall measuring 650 metres by 360 metres, faced with stone and crowned with dark red bricks.

The temple stands near the Kallar Mantapam, and surrounded by a high wall over the main (eastern) entrance through which rises a gopuram, A flight of 18 steps runs down from the foot of which is a wooden gate which is sacred to Karuppannaswami. He is known as Karuppan of the the 18 steps. The gate and steps are held in high esteem by the "Kallar" community in the adjoining villages. Lord Karuppannaswami has many presents extended to Him by the devotees, Cradles presented by women who have been blessed with off springs are also among the presents. It is believed that a person who swears to falsehoods and passes through Karuppan's gate with the lie on his lips will soon come to a miserable end.

On the hill, above the temple to the north and about five Kilometres away is a clear and cool natural stream called **Nupura Ganga** which flows over a little waterfall into a reservoir surrounded by a vasanta mantapam and then down the mountain side to the temple. No other water is stated to be used for the Abisekam of the God and during

the annual festival in April-May when the Lord is taken to Madural, this water is brought daily from the hills,

Lord Alagar is held in great veneration by the Kallar (Thevar) community, so much so He is called Kallar-Azhagar. The Kallars have the right to drag His car at the festival,when the Lord goes on his visit to Madurai dressed as a Kallar with long ear-lobes and carrying weapons were once the favourite weapons of Kallars.

Alagar is the brother of Goddess Meenakshi, He comes of Her wedding, but arrives too late and the marriage is over. The Lord therefore returns home angry without enteri-ng the Madurai town. Before King Tirumalai Nayak's time, the festival took place at different dates, the former in the month of Chitrai and the latter in Masi. The king combined the two for the conveniences of the pilgrims of others.

It is evident from records that Nammazhwar, Peri-yazwar, Kothai Nachiyar had praised the Lord in their works while the holy waters, location of the shrine and the Lord are mentioned in Varaha Puranam, Brahma Puranam, Vamana Puranam and Anjaneyar Puranam. In Silapathi-haram. mention has been made about the abode and the Nupura Ganga in the shrine. Later in Sangam literature, the Paari Padal hails ranges of the mountains here as the incarnation of the Lord and the mountain itself is Vene-tated. The spot has another important feature. where Kothai Nabhiyar married the Lord. The temple is believed to be on par with Tirumala-Tirupati and one among 108 pilgrim centres as narrated by at least half a dozen Azh-wars while the Pendiya and Nayak Kings visited the temple often and contributed a lot of Money for its growth.

The temple at Alagarkoil is one of the 108 HERITAGE sacred spots sanctified by Azwars hymns which are called "Divya Desams". Unlike other temples, tha Vimanam here is circular and known as Somachanda Vimanam · The Lord here carries the sacred disc on the right hand as "Prayoga Chakra" which is ready to hit at evildoers, It is believed

that some 'tantriks from Kerala sent 18 persons to carry away the idol of Alagar as they were enchanted by His beauty, But Karuppan-the Kaval Deivam -( the deity that guards the temple)killed all the 18 and buried them under the steps at the main entrance and stood over them.

The temple has got links with the life of Andal, Andal's foster father - Periyazhwar-who took her to Sriran gam to celebrate the marriage with 'Lord Ranganatha, they visited the temple at Alagarkoil on their way. Sri Andal was so enchanted by the Lord's beauty that she hailed Him as "Sundaratholudayan" or Sundara Bahu and refused to leave Alagarkoil. She was later persuaded by her father to leave rhe place. Hence the "Utsava,, idol of Andal is in a sitting posture here, Sri Ramanuja who visited the temple fulfilled the wish of Andal by offering 100 pots of "Akka-aavadisal,' and in commemoration of this "Akkaravadisal,' festival is celebrated in the temple even today. After this, when Ramanuja went to Srivilliputtur, Andal said to have hailed him as her elder brother. Hence Ramanuja is also known as "Koil Annan".

—Kind Courtesy of THE HINDU



# கள்ளழகர்மீது பாடிய
# கன்னித் தமிழ்ப் பாடல்கள்

வித்துவான்

**ப. ரெ. திருமலை அய்யங்கார்**

*சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற்*
*சோலை யொடு தொடர்மொழி மாலிருங் குன்றம்*

—பரிபாடல்

''வெற்பென்று இருஞ்சோலை வேங்கடம்'' என்று எம் பெருமான் உகந்தருளிய மலைகள் இரண்டு. அவற்றுள் வடக்கில் உள்ள மலை, தெழிகுரலருவித் திருவேங்கடம். தெற்கில் உள்ள மலை, திருமாலிருஞ் சோலைமலை. இவ் விரண்டு கிரிகளும் பூமிப்பிராட்டியின் இரு தனங்களாக வருணிக்கப்பெறும், ''பூழியர் கோன் தென்னாடு முத் துடைத்து'' என்ற முதியார் மொழியின்படி முத்து வளத்தை மிகுதியாக உடையதும், ''தமிழ் முதல் பிறக்கும் நாடு'' என்ற படி செந்தமிழ்நாடு என்று சிறப்புற்றதுமான தென்பாண்டி நன்னாட்டுத் திருமால் திருப்பதிகள் மூவாறில் ஒன்று இத் திருமாலிருஞ்சோலை. பூதத்தார், பேயார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், கலியன் என்கிற ஆறு ஆழ்வார் களால் மங்களாசாசனம் பண்ணிய திவ்ய தேசம். இது மதுரைக்கு வடகிழக்கே பனிரெண்டு மைலில் உள்ளது. ''அழகன் அலங்காரன்மலை, குலமலை, கோலமலை, குளிர் மாமலை, கொற்றமலை, நிலமலை, நீண்டமலை திருமாலிருஞ் சோலையதே'. என்று கொண்டாடின ஊர் அவ்வூர். அத் திருமலை, திருமால் குன்றம், இருங்குன்றம், திருமாலிருஞ் சோலைமலை, திருவரை, அழகர் திருமலை, வனகிரி, வ்ருஷப கிரி என்று பண்டையோரால் வழங்கப்பெற்றுள்ளது. சோலை களையும், மலைகளையும் உடையதாய், இருப்பிடம் வைகுந் தம் வேங்கடம் மாலிருஞ்சோலையென்னும், பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர்'' என்று ஆன்றோர் கொண் டாடிய மகிமையுடையது அம்மாமலை வேங்கடத்திலும் மாலிருஞ்சோலையிலும் உள்ள எம்பெருமான் நீர்மையைச் சொல்லப்புக்குஆரியர்கள் இழந்தமலேச்ச பூமியிலுள்ளார்க்கு முகம் கொடுக்கும் நீர்மையிறே அங்கு. ''கானமும் வானரமும

வேடுவர்க்கு முகம் கொடுக்கும் நீர்மையிறே இங்கு'' என்றும் ம்லேச்சராஜ்யத்திலேயும் முகம்மாறாது ரக்ஷிக்கும்படியான குணபூர்த்தி திருமாலிருஞ்சோலையிலே என்று நம் பூருவா சாரியர்கள் புகல்வார்கள். சங்கநூல் தமிழ்ப் புலவர்களும் பிறரும் கொண்டாடின ஊர் அவ்வூர். ''சுகமும் பிகமும் மறை ஓதும் சோலைமலை அலங்காரர்'' என்றும், ''மாலிருஞ் சோலைமலைச் சிலம்பாற்று எனையாட்டி வாரும் சொன் னேன் எந்த நோயும் எனக்கில்லையே'' என்றும், கலம்பகத் தாரும் பிள்ளைப்பெருமாளையங்காரும் உருகிப் பாடினார் கள்.

நம்மாழ்வார் திருப்பாற்கடலும் திருமாலிருஞ்சோலை யும் தன்தலையென்றும், ஸ்ரீவைகுண்டமும் திருவேங்கடமும் தனது உடல் என்றும், திருவேங்கடத்தைவிடத் திருமாலிருஞ் சோலையையே சிலாக்கியமாகக் கொண்டாடுகிறார்.

''த்யாஜ்ய தேஹ வ்யாமோஹம் மருள்கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்'' தேஹாபிமானிகளை அவர்கள் மயக்கந்தீர கடாக்ஷித்து வஞ்சக் கள்ளவனாய் வந்து தோஷம் பாராமல் அவர்கள் ''நெஞ்சும் உயிரும் உள்கலந்து'' அஞ் ஞாநத்தை ஸவாஸநமாகப் போக்கி ரக்ஷிக்கும் எம்பெருமான் திருமாலிருஞ் சோலை. அழகர் என்று அருளாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்வர்.

''கள்ளழகர்'' என்பது கள்ளர்நாட்டுத் திருப்பதியாகிய சோலைமலையில் கோயில் கொண்டுள்ள அழகர் என்று தூல மாய் விவரிக்கப் பெறும், இங்கு விளங்கும் பரஞ்சுடரே அழகன் ஆவன். மன்னவர் காணவொண்ணா அழகன் வைகுந்தன் என்பான். விண்ணவரே காணக் கிடைக்கும் அழகு வைகுந்தனாகும். மண்ணவர்ஏறி விண்ணவர் இறங்கி இருவரும் கலந்து காணப்பெறும் அழகன் வேங்கடக்கோன், வைகுந்தன் அழகே வேங்கடவனாய் இரட்டித்தபடி அவ்வழகு பின்னும் இரட்டித்தே கள்ளழகன் ஆயிற்று. விண்ணுளா ரிலும் மண்ணுளாரைச் சீரியராக்கும் கட்டழகனே சோலை மலைக்கள்ளழகனாம். இவனது அழகு ஒன்றே கள்ளும் அழகு. கள்ளர்க்குத் தலைவனாயும், கள்ளர் தொழும் கடவுளாயும், கள்ளர் உள்ளம்கவர்ந்துகளிப்பவனாயும் விளங்கும்இவனுக்கே 'அழகன்' என்ற திருநாமம் ஆயிற்று. அழகுறக் கள்கின்ற வனாயும், கள்கின்ற அழகனாயும், கள்ளர்க்கு அழகனாயும்

கதியாயும் பதியாயும் திகழும் இவனது அழகே அழகாகும், இவ்வழகே செந்தமிழ் நாட்டின் தனியழகு. வேங்கடத்தை நம்மாழ்வார் ''திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடம்'' என்றார். மாலிருஞ்சோலையை ''தென்கொள் திசைக்குத் திலதமாய் நின்ற திருமாலிருஞ்சோலை'' என்றும், ''என்னை முற்றும் தானேயாய் நின்ற மாய அம்மான் சேர் தென்னன் திருமாலிருஞ்சோலை'' என்றும் சிறப்பித்து ஈடுபட்டுள்ளதே இதற்குத் தக்க சான்றாகும். இவன் வடிவழகு மறவாதாரே பிறவாதார் ஆவர்.

கள்ளழகர் விஷயமான சான்றோர் பாசுரங்கள் அனைத்தையும் சேர்த்து இங்குக் காண்போம்,

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

---

# திருமாலிருஞ்சோலைமலை, ஆழ்வார் பாசுரங்கள்

## பெரியாழ்வார்

திருமொழி

உன்னையும் ஒக்கலையில் கொண்டு தமில்மருவி
    உன்னொடு தங்கள்கருத் தாயின செய்துவரும்
கன்னிய ரும்மகிழக் கண்டவர் கண்குளிரக்
    கற்றவர் தெற்றிவரப் பெற்ற எனக்குஅருளி
மன்னு குறுங்குடியாய்! வெள்ளறையாய்! மதிள்சூழ்
    சோலை மலைக்கரசே! கண்ணபுரத் தமுதே!
என்னவ லம்களைவாய்! ஆடுகசெங் கீரை
    ஏழுல குமுடையாய்! ஆடுக ஆடுகவே! (1-5-8)

**மூன்றாம் பத்து, நான்காம் திருமொழி**

சுற்றிநின்று ஆயர் தழைகளிடச்
    சுருள்பங்கி நேத்திரத் தால்அணிந்து
பற்றிநின்று ஆயர் கடைத்தலையே
    பாடவும் ஆடக்கண் டேன்அன்றிப்பின்

மற்றொரு வர்க்குளன்னைப் பேசவொட்டேன்
மாலிருஞ் சோலைஎம் மாயற்கல்லால்
கொற்றவ னுக்குஇவ ளாமென் றெண்ணிக்
கொடுமின்கள் கொடீராகில் கோழம்பமே. (3-4-5)

நான்காம் பத்து, இரண்டாந் திருமொழி

அலம்பா வெருட்டாக் கொன்று திரியும் அரக்கரை
குலம்பாழ் படுத்துக் குலவிளக் காய்நின்ற கோன்மலை
சிலம்பார்க்க வந்து தெய்வ மகளிர்க ளாடும்சீர்
சிலம்பாறு பாயும் தென்திரு மாலிருஞ் சோலையே. (1)

தக்கார் மிக்கார்களைச் சஞ்சலம் செய்யும் சலவரை
தெக்கா நெறியே போக்குவிக்கும் செல்வன் பொன்மலை
எக்கால மும்செனறு சேவித் திருக்கும் அடியரை
அக்கா னெறியை மாற்றும்தண் மாலிருஞ் சோலையே (2)

ஆயனார் கூடி அழைத்த விழவை அமரர்தம்
கோனார்க் கொழியக் கோவர்த் தனத்துச்செய் தான்மலை
வானாட் டில்நின்று மாமலர்க் கற்பகத் தொத்திழி
தேனாறு பாயும் தென்திரு மாலிருஞ் சோலையே. (3)

ஒருவா ரணம்பணி கொண்டவன் பொய்கையில் கஞ்சன்தன்
ஒருவா ரணம்உயி ருண்டவன் சென்றுறை யும்மலை
கருவா ரணம்தன் பிடிதுறந் தோடக் கடல்வண்ணன்
திருவாணை கூறத் திரியும்தண் மாலிருஞ் சோலையே. (4)

ஏவிற்றுச் செய்வான்ஏன் றெதிர்ந்து வந்த மல்லரை
சாவத் தகர்த்த சாந்தணி தோள் சதுரன்மலை
ஆவத் தனமென்று அமரர்க ளும்நன் முனிவரும்
சேவித் திருக்கும் தென்திரு மாலிருஞ் சோலையே. (5)

மன்னர் மறுக மைத்துனன் மார்க்குஒரு தேரின்மேல்
முன்னங்கு நின்று மோழை யெழுவித் தவன்மலை
கொன்னவில் கூர்வேற் கோன்நெடு மாறன்தென் கூடற்கோன்
தென்னன்கொண் டாடும் தென்திரு மாலிருஞ் சோலையே(6)

குறுகாத மன்னரைக் கூடு கலக்கிவெங் கானிடைச்
சிறுகால் நெறியே போக்குவிக்கும் செல்வன் பொன்மலை
அறுகால் வரிவண்டுகள் ஆயிர நாமம் சொல்லி
சிறுகாலைப் பாடும் தென்திரு மாலிருஞ் சோலையே. (7)

# ஆண்டாள்

## நாச்சியார் திருமொழி· ஒன்பதாந் திருமொழி

சிந்துரச் செம்பொடிப் போல் திருமா லிருஞ்சோலை
யெங்கும்
இந்திர கோபங்களே எழுந்தும் பரந் திட்டனவால்
மந்தரம் நாட்டி அன்று மதுரக் கொழுஞ் சாறுகொண்ட
சுந்தரத் தோளுடை யான் சுழலையில் நின்று
உய்துங்கொலோ? (1)

போர்க் களிறு பொரும் மாலிருஞ் சோலையம் பூம்புறவில்
தார்க் கொடி முல்லைகளும் தவள நகை காட்டுகின்றத்
கார்க் கொள் பிடாக்கள் நின்று கழறிச் சிரிக்கத் தரியேன்
ஆர்க்கு இடுகோ? தோழீ! அவன் தார்செய்த பூசலையே. (2)

கருவிளை யொண்மலர் காள்! காயா மலர்காள்! திருமால்
உருவொளி காட்டுகின்றீர் எனக்கு உய்வழக் கொன்று
உரையீர்
திருவிளை யாடு திண்தோள் திருமா லிருஞ்சோலை நம்பி
வரிவளை யில்புகுந்து வந்தி பற்றும் வழக் குளதே. (3)

பைம் பொழில் வாழ்குயில்காள்! மயீல்காள்! ஒண்
கருவிளைகாள்!
வம்பக் களங்கனிகாள்! வண்ணப் பூவை நறுமலர்காள்!
ஐம்பெரும் பாதகர்காள்! அணிமா லிருஞ்சோலை நின்ற
எம்பெரு மானுடைய நிறம் உங்களுக்கு என்செய்வதே! (4)

துங்க மலர்ப் பொழில்சூழ் திருமா லிருஞ்சோலை நின்ற
செங்கண் கருமுகிலின் திருவுருப் போல் மலர் மேல்
தொங்கிய வண்டினங்காள்! தொகுபூஞ் சுனை காள்!
சுனையில்
தங்குசெந் தாமரை காள்! எனக்குஓர் சரண் சாற்றுமினே. (5)

நாறு நறும்பொழில் மாலிருஞ் சோலை நம்பிக்கு நான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன்
நூறு தடா நிறைந்த அக்கார வடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்று வந்து இவை
கொள்ளுங் கொலோ? (6)

இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப் பெறில்நான்
ஒன்றுநூ றாயிரமாக் கொடுத துப்பின்னும ஆளும் செய்வன்
தென்றல் மணங் கமழும் திருமா லிருஞ்சோலை தன்னுள்
நின்ற பிரான் அடியேன் மனத்தே வந்து நேர்படிலே. (7)

காலை யெழுந் திருந்து கரிய குருவிக் கணங்கள்
மாலின் வரவு சொல்லி மருள் பாடுதல் மெய்ம்மைகொலோ?
சோலை மலைப் பெருமான் துவராபதி யெம்பெரு மான்
ஆலி னிலைப்பெரு மான் அவன் வார்த்தை
யுரைக்கின்றதே. (8)

கோங்க லரும்பொழில் மாலிருஞ் சோலையில்
கொன்றைகள் மேல்
தூங்கு பொன் மாலைக ளோடுஉட னாய்நின்று
தூங்குகின்றேன்
பூங் கொள் திருமுகத்து மடுத் தூதிய சங்கொலியும்
சார்ங்க வில் நாணொலியும் தலைப்பெய்வது எஞ்ஞான்று
கொலோ? (9)

சந்தொடு காரகிலும சுமந்து தடங்கள் பொருது
வந்திழி யும்சிலம் பாறுடை மாலிருஞ் சோலை நின்ற
சுந்தர னைச்சுரும் பார் சுழல் கோதை தொகுத்துரைத்த
செந்தமிழ் பத்தும் வல்லார் திருமா லடி சேர்வர்களே. (10)

## திருமங்கையாழ்வார்

---

### பெரிய திருமொழி

---

### இரண்டாம் பத்து, ஏழாந் திருமொழி

உளங்கனிந் திருக்கும் உன்னையே பிதற்றும்
உனக்கன்றி எனக்கு அன்பொன் றிலளால்
வளங்கனி பொழில்சூழ் மாலிருஞ் சோலை
மாயனே! என்றுவாய் வெருவும்
களங்கனி முறுவல் காரிகை பெரிது
கவலையோடு அவலம் சேர்ந் திருந்த
இளங்கனி யிவளுக்கு என்நினைந் திருந்தாய்?
இடவெந்தை எந்தை பிரானே!

ஏழாம் பத்து, மூன்றாந் திருமொழி

எட்டனைப் பொழு தாகிலும் என்றும்
என்மனத் தகலா திருக்கும்புகழ்
தட்டலர்த்த பொன்னேயலர் கோங்கின்
தாழ்பொழில் திருமா லிருஞ் சோலையங்
கட்டியை கரும்பீன்ற இன் சாற்றைக்
காதலால் மறை நான்கும் முன்னோதிய
பட்டனை பரவைத் துயிலேற்றை என்
பண்பனை யன்றிப் பாடல்செய் யேனே.

ஒன்பதாந் திருமொழி

சேயோங்கு தண்திரு மாலிருஞ் சோலை மலைஉறையும்
மாயா! எனக்குரையாய் இது மறைநான்கி னுளாயோ?
தீயோம் புகை மறையோர்சிறு புலியூர்ச் சலசயனத்
தாயோ?உன தடியார்மனத் தாயோ? அறியேனே.

ஒன்பதாம் பத்து, இரண்டாந் திருமொழி

மஞ்சுயர் மாமதி தீண்ட நீண்ட
மாலிருஞ் சோலை மணாளர்வந்துஎன்
நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நின்று நீங்கார்
நீர்மலை யார்கொல்? நினைக்கமாட்டேன்
மஞ்சுயர் பொன்மலை மேலெ ழுந்த
மாமுகில் போன்றுளர் வந்துகாணீர்
அஞ்சிறைப் புள்ளுமொன்று ஏறி வந்தார்
அச்சோ ஒருவ ரழகியவா !

## நம்மாழ்வார்

---

### திருவாய்மொழி

---

இரண்டாம் பத்து, பத்தாந் திருவாய்மொழி

கிளரொளி யிளமை கெடுவதன் முன்னம்
வளரொளி மாயோன் மருவிய கோயில்
வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ் சோலை
தளர்வில ராகில் சார்வது சதிரே. (1)

சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியாது
அதிர்குரல் சங்கத்து அழகர்தம கோயில்
மதிதவழ் குடுமி மாலிருஞ் சோலை
பதியது ஏத்தி எழுவது பயனே. (2)

பயனல்ல செய்து பயனில்லை நெஞ்சே!
புயல்மழை வண்ணர் புரிந்துறை கோயில்
மயல்மிகு பொழில்சூழ் மாலிருஞ் சோலை
அயல்மலை யடைவது அதுக ருமமே. (3)

கருமவன் பாசம் கழித்துழன் றுய்யவே
பெருமலை யெடுத்தான் பீடுறை கோயில்
வருமழை தவழும் மாலிருஞ் சோலை
திருமலை யதுவே அடைவது திறமே. (4)

திறமுடை வலத்தால் தீவினை பெருக்காது
அறமுய லாழிப் படையவன் கோயில்
மறுவில்வண் சுனைசூழ் மாலிருஞ் சோலை
புறமலை சாரப் போவது கிறியே. (5)

கிறியென நினைமின் கீழ்மைசெய் யாதே
உறியமர் வெண்ணெய் உண்டவன் கோயில்
மறியொடு பிணைசேர் மாலிருஞ் சோலை
நெறிபட அதுவே நினைவது நலமே. (6)

நலமென நினைமின் நரகழுந் தாதே
நிலமுன மிடந்தான் நீடுறை கோயில்
மலமறு மதிசேர் மாலிருஞ் சோலை
வலமுறை யெய்தி மருவுதல் வலமே. (7)

வலஞ்செய்து வைகல் வலங்கழி யாதே
வலஞ்செய்யும் ஆய மாயவன் கோயில்
வலஞ்செய்யும் வானோர் மாலிருஞ் சோலை
வலஞ்செய்து நாளும் மருவுதல் வழக்கே. (8)

வழக்கென நினைமின் வல்வினை மூழ்காது
அழக்கொடி யட்டான் அமர்பெருங் கோயில்
மழக்களிற் றினஞ்சேர் மாலிருஞ் சோலை
தொழக்கரு துவதே துணிவது சூதே. (9)

சூதென்று களவும் சூதும்செய் யாதே
வேதமுன் விரித்தான் விரும்பிய கோயில்
மாதுறு மயில்சேர் மாலிருஞ் சோலை
போதவிழ் மலையே புகுவது பொருளே, (1[illegible]

பொருளென்றுஇவ் வுலகம் படைத்தவன் புகழ்மேல்
மருளில்வண் குருகூர் வண்சட கோபன்
தெருள்கொள்ளச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்து
அருளுடை யவன்தாள் அணைவிக்கும் முடித்தே. (1[illegible])

## பூதத்தாழ்வார்

---

### இயற்பா—இரண்டாந்திருவந்தாதி

---

உணர்ந்தாய் மறைநான்கும் ஓதினாய் நீதி
மணந்தாய் மலர்மகள்தோள் மாலே—மணந்தாய்போய்
வேயிருஞ் சாரல் வியலிரு ஞாலம்சூழ்
மாயிருஞ் சோலை மலை.

வெற்பென் றிருஞ்சோலை வேங்கடமென் றிவ்விரண்டும்
நிற்பென்று நீமதிக்கும் நீர்மைபோல்—நிற்பென்று
உளங்கோயில் உள்ளம்வைத் துள்ளினேன் வெள்ளத்
திளங்கோயில் கைவிடே லென்று.

## பேயாழ்வார்

### இயற்பா—மூன்றாந் திருவந்தாதி

---

பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்குக் கோயில்போல்—வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை
இளங்குமரன் தன்விண் ணகர்.

## சிலப்பதிகாரம்

---

திருமால் குன்றத்துச் செல்குவீ ராயிற்
பெருமால் கெடுக்கும் பிலமுண் டாங்கு
விண்ணோ ரேத்தும் வியத்தகு மரபிற்

புண்ணிய சரவணம் பவகா ரணியோ
டிட்ட சித்தி யெனும்பெயர் போகிய
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுள வாங்குப்
புண்ணிய சரவணம் பொருந்துவீ ராயின்
விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர்
பவகா ரணிபடிந் தாடுவீ ராயிற்
பவகா ரணத்திற் பழம்பிறப் பெய்துவீர்
இட்ட சித்தி யெய்துவீ ராயின்
இட்ட சித்தி யெய்துவீர் நீரே
ஆங்குப் பிலம்புக வேண்டுதி ராயின்
ஓங்குயர் மலையத் துயர்ந்தோ றொழுது
சிந்தையி லவன்றன் சேவடி வைத்து
வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தால்
நிலம்பக வீழ்ந்த சிலம்பாற் றகன்றலைப்
பொலங் கொடி மின்னிற் புயலைங் கூந்தற்
கடிமல ரவிழ்ந்த கன்னிகா ரத்துத்
தொடிவளைத் தோளி யொருத்தி தோன்றி
யிம்மைக் கின்பமு மறுமைக் கின்பமும்
இம்மையு மறுமையு மிரண்டு மின்றியோர்
செம்மையி னிற்பதுஞ் செப்புமி னீயிரில்
வரைத்தாள் வாழ்வேன் வரோத்தமை யென்பேன்
உரைத்தார்க் குரியே னுரைத்தீ ராயின்
திருத்தக் கீர்க்குத் திறந்தேன் கதவெனும்
கதவந் திறந்தவள் காட்டிமி நன்னெறிப்
புதவம் பலவுள போகிடை கழியன
வொட்டுப் புதவமொன் றுண்டத னும்பர்
வட்டிகைப் பூங்கொடி வந்து தோன்றி
இறுதியி லின்ப மெனக்கீங் குரைத்தாற்
பெறுதிர் போலுநீர் பேணிய பொருளெனும்
உரையீ ராயினு முணுகண் செய்யேன்
நெடுவழிப் புறந்து நீக்குவ னும்மேனும்
உரைத்தா ருளரெளி னுரைத்த மூன்றின்

கரைப்படுத் தாங்குக் காட்டினள் பெயரும்
அருமறை மருங்கி னைந்தினு மெட்டினும்
வருமுறை யெழுத்தின் மந்திர மிரண்டும்
ஒருமுறை யாக வுளங்கொண் டோதி
வேண்டிய தொன்றின் விரும்பி னீராடிற்
காண்டகு மரபின் வல்ல மற்றவை
மற்றவை நினையாது மலைமிசை நின்றோன்
பொற்றா மரைத் தாளுள்ளம் பொருந்துமின்
உள்ளம் பொருந்துவீ ராயின் மற்றவன்
புள்ளணி நீள்கொடிப் புணர்நிலை தோன்றுந்
தோன்றிய பின்னவன் றுணைமலர்த் தாளிணை
யேன்று துயர்கெடுக்கு மின்ப மெய்தி
மாண்புடை மரபின் மதுரைக் கேகுமின்.



இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்
சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக் கென்பர் நல்லோர்
அவைதம்மொடும்வந்து
இருப்பிடம் மாயன் இராமானுசன் மனத்து
இன்றுஅவன்வந்து
இருப்பிடம் என்த னிதயத் துள்ளேதனக் கின்புறவே.

—இராமானுச நூற்றந்தாதி

பணிந்தேன் றிருமாலைப் பாமாலை தாளி
லணிந்தே னருட்டஞ்ச மாகத்—துணிந்தேன்
றிருமா லிருஞ்சோலை சேர்ந்தே னெனக்கு
வருமா லிருஞ்சோதி வான்.

—நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி

அந்தணர்க்கோ நல்லருந் தவர்க்கோ வன்றியோகியராய்
வந்தவர்க் கோமழ வாதியர்க்கோ மகரக்குழைசேர்
சுந்தரத தோளனுக் கோவவன் றொண்டர்கட்
கோசுடர்தோய்
கந்தனச் சோலைக் குருகைப் பிரான்வந்து சந்தித்ததே.

—சடகோபரந்தாதி

# பரிபாடல்

## பதினைந்தாம் பாடல்

### திருமால்

புலவரை யறியாப் புகழொடு பொலிந்து
நிலவரை தாங்கிய நிலைமையிற் பெயராத்
தொலையா நேமிமுத றொல்லிசை யமையும்
புலவராய் புரைத்த புனைநெடுங் குன்றம்
பலவெனி னாங்கவை பலவே பலவினும்
நிலவரை யாற்றி நிரைபய னொருங்குடன்
நின்றுபெற நிகழுங் குன்றவை சிலவே
சிலவினுஞ் சிறந்தன தெய்வம் பெட்புறும்
மலரகன் மார்பின் மைபடி குடுமிய
குலவரை சிலவே குலவரை சிலவினும்
சிறந்தது, கல்லறை கடலுங் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம். வேறுவேறுரு வொருதொழி லிருவர்த்
தாங்கு நீணிலை யோங்கிருங் குன்றம்
நாறிணர்த் துழாயோ னல்கி னல்லதை
ஏறுத லெளிதோ வீறுபெறு துறக்கம்
அரிதிற் பெறுதுறக்க மாலிருங் குன்றம்
அராவணர் கயந்தலைத் தம்முன் மார்பின்
மராமலர்த் தாரின் வாண்வரத் தோன்றி
அலங்கு மருவி யார்த்திமிழ் பிழியச்
சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற்
சோலையொடு தொடர்மொழி மாலிருங் குன்றம்
தாம்வீழ் காமம் வித்துபு விளைக்கும்
நாமத் தன்மை நன்கனம் படியெழ
யாமத் தன்மை யிவ்வையிருங் குன்றத்து
மான்புன லிளவெயில் வளாவவிருள் வளர்வெனப்
பொன்புனை யுடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே.

